# மேற்கு நாடுகளின் எதிர் காலம்



எழுதியவர்

டாக்டர் ஜே. ஜி. டிபஸ்

மொழி பெயர்த்தவர்

கே. எம். ரங்கசாமி





ஜோதி நிலையம்

திருவல்லிக்கேணி :: சென்னை-5.

ஜோதி மலர் 84
முதற் பதிப்பு, 1956.


விலை ரூபாய் இரண்டு

THE FUTURE OF THE WEST

*By*
Dr. J. G. DE BEUS



*Translated in to Tamil by*
K. M. RANGASWAMY

*Published by*
JOTHI NILAYAM
Madras-5.

ஜீவன் பிரஸ், சென்னை-5—(416)

# முன்னுரை

இந்தப் புஸ்தகத்திற்கு மூல ஆசிரியர் 'மேற்கின் எதிர் காலம்' என்ற பெயரிட்டிருப்பதைவிட 'உலகின் எதிர்காலம்' என்று பெயரிட்டிருந்தாலும் அது பொருத்தமாகவே இருந் திருக்கும். மேற்கு நாடுகளின் அரசியல், விஞ்ஞான சமூக வளர்ச்சி உலகின் நாடுகள் யாவற்றையும் பாதித்து அவை களில் இணைந்துவிட்டது. விஞ்ஞானத்திஞல் உலகம் மிக நெருங்கிவிட்டது. உலகின் மறு கோடியை கற்பனையால் மட்டும் கண்ட மனிதன் இன்று உலகத்தை எட்டு தினங்களில் சுற்றி வந்து விடுகிருன். விஞ்ஞானம் பிறந்தது மேற்கே. அதை அடிப்படையாகக் கொண்டே அதன் நாகரீகம் அரசியல் பொருளாதாரம், சமூக அறிவு யாவும் வளர்ந்துள்ளது. உன் னதமான நிலையில் உள்ள அந்த மேற்கு நாகரீகம் வீழ்ச்சி யடையுமாஞல் அதஞல் உலகின் இதர நாகரீகங்கள் யாவும் பாதிக்கப்படும் என்பது நிச்சயம். ஆகவே மேற்கு நாடுகளின் விஞ்ஞான நாகரீக வளர்ச்சியை அளந்து அதன் கோணத்திலிருந்து ஆராய்ந்து அதன் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதை இந்நூலாசிரியர் பாரபக்ஷமின்றி விவரிக் கிருர்.

இன்றைய விஞ்ஞான உலகம் எவ்வாறு இருக்கும் என் பதை நூறு அல்லது ஐம்பது வருஷங்களுக்குமுன் ஒருவரிடம் கூறிஞல் நம்பமாட்டார்கள். ஆஞல் இன்று அது பிரத்யக்ஷம் விஞ்ஞானம் வளர்ந்துவிட்டது. மனிதனுக்கு இன்றியமை யாததாகவும் ஆகிவிட்டது. அதேசமயம் அவனது வாழ்க் கைக்கு முடிவுகட்டும் ஒரு பயங்கரமாகவும் காட்சியளிக்கிறது. மனிதன் சிருஷ்டித்த விஞ்ஞான பூதம் அவனுக்கு ஏவல் செய்யுமா அல்லது அவனே அழித்து விடுமா என்பதே இன்று ஒவ்வொருவர் மனத்திலும் எழும் கேள்வி. அந்தக் கேள்விக்கு பதிலளிக்க முயற்சிப்பதே இந்த நூலின் நோக்கம்.

நாகரீகம் முதிர்ந்து விட்டது. ஆகவே அது அழிந்து தான் மீண்டும் தோன்றவேண்டும் என்ற பிரளயசிந்தாந்தத்தை இதன் ஆசிரியர் ஒப்புக்கொள்ளவில்லை. இந்த நாகரீகம் மனிதன் சிருஷ்டித்தது.அரசியல் ஆதிக்கவெறிக்கு ஆளாகாமல் நாம் நடந்து கொண்டால் இந்த நாகரீகத்தை அழியாமல் காப்பாற்றிக் கொள்ள முடியும். அணுகுண்டையும் ஜலவாயு குண்டையும் விஞ்ஞானம் நமக்குத் தந்தது. ஆனால் இதை அழிவுக்குத்தான் பயன்படுத்த வேண்டும் என்ற அவசியமில்லை. முதல் உலக யுத்தத்தைவிட இரண்டாவது உலக யுத்தம் பயங்கரமானதாக இருந்தது. மூன்றாவது உலக யுத்தம் ஒன்று வருமானால் உலகத்திற்கு அழிவைத் தேடித்தர அது ஒன்றே போதும். மனித வர்க்கத்தின் பெரும் பகுதியையும், தலைமுறை தலைமுறையாகப் போற்றி வளர்த்த நாகரீகத்தையும் அது படுநாசம் செய்துவிடும் என்பதே அறிஞர்களின் அபிப்பிராயம். ஆகவே புத்தியுள்ள எவனும் யுத்தத்தை விரும்பமாட்டான். ஆயினும் அரசியல் ஆதிக்க வெறி யுத்தத்தை நோக்கிச் செல்லுமானால் அதற்கு என்ன செய்வது ? அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. ஆதிக்க வெறியினின்றும் நாடுகள் விடுபடவேண்டும். விஞ்ஞானத்தினால் நெருங்கிய உறவைப் பெற்ற மக்கள் அதை அறுத்துக் கொள்ளாமல் சிக்கல்களை சுமுகமாக தங்களுக்குள் தீர்த்துக் கொண்டு வாழவேண்டும். அப்படித் தீர்த்துக்கொள்ளாவிட்டால் யார்யாருடைய நிலை எப்படி இருக்கும் என்பதை இந்நூலாசிரியர் ஆராய்ச்சி பூர்வமாக விளக்கியுள்ளார்.

நாகரீகங்கள் வளர்ந்தவிதம் அவைகளின் சரித்திர பூர்வமான நிலை. விஞ்ஞானத்தால் பெருகியுள்ள உற்பத்தி ஆகியவைபற்றியும் ஆசிரியர் விரிவாக விளக்கியுள்ளார். உலகின் ஜனத்தொகையில் ஏழு சத விகிதமுள்ள அமெரிக்கா உலக நாடுகளின் தேவையில் நாற்பது சதவிகிதத்தை உற்பத்தி செய்கிறது. பலகாரண காரிய ரீதியால் அமெரிக்கா உலக விவகாரகங்ளில் தலையிடும்படி ஆகிவிட்டது என்று கூறிய ஆசிரியர், அமெரிக்கா எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதையும் கூறுமல் விடவில்லை.

அதுமட்டுமல்ல, ஆஸ்வால்டு ஸ்பெங்லர் கூறிய நாகரீகத்தின் முதிர்ந்த யுகம் இப்பொழுது வந்துவிட்டதென்பதையும்;

ஆனால் அவர் கூறியபடி உச்ச நிலையை அடைந்த மேற்கு நாகரீகம் மீண்டும் தலை சாயாது என்றும் விளக்கியுள்ளார். பேராசிரியர் ஆர்னல்டு டாய்ன்பியின் தத்துவங்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டி மேற்கு நாட்டு மக்களுக்கு பௌதிக வாழ்க்கையில் சலிப்பு ஏற்பட்டு ஆத்மார்த்த வாழ்க்கையை விரும்புகின்றனர் என்பதையும் விளக்கியுள்ளார்.

முடிவாக இன்றைய நாகரிகம் விஞ்ஞான நாகரிகம்.அதை நாம் பயன்படுத்திக் கொள்வதில்தான் நமது எதிர்காலம் இருக்கிறது என்று வற்புறுத்தி தனது நூலை முடிக்கிறார். "மேற்கு நாடுகளின் எதிர்காலம்" என்ற இந்த நூல் மனித வர்க்கத்தின் மனத்தில் ஏற்பட்டுள்ள குழப்பம், பயம், சந்தேகம் ஆகியவைகளை தெளிவு படுத்த ஒரு சிறந்த முயற்சி என்று கூறினால் அதில் மிகை இல்லை.

இந்நூல் ஆசிரியர் ஜே. ஜி. டிபஸ் 1909-ல் பிறந்தவர். கலிபோர்னியாவிலும் இன்னும் பல கலாசாலைகளிலும்படித்துப் பட்டம் பெற்றவர். நெதர்லாந்து அன்னிய நாட்டு இலாகாவில் உத்யோகம் வகித்து, ஹேக், பிரஸ்ஸல், கோபன் ஹேகன், பெர்லின், லண்டன், வாஷிங்டன்,ஜகார்த்தா ஆகிய இடங்களுக்குச் சென்று வந்தவர். யுத்தத்தின்போது நெதர்லாந்தின் பிரதம மந்திரியின் காரியதரிசியாக இருந்தவர். ஐ. நா. தூது கோஷ்டியிலும் அங்கம் வகித்தவர்.

யுத்த காலத்தில் டச்சு நாட்டின் ரகசிய இயக்கம் இவருடைய 'எனது நாட்டின் அரசியல் எதிர்காலம்' என்ற பிரபலமான நூலை நான்கு முறை பதிப்பித்து வெளியிட்டது. டாக்டர் டிபஸ் தற்போது நெதர்லாந்தின் அந்நிய நாட்டு தூதராக தனது மனைவி, மகள் ஆகியோருடன் வாஷிங்டனில் வசித்து வருகிறார்.

தமிழில் புதுமையான நூல்கள் பலவற்றை வெளியிட வேண்டும் என்பதே ஜோதி நிலயத்தின் லட்சியம். அதைப் பூர்த்தி செய்ய இந்த நூலும் பயன்படுமானால் அதுவே எனக்கு மகிழ்ச்சி தருவதாகும்.

இந்த நூலை எனது நண்பன் ஸ்ரீ கே. எம். ரங்கசாமி மொழிபெயர்த்துள்ளார். தமிழுக்கு அன்னியமான பல கருத்துக்களை வெளியிட வேண்டிய சந்தர்ப்பங்கள் இந்த நூலில் நிறைய இருக்கின்றன. சிற்சில இடங்களில் பாஷை அழகைப்

பற்றி லட்சியம் செய்யாமல் கருத்தை வெளியிடுவதையே பிரதான நோக்கமாக மொழி பெயர்ப்பாசிரியர் கொண்டுள்ளார். இதுபோன்ற நூல்களை மொழி பெயர்த்தவர்களுக்கே இதன் சிரமம் தெரியும். ஆனால் ஸ்ரீ ரங்கசாமி தன்னுடைய சிரமமான காரியத்தில் வெற்றி பெற்று விட்டார் என்பதே என் கருத்து. இந்த நூலை ஒரு முறைக்கு இரு முறையாக படித்தால் இதில் உள்ள கருத்துக்களை நன்றாக அறியலாம். அவசியம் படிக்கவேண்டிய புஸ்தகங்களில் இதுவும் ஒன்று என்று கூறி முடிக்கிறேன்.

17—9—'56
திருவல்லிக்கேணி.

அ. கி. ஜயராமன்

## மேற்கு நாடுகளின் எதிர்காலம்

மேற்கத்தி நாகரிகம் ஐரோப்பாவில் ஒளிவீசத் தொடங்கி ஆயிரமாண்டுகள் நிகழ்ந்துவிட்டன. உலகத்தில் ஒவ்வொரு உயிரும் தோன்றியதுபோல இதுவும் கண்டு பிடிக்க முடியாத ஒரு ரகசியம். மடங்களிலும், கோயில்களிலும், அரச சபைகளிலும், பிரபுக்களின் மாளிகைகளிலும், வீரர்களின் கோட்டைகளிலும், காட்டு மிராண்டி எஜமானர்களின் தொழிற்சாலைகளிலும், உபதேசிகளின் பிரசங்க மேடைகளைச் சுற்றியும் புராதன பிரெஞ்சு, இத்தாலிய நகரங்களிலும் மக்கள் மனத்தில் ஏதோ புகையத் தொடங்கி, எண்ணற்ற தீக் கொழுந்துகளாக வெடித்து, சிறிது சிறிதாக சேர்ந்து, ஐரோப்பிய நாகரிகமென்ற பெருந் தீயாக ஆயிற்று.

பிறகு ஓராயிரம் வருடங்கள் சென்றன. ஐரோப்பிய நாகரிகம் விரிவடைந்து மேற்கத்தி நாகரிகமாக ஆனபொழுது, அது பழசாகி, அதன் வடுக்கள் ஆழமாகி, சரித்திரப் பகைப்புலன் விரிவடைந்தது. "இதற்கு எதிர்காலத்தில் என்ன நேரப் போகிறது?!' என்ற கேள்வி தற்கால மக்கள் முன்னே எழுகிறது.

ஐம்பது வருஷத்திற்கு முன்பு வரை இதுபற்றி விவாதிப்பது வேதாந்திகளுக்கும் சரித்திராசிரியர்களுக்கும் அறிவை வளர்க்கும் பொழுது போக்காகவே இருந்து வந்தது.

மேற்கத்தி நாகரிகம் உலகம் முழுதும் விரிந்து பரந்து ஆட்சி புரியும் என்றும், மேலும் எக்காலத்திலும் தொடர்ந்து வளர்ச்சி பெறும் என்றும் தொடர்ந்து மனித இனத்துக்கு க்ஷேமத்தை உண்

டாக்கி மனித அறிவையும் மனத்தையும் வளர்க்கும் என்றும் நாம் திட்டமாகக் கருதினோம்.

ஆனால் இன்று உலக ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பகுதி ஐரோப்பிய நாகரிகத்திற்கு நேர் விரோத மான கருத்தைக் கொண்டிருப்பதைக் காண்கிறோம், மற்றப்பகுதிகளில் இதன் மதிப்பு சோதிக்கப்படுகிறது. இது ஜீவித்திருக்குமா என்பதே சந்தேகிக்கப்படுகிறது. நூறு அல்லது இருநூறு வருஷங்களுக்குப் பின் உலகம் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்யும் விஷயமல்ல இனி இது; அடுத்த சில வருஷங்களில் நம் குழந்தைகளுக்கும், நமக்குமே கூட உலகம் எப்படிக் காட்சி அளிக்கப்போகிறது என்பது பற்றிய பயங்கர உண்மையை. 1960-ம் வருஷத்திற்குள் மேற்கத்தி உலகத்தில் ஒவ்வொரு நகரமும் அழிந்து குட்டிச் சுவராகி விடுமென்று எச். ஜி. வெல்ஸ் பயங்கரமான சித்திரம் ஒன்றைத் தீட்டிக் காட்டினார். 1984-ம் வருஷத்திற்குள் உலகத்தில் கொடிய சர்வாதிகாரம் ஆட்சி செலுத்து மென்று ஜார்ஜ் ஆர்வெல் தர்க்க ரீதியாக ஹேஷ்யம் கூறினார். இந்த ஹேஷ்யங்களை உண்மையாக்குவதற் காகச் சில பலம் பொருந்திய சக்திகள் பாடுபட்டு வருவதை சிறிது தீர்க்க தரிசனம் உள்ள ஐரோப்பியன் காண்கிறான்.

ஒரு காலத்தில் வெறும் ஹேஷ்யமாக இருந்த விஷயம் சாவா, வாழ்வா என்ற பிரச்னையாக மாறிவிட்டது. முதல் உலக யுத்தத்திற்கு முன்னால் மேதாவிகள் அறிந்த, ஆனால் அப்பொழுது வெறும் தர்க்கத்திற் குரிய விஷயமென்று கருதப்பட்ட பிரச்னை இப்பொழுது மிகவும் அவசரமானதாகி விட்டது: மேற்கத்தி நாகரிகம் முடிவுக்கு வந்து கொண்டிருக்கிறதா ?

கவெண்ட்ரி கோயில் நொறுங்கியதை நால் கண்ணால் கண்டதுபோல் மேற்கத்தி நாகரிகமென்னும் கம்பீரமான கட்டிடம் நொறுங்கித் தரை மட்டமாகும்.

துர்ப்பாக்கியத்தைக் காணவும் நம்மை விதி தேர்ந் தெடுத்திருக்கிறதா? ஜன நெருக்கம் நிறைந்து ஜீவன் துடிக்கும் நியூயார்க் நகரம் ஜன சஞ்சாரமற்று, பாதி காலியான சிறு கட்டிடங்களுடன் தெருக்களில் முழங் காலளவு புல் முளைத்துப் பாழ் நகரமாகிவிடுமா?

இதுவே நம் காலத்தின் முக்கிய பிரச்னையாகி விட்டது. நமது நாகரிகம் (மேற்கத்தி நாகரிகம்). தற் போதைய நெருக்கடியில் வெற்றி பெற்று மேலும் உயர்ந்த நிலையை அடையப் போகிறதா அல்லது சீக் கிரத்தில் இதற்கு முடிவு நெருங்கிக் கொண்டிருக் கிறதா?

இக் கேள்விக்கு விடை கண்டு பிடிக்கத்தான் இந் தப் புத்தகம் முயற்சிக்கிறது.



## நாகரிகங்களின் வாழ்வும் தாழ்வும்

மனித ஜாதியின் சரித்திரம் காலப்போக்குடன் சேர்ந்து அபிவிருத்தியடைந்து முன்னேறிக் கொண்டிருப்பதாகவே பதினெட்டாம் நூற்றாண்டு முதல் மேற்கத்தி சரித்திராசிரியர்களின் நம்பிக்கையாக இருந்து வருகிறது. ஆராய்ச்சியாளர்கள். சரித்திர ஆராய்ச்சியில், மேற்கத்தி சமுதாயத்தை ஒரு மையமாக வைத்து அதிலிருந்து பின்நோக்கி ஆராயத் தொடங்கினார்கள், உலகெங்கும் எல்லாக் காலங்களிலும் நிகழ்ந்த சரித்திர சம்பவங்கள், "புராதன சரித்திரம்", "இடைக் காலம்" என்ற தலைப்புகளின் கீழ், ஐரோப்பிய சரித்திரத்தின் பூர்வ பீடிகையாகவே கருதப்பட்டன. இந்த ஐரோப்பிய சரித்திரம் என்னும் கடலில் கடந்த கால நதிகள் யாவும் கலந்துவிட்டதாகவே கருதப்பட்டது. கோபர்னிகஸுக்கு முன்னால், பூமியே பிரபஞ்சத்தின் மையம் என்று ஒப்புக்கொள்ளப் பட்டதுபோல் எந்தக் காலத்திலும் எந்த மக்களாலும் ஏற்பட்ட சம்பவங்கள் யாவும் அவை சீனாவில் நடந்தவையாயினும் மெக்ஸிகோவில் நடந்தவையாயினும் கி. மு. நான்காம் நூற்றாண்டில் நடந்தவையாயினும் கி. பி. 19-ம் நூற்றாண்டில் நிகழ்ந்தவையாயினும், அவையெல்லாம், மேற்கத்தி உலகத்தின் நவீன கால சரித்திரத்தில் வந்து முடியும் ஒரே இணைப்பான நிகழ்ச்சி என்றே கருதப்பட்டு வந்தது.

ஆனால் கடந்த நூற்றாண்டில் பழங்காலங்கள் பற்

றிய பல உண்மைகள் வெளியாயின. இடையருத நிகழ்ச்சி பற்றிய கருத்து சரித்திர உண்மைகளுடன் பொருந்தாது என்பது நிரூபணமாயிற்று. ஆகவே ஐரோப்பாவை மையமாக வைத்து ஒரே தொடர்பில் கருதப்படும் சரித்திரம் சரித்திர ஆதாரங்களுடன் பொருந்துவதாக இல்லை.

மனித ஜாதியின் சரித்திரம் ஒரே மாதிரியில் இடைவிடாத முன்னேற்றம் அடைந்து வந்திருக்கிறது என்பது ஒரு புறம் தவறு. சிற்சில காலங்களில் சிற்சில பிரதேசங்களில் நாகரிகமும் கலாசாரமும் இருந்திருப்பதைச் சரித்திரத்தில் காண்கிறோம். இந்த நாகரிகங்கள் காலத்திற்கும் இடத்திற்கும் கட்டுப்பட்டவை. நைல்நதிப் பள்ளத்தாக்கில் ஒரு நாகரிகம் தோன்றி வளர்ந்து அந்தப் பள்ளத்தாக்கின் எல்லைக்கு அப்பாலும் படர்ந்தது. ஆனால் அது இங்கிலாந்தையோ சீனாவையோ, பெருவையோ எட்டவில்லை. அது சுமார் மூவாயிரம் வருஷம் வாழ்ந்தபின் ஒரு தனி நாகரிகம் என்ற தன்மையை இழந்து, சிறிது சிறிதாகத் தேய்ந்து இறுதியில் அந்தப் பிரதேசத்தின் நாகரிகம் என்று சொல்ல முடியாத ஒரு சகாப்தத்திற்கு இடம் கொடுத்துவிட்டு மறைந்து விட்டது. இதே போல் கிரீஸிலும் ரோமிலும் தோன்றிய நாகரிகம் கி. பி.முதல் நூற்றாண்டுக்குள் மத்தியதரைக் கடல் பிரதேசத்திலும், மத்தியக் கிழக்குப் பிரதேசத்திலும் மேற்கு ஐரோப்பாவிலும் பரவிப் பிறகு சீர்குலைந்து மறைந்தது இதற்குப்பின் அப்பிரதேசத்தில் தோன்றிய இருண்ட காலம் ஐந்தாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை நீடித்தது. மற்ற நாகரிகங்களுக்கும் முந்தியோ பிந்தியோ இத்தகைய இருண்ட காலங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

இதைப்போலவே தூரதேசங்களில் உள்ள சமூகங்கள் பல்வேறு காலங்களில் இத்தகைய அனுபவங்

களுக்கு உள்ளாகியிருக்கின்றன என்பதற்கு தற்கால சரித்திர ஆராய்ச்சியில் நிறைய ஆதாரங்கள் இருக்கின்றன.

இவ்விதம்,ஏற்கனவே அழிந்துபோன அல்லது தற்சமயம் வாழ்கின்ற பல நாகரிகங்களில் மேற்கத்தி நாகரிகமும் ஒன்று என்ற முடிவுக்கு நாம் வந்துவிட்டோம்.

இந்தக் கருத்து முன்னேற்றப்பாதையைத் தடுப்பதாக ஆகாது. முதலாவதாக ஒவ்வொரு நாகரிகமும் முன்னேறி நீண்டகாலம் வளர்ந்து உயர்ந்திருக்கிறது. ஒரு நாகரிகம் மறைந்துபோனாலும் அதன் காலத்தில் தோன்றிய விலை மதிப்பற்ற நுட்பமான பொருள்களும் சாஸ்திரங்களும் கலைகளும் பிற்காலத்தில் தொடர்ந்த நாகரிக சமுதாயத்தினரால் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. ஒழுக்கம், தத்துவம், சிற்பம், இலக்கியம், ஆட்சி சட்டம் முதலிய துறைகளில் புராதன கிரேக்க, ரோமாபுரி நாகரிகங்களிலிருந்து பற்பல விஷயங்களைப் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றன. பின்னர் தோன்றும் ஒவ்வொரு நாகரிகமும் மனித சூழ்நிலையை அதிகம் கட்டுப்படுத்த முடியும், அவ்விதமே கட்டுப்படுத்தியும் இருக்கின்றன. அவற்றிற்கு முன்பிருந்த நாகரிகங்களைவிட ஆத்மீகத்துறையிலும் கலைத்துறையிலும் அதிகமாகச் சாதித்திருக்கின்றன.

நாகரிகங்கள் பற்றிய இந்தக் கருத்து, மக்களையோ தேசங்களையோ, விதியின் கையில் சிக்கிய உயிரற்ற பொம்மைகளாகப் பாவிக்கவில்லை.

பல்வேறு நாகரிகங்களின் போக்கிலும் ஓரளவு ஒற்றுமை கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் மேற்கத்தி நாகரிகத்தை—அல்லது அதன் கலை, அரசியல் பொருளாதாரம் முதலிய சில அம்சங்களை—மற்ற நாகரிகங்களுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதன் மூலம் அதன் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதை

ஊகித்து அறியமுயற்சி செய்யப்படுகிறது.

ஒவ்வொரு நாகரிகத்திலும் எல்லாக் கலைகளும் வளர்ச்சி பெருத நிலையில் இருந்து உச்ச நிலையை அடைந்து கடைசியில் தேக்க நிலையை அடைவது போன்ற ஒரே மாதிரியான மாறுதல்களுக்கு உள்ளாவ தாகச் சில ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

பல்வேறு கலாசாரங்களையும் சேர்ந்த கலைகளுக் கிடையில் பெரிய விஷயங்களிலும் சிறிய விஷயங்களி லும் பல ஒற்றுமைகள் இருப்பதாக, இந்த சித்தாந்தங் களைப் பாரபக்ஷமின்றிச் சரித்திர பூர்வமாக ஆராய்ந்த ஒரு சரித்திராசிரியர் கூறுகிருர். ஆனுல் எல்லாக் கலை வரலாறுகளின் முக்கிய கட்டங்களும் ஒரே மாதிரி தான் என்றும், அவற்றின் விளைவுகளும் ஒன்றே என்றும் யாராவது சொன்னுல் அது மிகை என்று அவரே வற்புறுத்துகிருர். (ஸோரோகின்)

சித்தாந்தங்களையெல்லாம் ஆராய்வதோ அவற் றைப் பற்றித் தீர்ப்புக் கூறுவதோ இந்த நூலின் நோக்கமல்ல. இன்னும் அதிகத் தகுதி வாய்ந்தவர்கள் இதைச் செய்திருக்கின்றனர். (குறிப்பு: பிட்ரிம் ஸோரோகினுடைய "நெருக்கடியான சகாப்தத்தின் சமூக தத்துவங்கள்" என்ற நூலை இதற்கு ஓர் உதா ரணமாகச் சொல்லலாம். தற்கால நெருக்கடி பற்றிப் பல்வேறு சித்தாந்தங்களையும்கொண்டு அவர் விரிவாக ஆராய்ந்திருக்கிருர். அது பற்றிப் பின்னுல் அடிக்கடி குறிப்பிட வேண்டிய சந்தர்ப்பங்கள் வருகின்றன.) தவிர அவ்விதம் ஆராய்ந்தால் இந்நூல் "என்ஸைக் ளொபீடியா" போல் வளர்ந்துவிடும்.

நமது நாகரிகத்தின் சரித்திர பூர்வமான கடமை யிலும், சாத்தியக் கூறுகளிலும் நம்பிக்கைதான் இப் போதைய தேவை. அந்த நம்பிக்கைக்கு ஆக்கம் தேடத்தான் இந் நூல் முயற்சிக்கிறது.

இந்தக் காரணங்களினுல், இருபதாம் நூற்ருண்

டின் நெருக்கடிக்கு முக்கியமானவையென்று தோன்றும் சரித்திர பூர்வமான வியாக்கியானங்களோடு நிறுத்திக் கொள்வோம்.

இதற்கு, முதலில் நாம் நாகரிகங்களின் வாழ்வையும் தாழ்வையும் பற்றிய சில தன்மைகளைக் கண்டுபிடிக்க முயற்சிக்க வேண்டும். (முதல் பாகம்): பிறகு அவற்றைக்கொண்டு தற்கால நிலைமையை மதிப்பிட வேண்டும். (2-ம் பாகம்): கடைசியாக, மேற்கத்தி நாகரிகத்தின் எதிர்காலம் பற்றி முடிவு கட்ட வேண்டும். (3-ம் பாகம்)

# 2

## ரஷியக் கண்ணேட்டம்: நிகோலாய் டானிலெவ்ஸ்கி

நாகரிகங்களின் வாழ்விலும் வீழ்ச்சியிலும் சரித்திர சம்பவங்கள் திரும்பத் திரும்ப நிகழ்கின்றன என்பது நம் காலத்தில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட உண்மையல்ல. ஸ்டோயிக்குகள், மாக்யவெல்லி, மாண்டேன் முதலியவர்களே இப்படித்தான் அபிப்பிராயப்பட்டனர். ஆயினும் அவர்களில் யாரும் சரித்திர உண்மைகளைக் கொண்டு பூரணமாக அவற்றைச் சோதிக்கவில்லை.

இக் கருத்தைச் சிறிது விரிவாக முதலில் ஆராய்ந்தவர் பதினெட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த இத்தாலிய வேதாந்தியான கியோவன்னி பாடிஸ்ட்டா விகோ. இவர் சரித்திர சம்பவங்கள் திரும்பத் திரும்ப நிகழ்கின்றன என்னும் சித்தாந்தத்தை அபிவிருத்தி செய்தார். எல்லா நாடுகளிலும் ஒரே மாதிரியான சுழல் ஏற்படுவதாகவே அவர் கருதுகிறுர். உணர்ச்சி மயமான மிருகத்தனம் நிறைந்த "வீர சகாப்த"த்தில் ஆரம்பித்து சிறிது சிறிதாக அபிவிருத்தியடைந்து

உண்மையான நாகரிகமாக வளர்கிறது. இறுதியில் தேக்கங் கண்ட விபரீத அறிவினுல் ஏற்படும் மிருகத் தனமாகிவிடுகிறது. அதோடு நாகரிகத்தின் சுற்று முடிவடைகிறது. பிறகு முந்தின சுழல் போலவே ஒரு புதிய சுழல் ஆரம்பமாகிறது. ஆனுல் இதில் புதிய கலாசார மதிப்புகள் தோன்றுகின்றன. ஆகையால் இது முந்தின நாகரிகத்தைவிட வளமுள்ளதாக இருக்கிறது.

பல்வேறு நாகரிகங்களை பரிபூரணமாக ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு பிறகு நூற்றைம்பது வருஷங்கள் பிடித்தன. அப்பொழுதுகூட, வேறு ஒரு விஷயத்தின் ஆராய்ச்சிக்கிடையே மேம்போக்காகத்தான் இது கவனிக்கப்பட்டிருக்கிறது.

1869-ம் வருஷத்தில் சிறந்த அறிவாளியான நிகோலாய் டானி லெவ்ஸ்கி என்ற ருஷிய சர்க்கார் அதிகாரி, "ரஷியாவும் ஐரோப்பாவும்" என்ற தலைப்பில் "ஸாரியா" என்ற பத்திரிகையில் தொடர்ச்சியாகச் சில கட்டுரைகள் வெளியிட்டார். சரித்திரம் முதல் மொழி ஆராய்ச்சி வரை டார்வின் சித்தாந்தம் முதல் ரூபள் என்னும் ரஷ்ய நாணயத்தின் மதிப்புக் குறைப்பு வரை பலதரப்பட்ட விஷயங்களில் மிகுந்த ஆராய்ச்சி வல்லமை படைத்தவர் அவர். அவருடைய கட்டுரைத் தொடரில் ஸ்லாவ் உலகிற்கும், ஜெர்மானிய-ரோமானிய உலகத்திற்குமிடையில் இருந்த அரசியல் தொடர்பு பற்றிய கருத்துக்களை வெளியிட்டார். இந்தக் கட்டுரைகள் உடனடியாக ரஷியர்களின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தன.

பின்னுல் தோன்றிய ஸ்பெங்லருக்கும், டாய்ன்பீ என்பவருக்கும் முன்னேடி என்று சொல்லக்கூடிய இவருடைய கருத்துக்கள் விரிவானவையாகவும் ஆழ்ந்தவையாயுமிருக்கின்றன. ஆனுல் அவர்கள் இருவரும் இவரை கவனிக்கவில்லை.

நாகரிகங்களின் தத்துவம் பற்றி விரிவான ஆராய்ச்சி நடத்துவது டானி லெவ்ஸ்கியின் நோக்க மல்ல என்பதை அவருடைய கட்டுரைகளின் தலைப்பே காட்டுகிறது; ரஷியாவுக்கும் ஐரோப்பாவுக்குமிடையில் உள்ள தொடர்பைப் பரிசீலனை செய்து, அவை ஏன் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கின்றன, வருங் காலத்திலும் தலைமுறை தலைமுறையாக ஏன் இப் படியே இருக்கப் போகிறது என்பதை விளக்குவது தான் இதன் நோக்கம். ரஷியாவின்மீது ஐரோப்பா வுக்கு உள்ள வெறுப்புதான் இதற்குக் காரணமென்று நூலாசிரியர் கூறுகிறார். ஐரோப்பிய நாகரிகம் தாழ்ந்து வருவதும் ரஷிய நாகரிகம் உயர்ந்து வருவ தும் இந்த துவேஷத்திற்குக் காரணமென்று அவர் நினைக்கிறார்.

பல நூற்றாண்டுகளாக ரஷியாமீது ஐரோப்பா காட்டும் குரோதம் பற்றியும் அவநம்பிக்கையைப் பற்றியும் அவர் கூறும் வர்ணனை இன்றைய நிலைமை யில் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஐரோப்பா பற்றி ஸ்லாவ் அபிப்ராயம் என்ன என்பதை அறிய இது பயன்படுகிறது.

"சரித்திர-கலாசார பாணிகள்" என்று அவர் கூறு வதை நாம் "நாகரிகங்கள்" என்று குறிப்பிடுவோம்.

ஐரோப்பிய நாகரிகமே உலகம் முழுமைக்கும் பொதுவான நாகரிகம் அல்ல. (அக்காலத்தில் இது புதிய கருத்து) அல்லது அது ஒன்றே சக்தி வாய்ந்த முற்போக்கான நாகரிகமும் அல்ல என்கிறார் இந்த ரஷ்ய ஆசிரியர். பல நாகரிகங்களில் இதுவும் ஒன்று. ஜெர்மன்-ரோமானிய நாகரிகப் பிரதேசத்தை மட்டும் சேர்ந்தது. மற்ற நாகரிகங்களில் பெரும்பாலானவை ஐரோப்பாவுக்கு வெளியே தோன்றியவை. ரஷிய நாக ரிகமும் இப்படித்தான். ஐரோப்பிய நாகரிகத்தில் ரஷிய நாகரிகம் ஒரு பகுதி என்ற ரீதியிலோ அல்லது

அதிலிருந்து தோன்றியது என்ற ரீதியிலோ ரஷ்யா ஐரோப்பாவின் ஒரு பகுதியல்ல. ஐரோப்பாவின் வாழ்க்கையிலோ அதன் அனுபவங்களிலோ அது சிறிதும் பங்கு கொள்ளவில்லே. அது தனக்குத்தானே ஒரு வழியை அமைத்துக்கொண்டு தனியாக வாழ்ந்து வந்திருக்கிறது.

டானிலெவ்ஸ்கி இவ்விதம் நாகரிகம் சரித்திரம் பற்றிய மேற்கத்திய தற்பெருமையை முறியடித்து விட்டு தம் வாதத்தை உருவாக்குகிருர். இத்தகைய பன்னிரண்டு நாகரிகங்களே அவர் தனியே பிரித்துக் காட்டுகிருர். மனித ஜாதியின் பூரண சரித்திரம் பல் வேறு சரித்திர கலாசாரங்களிஞல் உருவானது. அவை ஒவ்வொன்றும் தத்தம் பாணியில் மனித சமூகத்தின் கலாசார பொக்கிஷத்தை வளர்த்தன. இவற்றில் பத்து நாகரிகங்கள் மேற்குக் கோளார்த்தத்தையும், இரண்டு நாகரிகங்கள் கிழக்குக் கோளார்த்தத்தையும் (மெக்ஸிகோ, பெருஷீய நாகரிகங்கள்) சேர்ந்தவை. இவை இரண்டுமே தங்கள் வாழ்க்கையைப் பூர்த்தி செய்யாமல் துர்மரண மடைந்தன.

டானிலெவ்ஸ்கி மனித ஜாதியை மூன்று பகுதியாகப் பிரிக்கிருர். முதல் கோஷ்டி நாகரிகத்தின் உடன்பாடான கடமையை ஆற்றும் மக்களேக் கொண்டது. மேலே கூறப்பட்ட நாகரிகங்களே உண்டாக்கும் ஆக்க சக்திகள் அடங்கியது. இரண்டாவது கோஷ்டி அழிப்புக் கடமையை ஆற்றும் மக்களேக் கொண்டது. அழியும் நாகரிகங்கள் அழிய இவர்கள் உதவி புரிகின்றனர். ஆதி கால மங்கோலியர், ஹூணர், துருக்கர் ஆகியவர்கள் இந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள். மூன்ருவது கோஷ்டியினர் நாகரிக எல்லேயை அடைவதுமில்லே; அழியக்கூடிய நாகரிகங்களே அழிப்பதுமில்லே. முதல் இரு கோஷ்டியினரும் இவர்களேத் தங்கள் சாதனேகளுக்குப் பயன்படுத்திக்

கொள்கின்றனர்.

வளர்ச்சியின் பல்வேறு கட்டங்களிலும் எல்லா மக்களுக்கும் பொருந்தக் கூடிய ஐந்து விதிகளை டானிலெவ்ஸ்கி குறிப்பிடுகிறார்.

இவற்றில் நாலாவது விதி, ஒரு நாகரிகத்தின் "இனம் சம்பந்தமான விஷயத்தில்" வேறுபாடு, சுதந்திரம் ஆகியவற்றின் அவசியம் பற்றியதாகும். இது தற்காலத்திற்கு மிகவும் முக்கியம் வாய்ந்தது. எதிர்காலத்திற்கு இன்னும் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும். இப் புத்தகத்தின் பிற்பகுதியில் இவ் விஷயத்திற்கு நாம் மீண்டும் திரும்பவேண்டி யிருக்கும். இங்கு கவனிக்க வேண்டியது என்னவென்றால், டாய்ன்பிக்கு முக்கால் நூற்றாண்டுக்கு முன் எழுதிய டானிலெவ்ஸ்கி "சரித்திரத்தை ஆராய்வதற்கு நாகரிகம்தான் உண்மையான அளவு கோல்" என்று சித்தாந்தப் படுத்தினார். புராதன கிரீஸில், கிரேக்க நாகரிகத்தை விட்டுவிட்டு பிரத்யேகமாக ஏதென்ஸ் சரித்திரத்தையோ ஸ்பார்ட்டா சரித்திரத்தையோ எழுதுவது அசாத்தியம். அதேபோல் ஐரோப்பாவில் ஐரோப்பிய நாகரிகத்தை விட்டுவிட்டு பிரான்ஸ், ஜெர் மனி, இத்தாலி முதலிய நாடுகளின் சரித்திரங்களை ஆராய முடியாது.

இந்தப் புத்தகத்தில் ஆராய எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு டானிலெவ்ஸ்கியின் ஐந்தாவது விதி மேலும் அதிக முக்கியத்துவம் வாய்ந்தது.

"சில விஷயங்களின் வளர்ச்சிக்கு முடிவே இருப்ப தில்லை. ஆனால் அவை பூத்துப் பழம் கொடுக்கும் காலம் குறுகியதாகவே இருக்கும். அப்படிப்பட்ட பொருள்களின் வளர்ச்சியைப் போன்றதுதான் சரித் திரம் - கலாசார ரகங்களின் வளர்ச்சியும் என்கிறார் அவர்.

இந்த விதியை அவர் விளக்குகையில் ஒரு கலா

சார - சரித்திர ரகம் தன் வளர்ச்சியில் மூன்று கட்டங்களைக் கடந்து செல்வதாகக் கூறுகிறார்.

இவற்றில் "இன நிலைமைதான் முதல் அல்லது புராதனமான கட்டமாகும். பல்லாயிரக் கணக்கான வருஷங்கள் வரை இது நீடிக்கிறது. பிறகு இது ஒரு கட்டுப்பாடான சமூகமாக மாறுகிறது.

இரண்டாவது அல்லது நடு கட்டத்தில் கலாசார, அரசியல் சுதந்திரம் உருவாகிறது. அடுத்த கட்டத்திற்கான ஆக்க சக்தி சேர்வதும் இந்தக் கட்டத்தில் தான்.

அடுத்த கட்டத்தை ஆசிரியர் "நாகரிக நிலைமை" என்கிறார். இதில் கலாசார - சரித்திரத்தின் ஆக்க சக்தி முழு மலர்ச்சி பெறுகிறது. அதன் லக்ஷியங்களாகிய தனி நபர் க்ஷேமம், சமூக க்ஷேமம் முதலியவை கை கூடுகின்றன. இந்தக் கட்டம் குறுகிய கால அளவுடையதாகும். இது சுமார் நாலு அல்லது ஆறு நூற்றாண்டு நீடிக்கும். இதன் ஆக்க வேலைகளினால், சேர்ந்துள்ள சக்திகள் செலவாகின்றன. "முடிவின்றி நீடிக்கும் பெருமை எந்த நாகரிகத்திற்கும் இருந்ததில்லை. எல்லா மக்களுமே ஆக்க வேலையினால் அலுத்துப் போகின்றனர்."

இதன் விளைவாக இந்த மலர்ச்சி கட்டத்திற்குப் பின் அந்த நாகரிகம் நசித்துச் சீர்குலைகிறது. டானிலெவ்ஸ்கி சொல்லா விட்டாலும் இதை நாலாவது கட்டம் எனலாம். இயற்கையில் தோன்றும் மற்ற நிகழ்ச்சிகளைப்போலவே இந்தச் சீர்குலைவும், வெளிப்படையாகத் தெரிவதற்கு வெகுகாலம் முன்பே ஆரம்பமாகி விடுகிறது. பகல் நேரம் குறையத் தொடங்கிய பிறகே கோடை வெய்யில் அதிகரிக்கிறது. பகலில் உஷ்ணம் நடுப் பகலுக்குப் பின்னரே அதிகமாகிறது. ஒரு மனிதனின் வாழ்க்கையில், அவனுடைய ஆக்க சக்தி அதிகமாக இருக்கும் காலம் கடந்த பின் நடுத்தர வயதில்

உச்ச நிலை வருகிறது. இவற்றைப் போலவே ஒரு நாகரிகத்தின் அழிவும், அது பூரண மலர்ச்சி யடைந்து உன்னத நிலையில் இருப்பதுபோல் தோன்றும் முன்னரே ஆரம்பமாகி விடுகிறது. ஆசிரியர் ஐரோப்பாவைப் பற்றி விசேஷமாகக் குறிப்பிட்டு, ஆக்க சக்தி குறையக் குறைய நாடு பிடிக்கும் ஆசையும், உலக ஆதிக்கம் பெறவேண்டுமென்ற ஆசையும் அதிகரிப்பதாகக் கூடக் குற்றம் சாட்டுகிறார்.

இந்த இழிவு அலக்ஷியத்தின் உருவிலோ, உணர்ச்சி மரத்துப் போன தன்மை, சுய திருப்தி ஆகியவற்றின் மூலமோ, வெளியே தெரிகிறது; இந்த நிலையில் கடந்த கால விஷயங்கள், மரத்துப் போன லக்ஷியங்களாக முடிவின்றிக் காப்பியடிக்கப் படுகின்றன; அல்லது அரசியல், சமூக முரண்பாடுகளின் மூலம் வெளித் தெரிகிறது. இது போராட்டங்களும் நம்பிக்கை யின்மையும் நிறைந்த காலமாகும். இறுதியில் மரத்துப் போன தன்மையிலும் அலக்ஷியம் ஏற்படுகிறது.

டானி லெவ்ஸ்கியின் சிந்தாந்தத்தில் நம் ஆராய்ச்சிக்குத் தேவையான பகுதி இதுதான். இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கருத்தின் முக்கியமான ஜீவ நாடி இருக்கிறது. இவற்றை ஸ்பெங்லரும், அவரைக் காட்டிலும் அதிகமாக டாய்ன்பியும் விளக்கியிருக்கின்றனர். டானிலெவ்ஸ்கியின் கருத்துக்கள் இவர்களுக்குத் தெரியாது. டானிலெவ்ஸ்கியோ தம்மை ஓர் ஐரோப்பியரென்று கருதாமல், வேறு ஒரு நாகரிகத்தின் கண்ணோட்டத்துடன் எழுதினார். ஆயினும் இம்மூவருக்குமிடையே உள்ள கருத்து ஒற்றுமை மிகத் தெளிவாகத் தெரிகிறது.

டானிலெவ்ஸ்கி மேலே சுருக்கிக் கூறப்பட்ட கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு, ஐரோப்பிய நாகரிகத்திற்கும் ஸ்லாவிக் - ரஷிய நாகரிகத்திற்கு

மிடையில் சுபாவமான போராட்டம் இருக்கிறதென்ற முடிவுக்கு வந்தார். முந்திய நாகரிகம் பிந்தியதைக் காட்டிலும் ஐந்நூறு வருஷம் பழமையானது. பிந்தியது இரண்டாவது கட்டத்தைத் தாண்டி நாகரிகம் அல்லது மலர்ச்சி என்ற கட்டத்தை இப்பொழுதுதான் அடைந்து கொண்டிருக்கிறது. ஆனுல் முக்கிய நாக ரிகம் அந்தக் கட்டத்தைக் கடந்துவிட்டது. இதன் வீழ்ச்சி பதினேழாம் நூற்ருண்டிலேயே ஆரம்பமாகி விட்டது: ஆயினும் பத்தொன்பதாம் நுாற்ருண்டில் தான் இது வெளிப்படையாகத் தெரிந்ததென்று டானி லெவ்ஸ்கி கூறுகிருர். ஆக்க சக்தி குறைவு, கிறிஸ்தவ மதத்தில் நம்பிக்கை குறைவு, அரசியல், பொருளாதார கலாசாரத் துறைகளில் உலக ஆதிக்கம் பெறவேண்டு மென்ற ஆவல் - இவற்றிலிருந்து நாகரிகத்தின் வீழ்ச்சி ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

ஐரோப்பா, தன்னுடைய நாகரிகத்தை உலக நாடு கள் முழுதும் திணிக்க விரும்புவதால், அதற்கும் அதன் ஆதிக்க ஆசையைத் தடுப்பதையே தன் னுடைய லட்சியமாகக் கொண்ட இளம் ரஷிய நாக ரிகத்திற்கும் இடையில் நட்பு காண்பது சாத்திய மில்லே. ஐரோப்பா தன் உள்நாட்டுப் பிரச்னேகளேத் தீர்த்துக் கொண்டுவிட்டால் அதற்கும் ஐக்கிய ஸ்லாவ் ஆட்சிக்கும் இடையில் யுத்தம் தவிர்க்க முடியாததாகி விடும். இந்தப் போராட்டத்தில் ஸ்லாவ் ஆட்சி வெற்றி பெற்று உலகத் தலேமைப் பதவியை ஏற்கும் என்று டானிலெவ்ஸ்கி கூறுகிருர். இந்தக் கருத்துக்கள், அவை எழுதப்பட்ட காலத்தைக் காட்டிலும் தற்போது மிகவும் பழக்கமானதாகத் தோன்றுகின்றன. இன் றைய ரஷிய தத்துவ அறிஞர் ஒருவரின் பாராட்டு தலுக்கு இவை பொருத்தமாக அமைந்திருக்கின்றன.

"இது ஓர் உயர்தர துண்டுப் பிரசுரமாக ஆரம்ப மாயிற்று; பின்னர் சரித்திர, சமூகக்கலேத் தத்துவங்

கள் பற்றிய உன்னதமான ஆராய்ச்சியிலும், மகத்தான அரசியல் தீர்க்க தரிசனத்திலும் நிகரற்று விளங்கும் அளவுக்கு இதன் அரசியல் அபிப்ராயங்களும் வாதங்களும் வெளியாயின.

இதன் அரசியல் பகுதிகளைப் படிக்கும் பொழுது, ரஷிய-ஐரோப்பிய உறவு பற்றிய டானி லெவ்ஸ்கியின் கருத்துக்களுக்கும், ரஷிய சர்க்காரின் கருத்துக்களுக்குமிடையில் வித்தியாசமே இல்லை என்பது தெரியும். ரஷிய சர்க்காரின் கொள்கைகளிலிருந்தும், பிரசாரங்களிலிருந்தும் மார்க்ஸீய சொற்றொடர்களையும் வேறு சில சிறு அம்சங்களையும் நீக்கிவிட்டால் ரஷிய-ஐரோப்பிய உறவு பற்றிய டானி லெவ்ஸ்கியின் கருத்துக்களும் சோவியத் தலைவர்களின் கருத்துக்களும் ஒரே மாதிரி இருக்கும்.

## 3

## ஆஸ்வால்ட் ஸ்பெங்லரின் தீர்க்க திருஷ்டி

ஆஸ்வால்ட் ஸ்பெங்லர் ஓர் அற்புதமான மனிதர் அவருடைய மண்டையில் நாகரிகங்களின் வாழ்வும் தாழ்வும் பற்றிய ஒரு மகத்தான கருத்து உதித்தது. அந்தக் கருத்துக்குப் பிற்காலத்தில் பெரும் முக்கியத்துவம் ஏற்பட்டது. ஸ்பெங்லரின் "மேற்கின் அஸ்தமனம்" என்ற நூல் 1911-ம் வருஷத்தில் முதல் மகா யுத்தத்திற்குமுன் முதல் முறையாக அவர் மனத்தில் உதித்தது. ஸெரஜோவோவில் சுடப்பட்ட முதல் குண்டு உலக சரித்திரத்தில் ஒரு புதிய சகாப்தத்தை ஆரம்பிப்பதற்குள் அந்த நூலை எழுதி முடித்தார். ஸ்பெங்லர் முன்கூட்டிச் சொன்ன பல கருத்துக்கள் இந்தச் சகாப்தத்தில் நூற்றுக்கு நூறு நிரூபணமாயின. யுத்தத்தின்போது தமது நூலை அவர் இன்னமும் விரிவாக்கினார். 1918-ம் வருஷத்திய கோடை

காலத்தில் புத்தகம் வெளிவந்தது. ஜெர்மன், ஆஸ்ட்ரிய நொறுங்கிக்கொண் டிருந்த சாம்ராஜ்யங்களில் இருந்த புத்தகக் கடைகளில் இந்நூல் காட்சியளித்த பொழுது, இதன் தலைப்புக்கேற்ப, ஐரோப்பாவுக்கு நேர்ந்துள்ள விதியையே இது விளக்குவதாகப் பலர் கருதினர். உலகத்தின் இயற்கையான தலைவன் என்றும், எல்லா அறிவுக்கும் தொழில் உற்பத்திக்கும் மூலதனத்திற்கும் உற்பத்தி ஸ்தானம் என்றும் நினைத்திருந்த உயர்வு மனப்பான்மை ஆட்டங்கொடுத்திருந்த ஐரோப்பா வைப்பற்றி, தோல்வியடைந்த நாடுகளுக்கு வெளியே யும் மக்கள் மனத்தில் இப்புத்தகம் ஆழப் பதிந்தது. இதே காரணத்தினால் இரண்டாவது உலக யுத்தத் திற்குப் பிறகும் ஸ்பெங்லரின் புத்தகத்தில் புது அக் கரை பிறந்து ஜெர்மனியிலும் அமெரிக்காவிலும் அதன் புதிய பதிப்புகள் வெளியாயின. அவருக்குப் பெரிதும் மதிப்புக் கொடுக்கப்படும் ஐரோப்பாவிலேயே அவ ருடைய நூலை மிகச் சிலரே படித்திருப்பார்கள். அமெ ரிக்காவிலோ பொதுமக்களில் வெகு சிலரே அவரைப் பற்றி அறிவர்.

இரண்டு பாகங்கள் கொண்ட அப்புத்தகத்துடன் போராடியவர்களுக்கு இது ஆச்சரியமாக இராது. போதிய அளவு மக்கள் இவற்றைக் கஷ்டப்பட்டுப் படித்து, ஐரோப்பாவின் மனத்தைக் கவர்ந்த இரு அத் தியாயங்களையும் கண்டு பிடித்தது தான் அதைக் காட்டிலும் ஆச்சரியம். இத்தகைய விஷயத்தைப்பற்றி சாஸ்திரீய முறையில் எழுதப்பட்ட எந்தப் புத்தகமும் படிப்பதற்குக் கஷ்டமாகத்தான் இருக்கும்.

இந்நூலைச் சல்லடை போட்டுச் சலித்து வியாக் யானங்களைத் துருவினால் இதிலிருந்து இரு வெவ் வேறு ஸ்பெங்லர்களின் சித்திரங்கள் வெளிப்படும். ஒன்று நாஸிஸத்தின் பிதாவான சர்வாதிகார, ராணுவ பல வாதியான ஸ்பெங்லரின் சித்திரம். மற்றொன்று

விஞ்ஞானி, சிந்தனையாளர், வேதாந்தி, தீர்க்கதரிசியான ஸ்பெங்லரின் சித்திரம். ஒருவர் ஹிட்லரின் ஆத்மீகத் தந்தை ; மற்றொருவர் கெதேயின் ஆத்மீக மகன். முரணான இந்த இரட்டைத் தன்மையை ஸ்பெங்லரே உணர்ந்திருக்க வேண்டும். நடு நிலைமை, ஒழுக்கம், லக்ஷியவாதம், வேதாந்தம் முதலிய சீரிய கருத்துக்களை அவர் ஒதுக்கித் தள்ளும் வேகத்திலிருந்து இதை நன்கு உணர முடியும். இத்தகைய கருத்துக்கள் தம்மை பாதிக்கக்கூடுமென்று அஞ்சும் ஒருவர்தான் இவற்றை இவ்வளவு ஆவேசத்துடன் ஒதுக்கித்தள்ள முடியும்.

இந்த இரு அம்சங்களையும் தனித்தனியே பிரிக்க, ஸ்பெங்லரின் சொந்தக் கருத்துக்களுக்கு அடிப்படையாக உள்ள அம்சங்களை எடுத்துக் காட்டுவோம். கிறிஸ்தவ மதத்திலும் மனித சுதந்திரத்திலும் வேர் விட்டிருக்கும் நாகரிகத்தின் கண்ணோட்டத்துடன் பார்த்தால் காரணமில்லாத துவேஷமாகவே இவற்றைக் கருதவேண்டும். இருந்தாலும், இந்தத் துவேஷத்தை மேலாக அகற்றிவிட்டால், நாகரிகங்களை ஒத்திட்டுப் பார்க்க ஸ்பெங்லர் வகுத்த வரம்புச் சட்டம் இன்னும் அப்படியே இருப்பது தெரியும்.

இந்த வரம்புச் சட்டந்தான் என்ன ?

ஸ்பெங்லரின் சித்தாந்தத்தை எளிய முறையில் சுருக்கிச் சொல்வதென்றால் இதுதான் :

இயற்கையின் எல்லாச் சக்திகளையும்போல் நாகரிகங்களும் பிறப்பு, வளர்ச்சி, தாழ்வு, அழிவு என்ற பொது நியதிப்படியே செல்கின்றன. ஆகையால் பல வேறு நாகரிகங்களுக்குமிடையில் ஓர் ஒற்றுமை கண்டு அவற்றின் அரசியல், பொருளாதாரம், மதம், கலை, சாஸ்திரங்கள், கட்டுப்பாடான சமூகத்தின் மற்ற அம்சங்கள் முதலியவற்றை ஒப்பிட்டுப் பார்ப்பது சாத்தியமே. நூற்றுக்கணக்கான உதாரணங்களை எடுத்

துக் காட்டி இவற்றை ஒப்பிடுகிறார் ஸ்பெங்லர். சில சமயங்களில் இதன் விளைவு பிரமாதமாக இருக்கிறது. சில சமயங்களில் அபத்தத்தின் எல்லையை எட்டுகிறது. இவ்விதம் கலாசாரங்களின் அமைப்புக் கலையை நிர்மாணிக்கிறார் அவர்.

ஸ்பெங்லரின் அடிப்படைத் தத்துவம் சரியென்றால், இந்த சாஸ்திரம், நாகரிகங்களின் கடந்த கால வரலாறுகளை நாம் ஒப்பிட்டுப் பார்க்கவும் அவற்றின் எதிர்காலப் போக்கை முன்கூட்டி அறியவும் உதவுகிறது. இதுதான் ஸ்பெங்லர் செய்தது. மேற்கத்தி உலகத்தின் மனத்தில் ஆழப் பதிந்ததும் இதுதான். ஸ்பெங்லரின் முடிவுகளை மதிப்பிட வேண்டுமானால், நாகரிகங்களுக்கு அவர் வகுத்த பொது அமைப்பை முதலில் பார்க்க வேண்டும்.

கெதேயின் உதாரணத்தைப் பின்பற்றி, கலாசாரத்தில் அடுத்தடுத்து நான்கு கட்டங்கள் வருவதாக ஸ்பெங்லர் கூறுகிறார். பூர்வாங்க நிலை, நாகரிக நிலை என்று அவற்றைப் பிரிக்கிறார். "ஆரம்ப" நிலைக்கும் "பிந்திய" நிலைக்கும் மட்டும்தான் (அதாவது மலர்ச்சிப் பருவத்திற்கும் பலன் தரும் பருவத்திற்கும் மட்டும்தான்.) கலாசாரம் என்ற வார்த்தையை அவர் உபயோகிக்கிறார். மங்கிப்போகும் கடைசி கட்டத்திற்கு "நாகரிகம்" என்ற வார்த்தையை உபயோகிக்கிறார். மற்ற ஆசிரியர்கள் "ஜீவனுள்ள நாகரிகம்" என்பதை இவர் "கலாசாரம்" என்கிறார். "அழிந்து போகும் நாகரிகம்" என்று மற்றவர்கள் குறிப்பிடுவதை இவர் 'நாகரிகம்' என்றார்.

ஒரு கலாசாரம் பிறப்பதற்கு முன்னால் "கலாசாரப் பூர்வாங்க" காலம் ஒன்று நிகழ்கிறது. இரு கலாசாரங்களுக்கிடையே காலத்திலாவது இடத்திலாவது இது இடைவெளியாக விளங்கும். எப்பொழுதும் போல் இந்தக் காலத்திலும் மக்கள் பிறக்கிறார்கள்,

வாழ்கிறார்கள், காதல் புரிகிறார்கள், இறக்கிறார்கள். ஆனால் இந்தக் காலத்தில் சமூகம் கட்டுக்கோப்பான உருப் பெறுவதில்லை. ஒரு கலாசாரத்திற்குத் தேவையான முக்கியத்துவம் வாய்ந்த மதத்தையோ கலையையோ உண்டாக்குவதில்லை. ஸ்பெங்லரின் வார்த்தைகளில் இதற்கு "சரித்திரமற்ற" சமூகம் என்று பெயர். உடனிருக்கும் கலாசாரங்களுக்கு முக்கியத்துவம் வாய்ந்த சம்பவங்கள் இதில் நிகழ்ந்த போதிலும், நாகரிகத்தின் வளர்ச்சிக்குத் தேவையான முக்கிய சம்பவம் எதுவும் இதில் நிகழவில்லை என்பதுதான் இதன் கருத்து.

மேற்கத்தி நாகரிகத்தைப் பொருத்த வரையில் மைஸீனிய நாகரிகத்தைக் கவனிக்கும் பொழுது (கி. பி. 1600 முதல் 1100 வரை) மெரோவிங்கி—கரோலிங்கிய சகாப்தத்தை, (அதாவது கி. பி. 500 முதல் 900-ஆவது வருஷம் வரை உள்ள காலத்தை) இந்தக் கலாசார பூர்வாங்க காலம் எனலாம்.

ஒரு "கலாசாரத்தின்" பிறப்புக்கு, கலைகள், சாஸ்திரங்கள், மதம் முதலிய துறைகளில் சக்தி வாய்ந்த, எளிய பாணி தோன்றுவது ஓர் அடையாளம். இத்துடன் இந்தியாவில் தோன்றிய வேத மதமும், கிரீஸில் தோன்றிய ஹோமர் இலக்கியம் போன்ற மஹத்தான பாணியில் அமைந்த கடவுள் கதைகளும் தோன்றுகின்றன. இந்த அடையாளங்களைக் கொண்டு பார்த்தால் மேற்கத்தி நாகரிகம் கி. பி. 900-ஆவது வருஷத்திலும் உண்மைக் கலாசாரம் கி. பி 1100-ஆம் ஆண்டிலும் தோன்றியதாகக் கொள்ளலாம்.

கலாசாரத்தின் ஆரம்ப காலத்தை அரசியல் துறையில் நிலப் பிரபுத்துவம் ஆதிக்கம் செலுத்துகிறது. பொருள் உற்பத்தியின் முக்கியமான சாதனம் நிலம்தான். ஆகையால் அரசியல் துறையில் கிராமாந்திரப் பகுதிகளில் அவற்றின் சொந்தக்காரர்கள், (நிலப்

பிரபுக்கள்) ஆதிக்கம் செலுத்துகின்றனர். ஆத்மீகத் துறையில் சேவா லக்ஷியம் தோன்றுகிறது. இக் காலத்தின் பொருளாதாரம் விவசாயத்தையே முக்கிய அடிப்படையாகக் கொண்டது. "நகரம்" என்பது கடைத் தெருவையும் கோட்டையையும் தவிர வேறில்லை. சிற்றரசர்கள் தங்களுக்குள்ளும், தங்க ளுக்குமேல் உள்ள ஆட்சியாளர்களுக்கெதிராகவும் போராடியதன் விளைவாக நிலப் பிரபுத்துவ முறை சிறிது சிறிதாக அழிந்து, நகரங்களும் பிரபுக்களின் ஆட்சியும் தோன்றுகின்றன. முதல் கட்டம் இதோடு முடிவடைகிறது. சீனுவில் கி. மு. 1300 முதல் 800 வரை உள்ள ஆரம்ப சூ (Chow) காலமும், ஐரோப்பா வில் கி. பி. 900 முதல் 1500 வரை உள்ள ஜெர்மன்-ரோமன் சாம்ராஜ்ய காலமும் இந்தக் கட்டத்தில் இருந்த தாகக் கூறலாம்.

நகரங்கள் தோன்றி வளரத் தொடங்கும்பொழுது புதிய கட்டம் ஆரம்பமாகிறது. கலாசாரப் பிற்பகுதி காலம் இது. கிரீஸில் கி. மு 650 முதல் 300 வரை நிலவிய அயோனிக் காலத்தை இதற்கு ஒப்பிடலாம். ரோம சாம்ராஜ்யத்தில் எட்ருஸ்கன் மன்னர்களின் ஆட்சி மறைந்து பிரபுக்களின் ஆட்சி தோன்றிப் பின்னர் பிரபுக்களுக்கும் பாமர மக்களுக்குமிடையில் போராட்டம் மூண்டது. மேற்கத்தி நாகரிகத்தில் கி. பி. 1500 முதல் 1800 வரை உள்ள பரோக் காலத்தில் இந்தக் கட்டம் நிலவியதாகச் சொல்லலாம். ஆனால் இத்தாலியிலும் பிரான்ஸிலும் மறுமலர்ச்சி நகரங் களும், வடமேற்கு ஐரோப்பாவில் ஹன்ஸா நகரங் களும் தோன்றியபோதே இந்தக் கட்டம் ஆரம்பமாகி விட்டதெனலாம். பிரெஞ்சுப் புரட்சியில் மத்திய தர வகுப்பின் வெற்றியோடு இது முடிவடைந்தது. சீனு வில் கி. மு. 800 முதல் 500 வரை உள்ள சூ காலத்தின் பிற்பகுதி இந்தக் கட்டமாகும். பிரெஞ்சுப் புரட்சி

யோடு ஒப்பிடக்கூடிய சம்பவமாகிய, கி. மு. 441-ம் வருஷம் நிகழ்ந்த சூ வம்சத்தின் வீழ்ச்சியோடு அங்கு இக் கட்டம் முடிந்தது.

இந்தக் கலாசாரப் பிற்பகுதிக் காலத்தில் நகரங்கள் தோன்றி மலர்கின்றன. "உலக சரித்திரம் என்பது நகர சரித்திரமே" என்பதை ஸ்பெங்லரைப்போல் இத்தனை தெளிவாக ஒருவரும் நிரூபிக்கவில்லை.

"எல்லாப் பெரிய கலாசாரங்களும் நகர கலாசாரங்களே என்பது இறுதியான உண்மை. இரண்டாவது கட்டத்தைச் சேர்ந்த வளர்ச்சி பெற்ற மனிதன் நகரப் பிராணியே. மனித சரித்திரத்தை உலக சரித்திரத்திலிருந்து வேறு படுத்திக் காட்டும் அம்சம் இதோ இருக்கிறது—உலக சரித்திரம் நகர மனிதனின் சரித்திரமாகும். மக்கள், ராஜ்யங்கள், மதம், கலைகள், சாஸ்திரங்கள் எல்லாம் மனிதனின் ஒரே முக்கியமான நிகழ்ச்சியை ஆதாரமாகக்கொண் டிருக்கின்றன. அதுதான் நகரம்

ஆனால் அற்புதம். "ஒரு நகரத்தை கிராமத்திலிருந்து வேறு படுத்திக் காட்டுவது அதன் அளவல்ல; அதன் ஜீவன்தான்" என்றார் ஸ்பெங்லர்.

நகரங்களில் மத்திய தர வகுப்பு தோன்றுகிறது. ஒவ்வொரு கலாசாரத்திலும் உள்ள பிரபுக்களிடமிருந்தும் மதத் தலைவர்களிடமிருந்து அரசியல், பொருளாதார, ஆத்மீக அதிகாரங்களை இந்த வகுப்பு படிப்படியாகக் கைப்பற்றுகிறது. கலை, சாஸ்திரத் துறைகளில் திறமை வாய்ந்த தனி நபர்களிடம் நாகரிகக் கலைகள் பிறக்கின்றன. மாபெருங்கலை வல்லுநர்களின் காலம் இது. கிரீஸில் ஐந்தாம் நூற்றுண்டில் தோன்றிய சிற்பிகளும், தத்துவ ஞானிகளும், இத்தாலியிலும் ஹாலந்திலும் தோன்றிய ஓவியர்களும், ஜெர்மனியில் தோன்றிய பிரம்மாண்டமான சங்கீத வாக்கேயகாரர்களும், சீர்திருத்த வாதிகளும், ஜீவகாருண்ய

வாதிகளும், பிறகு பதினேழாம் நூற்றுண்டில் தோன்றிய ஆங்கிலேய பகுத்தறிவு வாதிகளும், உதாரணங்களாவர். நகரத்தில் வாழ்க்கை வரவர மந்தமாகி, உணர்ச்சியும், அறிவும் அதிக சக்தி பெறு கின்றன; மனிதன் அறிவாளியாகவும், நாடோடி களைப்போல் சுதந்திரனுகவும் ஆகிருன். ஆனுல் அவன் தோற்றத்தில் நாடோடிகளைப்போல் இருந்தாலும் அவர்களைவிட மோசமாகவும் குறுகிய மனப்பான்மை உள்ளவனுவும் ஆகிவிடுகிருன். எல்லாக் கலைகளிலும் மதங்களிலும் அறிவு ஆதிக்கம் பெற்று நாட்டிற்கு அந்நியமாகவும், சாதாரண மக்களுக்குப் புரியாமலும் ஆகிவிடுகிறது.

நகரங்களின் பொருளாதாரத் துறைகளிலும் முறைகளிலும் பணம் முக்கியமான சக்தியாகி விடுகிறது. இதுவும் நாட்டுடன் தொடர் பற்றதாகி விடுகிறது. சுருங்கச் சொல்வதென்றுல் எல்லா விஷ யங்களிலுமே கிராமங்களை நகரங்களும் நில் சொத்துக் களைப் பணமும், சம்பிரதாயத்தை அறிவும், விசேஷ சலுகை வர்க்கத்தினரை இதர பெருவாரியான மக்க ளும் வெற்றி கொள்வதாக முடியாது.

கடைசியாக நாம் ''நாகரிகம்'' என்று ஸ்பெங்லர் வர்ணிக்கும் கட்டத்துக்கு வந்து சேர்கிருேம். இது ஒவ்வொரு கலாசாரமும் இறுதியாகப் பூரணத்துவம் பெற்று விளங்கும். ஆனுல் ஆக்க வேலை குறையும் காலமாகும். நம்மைப் பொறுத்தவரையில் இது மிகவும் முக்கியமான கட்டமாகும். நெப்போலியன் காலத்திலிருந்து இந்த சகாப்தம் ஆரம்பித்து விட்ட தாக ஸ்பெங்லர் கூறுகிருர்.

அரசியல் ரீதியில் இந்தக் காலத்தை இரண்டாகப் பிரிக்கலாம். முதற் பகுதியை, சீன சரித்திரத்தில் காணப்படும் ''சமாளிப்புக் காலம்'' என்ற பெயர் நன்ருக விளக்குகிறது. இது பற்றி ஸ்பெங்லர் பின்

வருமாறு கூறுகிருர்.

"கி. மு. 480 முதல் 230 வரை உள்ள காலத்தை தேசங்கள் சமாளித்துக்கொண்டு செல்லும் காலம்'' என்று சீன சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர். இதற்குப் பின் பெருஞ்சேனைகளுக்கிடையே ஒரு நூற்ருண்டு காலம் இடைவிடாத போராட்டம் நிகழ்ந்தது. இதனுல் பயங்கரமான சமூகக் குழப்பங்களும், அதிலிருந்து சீன சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த சீன ஆட்சியும் தோன்றின. எகிப்தில் இந்த கட்டம் 1780 முதல் 1580 வரை நிலவியது. 19, 20-ஆம் நூற்ருண்டுகளில் மேற்கு ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளின் கதியும் இதுதான்.

இந்தக் காலத்தில் மத்திய கனம் (Centre of Gravity) அட்டிகாவிலிருந்து லாடியத்திற்கும், ஹவாஸ்-ஹோவிலிருந்து (ஹோ-ஞன்-பு-வில்) யாஸ்-ட்ளிக்கும் (தற்கால ஹுபே மாகாணம்) மாறியது போல, மாறுகிறது.

முப்பது வருஷத்தில் மத்திய கனம் அட்லாண்டிக்கைக் கடந்து சென்று விடுமென்பதை ஆசிரியரால் அப்பொழுது சொல்ல முடியவில்லை. இதை அவர் தம்முடைய தீர்க்க தரிசனத்தில் உணர்ந்து கூறியிருக்க முடியும்.

சமாளிப்புக் காலம் சுமார் இரண்டு நூற்ருண்டுகள் நீடிப்பது வழக்கம். போராடும் நாடுகளில் ஏதாவது ஒன்று இறுதியாக வெற்றி பெறும்பொழுது இந்த சகாப்தம் முடிவடையும். வெற்றி பெறும் தேசத்தின் அதிகாரம் ஏதாவது ஓர் உருவத்தில், நாகரிகம் பரவியுள்ள பிரதேசம் முழுமையிலும் வியாபிக்கிறது; ஏகாதிபத்திய ஆட்சி பிறக்கிறது; இதோடு நாகரிகத்தின் கடைசி கட்டமும் ஆரம்பமாகிவிடுகிறது. இந்தக் காலத்தில் நாகரிக உலகம் முழுதும் ஒரே இடத்திலிருந்து, சர்வ அதிகாரமும் பெற்ற தலைவனுல் நேரடி

யாகவோ மறைமுகமாகவோ, உத்தியோக பூர்வமாகவோ உத்தியோகத் தொடர்பின்றியோ ஆளப்படுகிறது. இவ்விதம் ஆள்பவருக்கு சீஸர் என்றும் சக்ரவர்த்தி என்றும் மொகலாயர் என்றும் பட்டம் எது வேண்டுமானுலும் இருக்கலாம். இனி, சாம்ராஜ்யத்திற்கு உள்ள நாடுகளிடையே யுத்தம் என்ற பேச்சே கிடையாது. ஆகையால் உலக சமாதானத்தைப் பற்றிப் பேசலாம்.

ஒவ்வொரு நாகரிகத்திற்கும் குளிர் காலமாகிய இந்தக் கடைசி கட்டத்தில் மஹாயுத்தங்கள் நிகழ்கின்றன. மேலே ஸ்தூலமாகக் கூறியதைத் தவிர, இந்த கடைசி கட்டத்தை ஸ்பெங்லர், கீழ்க்கண்டவாறு விவரிக்கிருர்.

## 4

## நாகரிகத்தின் கடைசிகட்ட லக்ஷணங்கள்

நாகரிகமடைந்த பிரதேசம் முழுமையும் ஒரு அதிகாரத்தின் கீழ்,-ஒரே மனிதனின் ஆட்சியின் கீழ்-இருப்பதால் அந்தத் தேசங்களுக்கிடையில் யுத்தம் நடப்பதில்லே. ஆயினும் இரத்தம் சிந்துவதே இத்துடன் முடிந்துவிட்டதாக அர்த்தமில்லே; தேசீய நலன்கள், போராட்டங்கள் ஆகியவற்றிற்காக நடைபெறும் போராட்டங்களுக்கு பதில் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான தனிப்பட்ட போராட்டங்கள் நிகழ்கின்றன. சீஸர்கள், தனிப்பட்ட பலசாலிகள், சர்வாதிகாரிகள், ராணுவ ஆட்சியாளர்களின் காலம் இது. கொள்ளேக் கூட்டத் தத்துவ காலம். நாடுகளுக்கிடையே போராட்டங்கள் நிகழும் காலத்திலேயே இந்த ஆட்சியாளர்கள் தோன்றி விடுகின்றனர். ஆனுல் உலக சமாதான காலம் வந்த பிறகுதான் இவர்களுக்குப் பூரண சந்தர்ப்பம் கிடைக்கிறது. ஆதிக்க ஆசையை நாடுகள் கை

விட்டவுடன் தனி நபர்களுக்கு அதிகார ஆசை ஏற்படு கிறது.

"உலக சமாதான சகாப்தத்தில் நிகழும் தனிப் பட்ட யுத்தங்கள், நாடுகளுக்கிடையே நடக்கும் யுத்தங்களைவிட அதிக பயங்கரமானவை. ஏனெனில் இவற்றிற்கு உருவமில்லை. உலக சமாதானத்திற்கு, பெரும்பாலானவர்கள் தனிப்பட்ட முறையில் யுத்தத் தைத் துறக்கின்றனர். ஆனால் யுத்தத்தைத் துறக் காதவர்களுக்கு இது பெரிய வாய்ப்பாக ஆகிவிடு கிறது."

"உலக சமாதானம் என்பது எப்பொழுதுமே ஒரு தலைப்பக்ஷமான முடிவுதான். யுத்தம் செய்வதில்லை யென்ற சமாதானக் கொள்கை ராணுவ சக்கரவர்த்தி களுக்கும், கொள்ளைக்கார அரசர்களுக்கும் ஒரே ஒரு விதத்தில்தான் முக்கியத்துவம் வாய்ந்தது. அதாவது, சிறு வீரர் கோஷ்டிகள் அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டுமென்ற உறுதிக்கு இலக்காகக் கூடிய உருவ மற்ற பத்து கோடி மக்களைத் தயார் செய்கிறது என்ற அளவில்தான் இக் கொள்கை முக்கியத்துவம் வாய்ந்த தாகிறது. சமாதானத்தையே இந்தச் சமாதானம் பலி வாங்குகிறது. பாபிலோனிய, சீன, இந்திய, எகிப்திய உலகங்கள் ஒரு வெற்றி வீரன் கையிலிருந்து மற்றொரு வெற்றி வீரன் கைக்கு மாறுகின்றன. அந்த நாடு களின் ரத்தமே இப் போட்டிக்கு விலை. அவற்றின் சமாதானம் இதுதான்.

"துணிகரமான பதினாயிரம் வீர புருஷர்களைத் தன் னுடன் சேர்த்துக்கொள்ளக்கூடிய ஓர் உறுதியான தலைவன், தான் நினைத்தபடியெல்லாம் செய்ய முடியும்."

"பிரம்மாண்ட நகரங்களின்" வளர்ச்சியையும், மனத்தை மயக்கி மனிதர்களைக் கல்லாய்ச் சமைக்கும் இந்தப் பேயின் எழிலையும், உயிரை வாங்கும் எமப்

பிடியையும், ஸ்பெங்லரைப்போல் தீர்க்க திருஷ்டியுடன் கண்டு, தத்ரூபமாக வர்ணித்தவர்கள் வேறு ஒருவரும் இல்லே. இந்தப் பயங்கர நகரம் ஒவ்வொரு நாகரிகத்தின் அந்திய காலத்திலும் மரண அழகுடனும், அடக்க முடியாத கவர்ச்சியுடனும் மலர்கிறது.

"கடைசியில், பூரண விடுதலே பெற்ற அறிவின் ராக்ஷஸச் சின்னமாக, உலக நகரம் தோன்றுகிறது. உலக சரித்திரத்தின் போக்கு இதில் வந்துதான் முடிவடைகிறது. ஒவ்வொரு நாகரிகத்திலும் சில பிரம்மாண்டமான இடங்கள் தோன்றி, "பட்டிக்காடு" என்ற வெறுக்கத்தக்க பெயருடன் தாய் நாடு முழுவதிலும், அதன் கலாசாரத்தையே மதிப்பற்றதாகச் செய்து விடுகின்றன. இந்த இரண்டு மூன்று இடங்களேத் தவிர மற்ற எல்லாமே பட்டிக்காடுதான். இதன் பிறகு பிரபுக்களோ, மத்திய தர வகுப்பினரோ, சுதந்திர புருஷர்களோ, அடிமைகளோ, நாகரிகமானவர்களோ, காட்டு மிராண்டிகளோ, ஆஸ்திகர்களோ. நாஸ்திகர்களோ, இருக்க மாட்டார்கள். பட்டணவாசிகளும், நாட்டுப்புறத்தார்களும் மட்டும்தான் இருப்பார்கள்."

நம்ப முடியாத தீர்க்க திருஷ்டியுடன் நம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் பின்வரும் ஜோஸ்யத்தை ஸ்பெங்லர் எழுதினுர்.

"மேற்கத்தி நாகரிகத்தின் உலக நகரங்கள் இன்னமும் வளர்ச்சியின் உச்ச நிலேயை அடைந்துவிடவில்லே. கி. பி. 2000-ஆவது வருஷத்திற்கு வெகு காலத்திற்குப் பின், ஒரு கோடி அல்லது இரண்டு கோடி மக்கள் வசிக்கக்கூடிய பிரம்மாண்டமான நகரங்கள் தோன்றும். தற்காலத்திய மிகப் பெரிய கட்டிடங்கள்கூட மிகச் சிறியவையாகத் தோன்றக் கூடிய பிரம்மாண்டமான கட்டிடங்கள் எழும். போக்கு வரத்து சாதனங்களேப் பற்றிய அப்போதைய கருத்

துக்கள் பைத்தியக்காரத்தனம்போல் நமக்குத் தோன்றும்'' என்கிருர் ஸ்பெங்லர்.

ஒவ்வொரு நாகரிகத்தின் கடைசி கட்டத்திற்கும் உள்ள மற்ருேர் அம்சமாகிய விசித்திரமானதொரு மனித ஜாதியை உலக நகரம் உற்பத்தி செய்கிறது.

''குடும்பம் புனிதமான விஷயமாகக் கருதப்படும் வரையில் நிலத்துடன் உள்ள பழைய தொடர்பு அடியோடு மறைந்து விடுவதில்லை. ஆனுல் பிறகு மற்றவற்றைப்போல் இதுவும் மறைந்து விடுகிறது. வீடுகளாலான சமுத்திரம் போன்ற நகரில் வசிப்பவர்கள், காட்டு மிராண்டி காலத்தைச் சேர்ந்த வேட்டைக்காரர்களைப்போல் வீட்டுக்கு வீடு மாறி ஒரு நிலையில்லாத வாழ்க்கை நடத்துகின்றனர். பின்னர்தான் ''அறிவாளி - நாடோடி'' பூரண வளர்ச்சி பெற்றவனுகிருன்.''

நம் காலத்தைப்பற்றிய மற்ருெரு பிரத்யட்ச உண்மையும் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதாவது: சிம்மாசனத்திலிருந்து விலக்கப்பட்ட எகிப்திய மன்னன் ஒருவன், ரோமாபுரியின் இத்தகைய ஒரு சிறு கட்டிடத்தில் வசித்ததாக தியோடரஸ் கூறுகிருர்.

அவருடைய வர்ணனை வருமாறு:

''வெகு காலத்திற்கு முன் கிராமங்கள், கிராமாந்தர நகரங்களை உண்டாக்கி, அவற்றைத் தங்களுடைய ரத்தத்தைக் கொடுத்து வளர்த்தன. இப்பொழுது இந்த ராக்ஷஸ நகரங்கள் கிராமங்களை உறிஞ்சி, புதுப் புது மனிதக் கூட்டங்களை மேன்மேலும் விழுங்குகின்றன. கடைசியில் இவை மனித சஞ்சாரமற்றுப் பாழாகும் விரைவில் இவ்விதம் விழுங்கிக் கொண்டேயிருக்கும். இந்த நகரங்களின் அழகு, அதற்குப் பலியாகிறவர்களை ஒருமுறை பற்றிக் கொண்டால் மறுபடியும் விடுவதே யில்லை. பூர்வீகக் குடிகள் தங்கள் இருப்பிடங்களை விட்டுத் திரியக் கூடும். ஆனுல் அறிவாளி நாடோடிகள் அப்படிச் செய்யமாட்டார்கள்.

இவர்களுடைய நகரப் பற்று மிகவும் தீவிரமானது. இவர்கள் எந்தப் பெரிய நகரத்தை வேண்டுமானாலும் தங்கள் சொந்த வீடுபோல் பாவிப்பார்கள். ஆனால் ஒரு கிராமம் பக்கத்தில் இருந்தால் கூட அது அயல் நாடுபோல் தோன்றும். இவர்கள் நகரங்களிலேயே நடை பாதையில் கிடந்து செத்தாலும் சாவார்கள்; கிராமத்திற்குத் திரும்பிப் போகமாட்டார்கள்.

உலக நகரங்கள் இயங்கி வரும் அதே சமயத்தில் அவற்றின் ஜனத் தொகை உயர்வு படிப்படியாகக் குறைகிறது. பிறகு தேக்கங் கண்டு, கடைசியில் குறையத் தொடங்குகிறது. இது பல நூற்றாண்டுகள் நீடிக்கக் கூடும். நாகரிக மனிதனின் பேடித்தனம், நாகரிகமாகிற நாடகத்திற்கு முற்றுப் புள்ளி வைக்கிறது.

"இது மரணத்தை நோக்கிய திருப்பம்" என்கிறார் ஸ்பெங்லர். இதற்குமேல் மனித இனம் வாழ விரும்புவதில்லை. வாழ்க்கையே சந்தேகத்திற்கிடமானதாகி விடுகிறது.

"நாகரிகமடைந்த மக்கள் குழந்தை பெற்றுக் கொள்வதில் லாப நஷ்டக் கணக்குப் பார்க்கத் தொடங்கும்பொழுது இந்தத் திருப்பம் ஆரம்பமாகி விட்டது என்றுதான் அர்த்தம்.

"வாழ்க்கை சம்பந்தமான ஒரு பிரச்னைக்குக் காரணம் கூறவேண்டுமென்றால் வாழ்க்கையே சந்தேகத்திற்கிடமாகிவிட்டது என்றுதான் அர்த்தம். அப்பொழுது ஜனன விகிதம் கட்டுப்படுத்தப்படுகிறது. கிரேக்க சாம்ராஜ்யத்தில், இதை, 'கிரீஸின் அழிவு' என்று கூறி பாலிபியஸ் கண்டித்தார். ஆனால் அவர் காலத்திலேயே பெரிய நகரங்களில் இது வந்து விட்டது. முதலில் இதற்குப் பொருளாதாரக் கஷ்டம் காரணமென்று சொல்லப்பட்டது. பிறகு காரணமே சொல்ல முடியவில்லை."

இந்த மாறுதல்களின் விளைவாக, ஒவ்வொரு நாகரிகத்தின் அந்திய காலத்திலும் உலக நகரங்களின் ஜனத்தொகை குறைகிறது. கடைசியில், தற்காலக் காட்டு மிராண்டிகள் பெரிய பாறைகளைத் தங்கள் ஸ்தலமாக உபயோகித்ததுபோல, இந்தப் பிரம்மாண்ட நகரங்களின் கற்களை வாசஸ்தலமாக உபயோகித்துக் கொண்டு சிறு கோஷ்டிகள் வசிக்கின்றன.

சீன யாத்திரிகரான ஹ்யூன்-ட்ஸாங் கி. பி. 635-ம் ஆண்டில், அசோக சக்ரவர்த்தியின் தலைநகரான பாடலீபுரத்திற்கு விஜயம் செய்த பொழுது இப்படித் தான், ஜனசந்தடியற்ற பிரம்மாண்டமான பாழ் நகர மாக அது காட்சி அளித்தது.

"பழம் பெரும் நகரங்கள் உளுத்து உதிரும் வெறுந்தெருக்களாகிவிட்டதாக பாலிபியஸ் முதலான பல லட்சிய எழுத்தாளர்கள் எழுதியிருப்பதைக் காண் கிறோம். உடற்பயிற்சி கூடங்கள் மாடு மேயும் புல் தரைகளாகவும், விளையாட்டு மைதானங்கள், இடை யிடையே புதர்களிலிருந்து எட்டிப் பார்க்கும் சிலைக ளுடன் கூடிய, பூண்டுகள் மண்டிக்கிடக்கும் வயல் வெளிகளாகவும் ஆகிவிட்டதாக அவர்கள் சொல் கின்றனர். நமது சகாப்தத்தின் ஐந்தாம் நூற்றாண் டில், ரோம் நகரில் ஒரு கிராமத்தின் ஜனத்தொகைதான் இருந்ததாம். ஆனால் அங்கு இருந்த அரண்மனைகளோ இன்னும் வசிக்கத் தகுந்தவையாகவே இருந்தன.

"நகரங்கள் வளர்ந்து பின்னர் உலக நகரம் முக் கியத்துவம் பெற்று, மண்ணுடன் எல்லாத் தொடர்பும் அற்று, அறிவுத் தத்துவம் ஆட்சி செலுத்தத் தொடங் கிய பின் பணத்தின் சக்தி உச்ச நிலையை அடைகிறது. ஆரம்ப காலத்தில் உண்மையான மதிப்புள்ள பொருள் களாகிய நிலம், மாடு, வீடு, அடிமைகள் முதலிய பொருள்களின் மதிப்புக்களை மதிப்பிடும் அளவுகோலா கத்தான் பணத்தின் மதிப்பு ஆரம்பமாயிற்று. ஆனால்

நகரங்கள் வளர்ச்சியடைவதால் இந்த உண்மை மதிப்புக்கள் பலவீனமடைந்து, பொருளாதார அமைப்பு சிக்கலாகி, பணமே தனி மதிப்புள்ள பொருளாக ஆகிவிடுகிறது. எந்தப் பொருளை மதிப்பிடுவதற்காகப் பணம் முதலில் ஏற்பட்டதோ அந்தப் பொருள்களை விட இது அதிகம் விரும்பத்தக்கதாகி விடுகிறது. ஒரு பசுவின் மதிப்பு எவ்வளவு பொன் என்று மதிப்பிடும் நிலைமை மாறி பொன்னுக்கு எத்தனை பசு என்று மதிப்பிடும் நிலைமை வந்துவிடுகிறது.

இருந்தாலும் ஏகாதிபத்திய சகாப்தத்தில் ரத்தம், வாள் ஆகியவற்றின் சக்தியின் முன் பணத்தின் சக்தி தோற்றுப் போகிறது.

''ஸீஸரியம் வந்து பணத்தின் ஆதிக்கத்தையும் அதன் அரசியல் ஆயுதமாகிய ஜனநாயகத்தையும் முறியடிக்கிறது. உலக-நகர பொருளாதாரம் அரசியல் ஆக்க சக்தியின் மீது நீண்டகாலம் ஆட்சி செலுத்திய பின் வாழ்க்கையின் அரசியல் அம்சம் மேலோங்கி, இந்த இரு சக்திகளில் தானே வலுவுள்ளது என்பதை நிரூபிக்கிறது. பணத்தை வாள் வெற்றி கொள்கிறது.

நாகரிகத்தின் கடைசி கட்டத்தில் ஆக்க சக்தி மறைந்து விடுகிறது. நாகரிகம் தன் கடைசி உருவைப் பெற்று விடுகிறது. கலைகளிலோ, மதத்திலோ, அரசியலிலோ புதிய பெரிய சிருஷ்டிகள் ஒன்றும் தோன்றுவதில்லை. வாழ்க்கை அறிவு வாதமும் வர்த்தகத் தன்மையும் நிறைந்ததாக ஆகிவிடுகிறது. விஞ்ஞானம் வளர்ந்து ஓங்கிய போதிலும் கலைகளுக்காகவும் மதத்திற்காகவும் ஏராளமான பணமும் காலமும் விரயமான போதிலும் அது ஆக்க சக்தியை மட்டும் இழந்து விடுகிறது. கலைகளுக்கு இறுதியான உருவங்கள் கொடுக்கப் பட்டுவிட்டன. அவற்றிற்குள் பல மாறுதல்களும் கலப்புக்களும் ஏற்படலாம். ஆனால் அடிப்படையான புதிய வடிவங்கள் ஒன்றும் தோன்றுவ

தில்லை. எல்லாப் பெரிய பிரச்னைகளும் தீர்க்கப்பட்டு விடுகின்றன; ''கலாசார'' காலத்தில் நடந்தது போல் கருத்துகளுக்காகப் போராட்டங்கள் நடப்பதில்லை; அதிகாரத்திற்காக மட்டுமே நடக்கின்றன.

"சரித்திரத்தில், உயர்தர மக்களின் உண்மையான சரித்திரத்தில் போராட்டங்களின் லக்ஷியம் ஆத்மீக மானது. ஒரு கருத்து, ஜீவன் ததும்பும் சரித்திர பூர்வமான உருவம் பெருகிறது. ஆனால் சரித்திரப் பிற்காலத்தில் இவையெல்லாம் இல்லை. மிஞ்சி நிற்பது வெறும் அதிகாரத்திற்கான, மிருகவசதிக்கான போராட்டம் தான். முன்பு கருத்துக்கு அதிகாரம் ஏதாவது ஒரு விதத்தில் சேவை செய்து வந்தது. ஆனால் நாகரிகத்தின் அந்திய காலத்தில் கருத்தின் உருவெளித் தோற்றம் கூட உணர்ச்சியின் போர்வை தான்."

''ஏகாதிபத்திய சகாப்தம் ஆரம்பமாகிவிட்டால் பிறகு அரசியல் பிரச்னைகளே இல்லை. உள்ள நிலைமை களையும், இயங்கு சக்திகளையும் மக்கள் சமாளித்துக் கொண்டு போகின்றனர். ராஜ்யங்களின் சமாளிப்புக் காலத்தில், ஜனநாயகத்தின் மகத்தான உண்மைகள் பிரத்யட்சமாகும் பொருட்டும், வாழ்க்கையைப் பய னுள்ளதாக்கும் உரிமைகளைப் பெறும் பொருட்டும் ரத்தம் சிந்தப்பட்டு, அந்த ரத்த வெள்ளத்தினால் உலக நகரங்களின் தெருக்கள் சிவந்தன. இப்பொழுது இந்த உரிமைகள் கிடைத்து விடுகின்றன. ஆனால் இவற்றை உபயோகிக்குமாறு கூறி தண்டித்தால் கூட நமது பேரக் குழந்தைகள் இவற்றை உபயோகி யாது. மேலும் நூறு வருஷம் போனால் பழைய தகராறுகள் சரித்திராசிரியர்களுக்குக் கூடப்புரியாது. ஸீஸர் காலத்திலேயே மதிப்புக்குரியவர்கள் தேர்தல் களில் கலந்து கொள்ளுவதை அனேகமாக விட்டு விட்டனர்.

ஸ்பெங்லர், "நாகரிக காலம்" என்று வர்ணிக்கும் நம் காலத்தில் இந்த ஆக்க சக்தியின்மை நிலவுவதாகக் கூறுகிறார். நம் காலத்தை பெரிகிள்ஸின் ஏதென்ஸுடன் ஒப்பிடக் கூடாது. ஸீஸரின் ரோமாபுரியுடன் தான் ஒப்பிட வேண்டும்.

"இன்று கலை என்ற பெயரில் பயிலப்படுவது யாவும் அலித்தன்மையும் பொய்யுமே ஆகும். எங்கு வேண்டுமானாலும் பாருங்கள்; திட்டமான அவசியமுள்ள கலை இன்னமும் இருக்கிறது என்பதை நிரூபிக்கக் கூடிய பெரியோர்களை எங்காவது காண முடியுமா? எங்கு வேண்டுமானாலும் பாருங்கள்; அத்தகைய கலைஞர்களுக்கு வேண்டிய வேலை எங்காவது இருக்கிறதா ?

"நாம் எல்லாக் கண்காட்சிகளுக்கும் கச்சேரிகளுக்கும், தியேட்டர்களுக்கும் போகிறோம். ஆனால் சந்தைக் கடைகளில் விற்பனையாகக் கூடிய சரக்கை உற்பத்தி செய்வதில் சந்தோஷிக்கும், சப்தத்தைக் கிளப்பும் முட்டாள்களைத் தான் அங்கு காண்கிறோம். இவர்களுக்கு கலை, சங்கீதம், நாடகம் முதலியவற்றிலுள்ள ஆத்மீக முக்கியத்துவம் வெகு காலத்திற்கு முன்பே போய்விட்டது.

அலெக்ஸாண்டிரியாவுக்கும் ரோமுக்கும் இதுவே ஒரு காலத்தில் பொருந்தியது.

"அலெக்ஸாண்ட்ரியாவில் கூட பிரச்னைகளை அலசும் நாடகாசிரியர்களும் பணத்தை அள்ளிக் கொட்டும் கலைஞர்களும் இருந்தனர். ஷாப்பகின்ஸை விட இவர்களே அதிகம் விரும்பப் பட்டனர். புது முறைகளைக் கையாண்டு பொது மக்களை வெற்றிகரமாக ஏமாற்றி வந்த ஓவியர்களும் இருந்தனர்.

"ரோம் நகரின் எல்லாச் சிலைகளும் ஒரு சில ஹெலெனிக் ரகச் சிலைகளைப்போலவே அமைந்தன. சிறிது கைத்திறமை படைத்தவர்கள் அவற்றின் தலை

களை ஜாடைவரும்படிச் செதுக்கிறுர்கள். 1500 வருஷ காலம் இது நீடித்தது. எகிப்தியமும் இதே போல் சிலையின் மேல் சிலையாக அடுக்கியது...எல்லாக் கலா சாரங்களின் இறுதிக்கட்டத்திலும் இப்படித்தான் நிகழ்கிறது,'' என்கிருர் ஸ்பெங்லர். ஒவ்வொரு நாகரி கத்தின் கடைசியான கட்டமும் மீண்டும் மதப்பற்று உண்டாவதில் முடிகிறது என்று ஸ்பெங்லர் கூறு கிருர். இதைப்புரிந்து கொள்வதற்கு அந்த நாகரிகத் தின் ஆத்மீக வாழ்வு அதுவரை எப்படி வளர்ந்து வந்திருக்கிறது என்பதை ஞாபகப் படுத்திக் கொள்வது அவசியம்.

நாகரிகத்தின் வஸந்த காலத்தில் மதப் பற்று தன் சத்தியுடன் எளிமையுடனும் வளர்கிறது. வைதிகத் தன்மை தோன்றி, தன் மதத்தை அரசியல் பலத் தைக் கொண்டு மற்றவர்கள் மீது திணிக்க முயற்சிக் கின்றது.

வைதிக வாதத்திலேயே பகுத்தறிவு வாதத்தின் விதை மறைந்திருக்கிறது. பிற்காலத்தில் இது வெளியே தோன்றுகிறது. கன்ப்யூஷியஸும் புத்த ரும், ஸாக்ரடீஸும் ரூஸோவும் இதற்கு உதாரணங் கள். இதைத் தொடர்ந்து உலகாயத வாதம் வரு கிறது.

ஸ்பெங்லர் இதைப் பின்வருமாறு சுருக்கிச் சொல் கிருர்.

''கலாசாரம் என்பதும் மதத்தின் ஆக்கத் தன்மை யும் ஒன்றே. ஒவ்வொரு கலாசாரமும் கிராமாந்தரப் பகுதிகளிலிருந்து எழும் மகத்தான லக்ஷியங்களி லிருந்து ஆரம்பமாகி, கலைகளும் அறிவும் நிறைந்த நகரங்களில் உலகாயதத்துடன் முடிவடைகிறது.''

இந்த அதீதமான பகுத்தறிவு வாதத்தின் அறிவு வாதத்தின் விளைவாகப் பொய்மை மனப்பான்மை தோன்றுகிறது. பகுத்தறிவுக்கு ஒவ்வாத, இயற்

கைக்கு விரோதமான வெறுக்கத்தக்க, அசட்டுத்தன மான விஷயங்களின் கவர்ச்சியைக் கூட ரஸிக்கும் மனப்பான்மை ஏற்படுகிறது. அலெக்ஸாண்டிரியா வின் செராபி மதம் ரோமக்குடியரசில் இஸிஸ் மதம் சால்டிய ஜோதிஷம் முதயவை இதற்கு உதாரணங்கள். இவை வெறும் வேஷங்கள், ஒய்வுக்கான ஒருவித சாதனம்; பாசாங்கு விஷயங்கள். நம் காலத்தில் இவற்றுக்கு 'இஸ்ம்'கள் என்று பெயர். இரண்டாவது மத நம்பிக்கையின் தேவையை இவை காட்டுவ துடன் அதற்குள் பூர்வாங்கமாகவும் அமைகின்றன. பூரண வளர்ச்சி பெற்ற எல்லா நாகரிகங்களிலும் ஸீஸரிஸத்தின் ஒரு பாகமாக இது தோன்றுகிறது' என்கிருர் ஸ்பெங்லர்.

இரண்டாவது மத நம்பிக்கை மேல் வகுப்புக்களில் தோன்றுவதில்லை; பாமர மக்களிடையே தான் தோன்றுகிறது. கி. மு. 300-ம் வருஷத்திற்குப்பின் சீனு வில் தோன்றிய பான்-குமதமும் இந்தியாவில் கி. மு. 300-ம் வருஷத்திற்குப் பின் தோன்றிய வைணவ, சைவ மதங்களும் இதற்கு உதாரணங்கள். மேலும் ஸீஸரிஸமே ரோமாபுரியைப்போல சீனுவிலும் சக்ரவர்த்தி முறையை ஏற்படுத்தியது.

முடிவில் இரண்டாவது மத நம்பிக்கை பாமர மத மாக மாறி கடைசியில் சரித்திரமற்றதாகி விடுகிறது. இந்த நிலையில் பல நூற்ருண்டுகள் எவ்வித முக்கி யத்துவமுமின்றி செல்கின்றன. பழைய மதங்களின் புதிய உருவங்கள் தோன்றுகின்றன. மாறுகின்றன. உள்ளுக்குள்ளேயே வளர்கின்றன. சீனுவில் ஏற்பட்ட பௌத்த மதம், கன்ப்யூஷிய மதம், டோ மதம் மற்றும் கிழக்கத்தி நாடுகளில் தற்சமயம் உள்ள இஸ்லாம் மதம் ஆகியவற்றைக் கூறலாம்.

மேற்கத்தி நாகரிகத்தில் இரண்டாவது மத நம்பிக்கை தோன்றுவதற்கு இன்னும் பல தலைமுறை கள் செல்ல வேண்டுமென்று ஸ்பெங்லர் கருதுகிருர்.

இந்த இரண்டாவது மத நம்பிக்கை முரட்டுக் கிறிஸ்தவ மதமாக உருவெடுக்குமென்பது அவர் சித்தாந்தம்.

## நாகரிகத்தின் முடிவும், சரித்திரமற்ற சமுதாயத்தின் மறு தோற்றமும்

ஆக்க சக்தி குறைந்தால் நாகரிகம் சிதைந்து அழிகிறது. அதன் பின்னர் இருக்கும் சமுதாயத்தின் நிலையை ஸ்பெங்லர் தம்முடைய சக்தி வாய்ந்த வாக்கியங்களால் வர்ணிக்கிறார்.

"சரித்திரம் களைத்துப் போய்த் தூங்கத் தொடங்கி விடுகிறது. மனிதன் ஊமையாகி மறுபடியும் மண்ணோடு ஒட்டிக் கொள்ளும் தாவரமாக ஆகி விடுகிறான். கால வரம்பற்ற கிராமமும், சிரஞ்சீவியான விவசாயிகளும் மீண்டும் தோன்றி குழந்தைகளைப் பெற்று, தாய் பூமியில் விதையை ஊன்றி வாழ்கின்றனர். ராணுவச் சக்ரவர்த்திகளின் புயல்கள் வீசுகின்றன. இத்தகைய உலகத்தில் பழங்கால நகரங்கள் காலியாகக் கிடக்கின்றன. சரித்திரமற்ற மனித ஜாதி, கூட்டில் அடைபடுவதுபோல் இந்த நகரங்களில் சிறிது சிறிதாக அடைபடுகின்றன. மனிதர்கள் சொற்ப ஆஸ்திகளுடன், வாய்க்கும் கைக்குமாக' வாழ்க்கை நடத்துகின்றனர். அதிகாரத்தைக் கைப்பற்றி, இந்த உலகத்தைக் கொள்ளையடிக்கப் போட்டி போடும் வெற்றி 'வீரர்'களின் சண்டைகளில் மக்கள் சிக்கி நசுங்குகின்றனர். மேல் இடங்களில் வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வருகின்றன; கீழ் நிலையில் பாதாளத்தில் உள்ளவர்கள், இரண்டாவது மத நம்பிக்கையின் பக்தியுடன் பிரார்த்திக்கின்றனர். இந்த ஆத்மாக்களுக்கு உலக சமாதானம், கடவுளின் சாந்தி, தலை நரைத்த சன்யாசிகளின் ஆனந்தம் பிரத்யக்ஷ விஷயமாகி விடுகிறது. துன்பங்களைச் சகித்துக் கொள்ளும் எல்லையைக்கூட இவர்கள்

அறிந்து விடுகிறார்கள். சரித்திர கால மக்கள் தங்கள் ஆயிரக் கணக்கான வருஷ வளர்ச்சியில் இதை அறிவதில்லை. மகத்தான சரித்திரம் முடிவடைந்த பிறகுதான் தெய்வீக ஜடப் பிரகிருதி தோன்றுகிறது. இந்த நாடகத்தின் நோக்கமற்ற தன்மை மகத்தானதாகும். நக்ஷத்திரங்களின் கதியைப்போல, பூமியின் சுழற்சியைப்போல் பூமியில் நிலமும், கடலும், பனியும் காடுகளும் மாறி மாறித் தோன்றுவதுபோல் இதுவும் ஒரு நோக்கமில்லாத மகத்தான சம்பவமாகும். நாம் இதைக் கண்டு ஆச்சரியப்படலாம் அல்லது வருந்தலாம். எப்படியானாலும் அது தன் நியதிப்படி நிகழ்ந்து வருகிறது.

மேற்கத்தி நாகரிகத்தில் "கலாசாரத்தின் பிற்காலப் பகுதி. அதாவது நகரங்களும் நடுத்தர வகுப்பினரும் ஆதிக்கம் செலுத்தும் காலம் கடந்துவிட்டதாக ஸ்பெங்லர் கருதுகிறார். நடுத்தர வகுப்பு பிரெஞ்சுப் புரட்சியில் இறுதி வெற்றி பெற்றது. ஆகையால் பத்தொன்பதாம் நூற்றாண்டு ஜனநாயகத்தின் யுகம். அறிவு, பணம் ஆகியவற்றின் உச்ச காலம். அது முதல் மேற்கத்தி நாகரிகம் தெரிந்தோ தெரியாமலோ க்ஷீணித்து வருகிறது.

"இதிலிருந்துதான், நாம் வாழும், பிரம்மாண்டமான போராட்டங்களின் சகாப்தம் ஆரம்பமாகிறது. இது நெப்போலியனிஸத்திலிருந்து ஸீஸரிஸத்திற்கு மாறும் கட்டம். இது சுமார் இரண்டு நூற்றாண்டுகளாவது நீடிக்கும். எல்லா கலாசாரங்களிலும் இதைக் காணலாம்.

"நமக்கு சமாளிப்புக் காலம் நெப்போலியன் காலத்தில் ஆரம்பமாயிற்று. ராணுவத்தை முதலில் சக்தியுள்ளதாகச் செய்தவனும், அதே சமயத்தில் உலக ஆதிக்கத்தைப் பொது ஜன ஆதரவு உள்ளதாகச் செய்தவனும் அவன் தான். பத்தொன்பதாம்

நூற்றாண்டில் மஹா யுத்தங்களும் புரட்சிகளும் குறைந்து, பெரிய நெருக்கடிகள் ராஜ தந்திரத்தின் மூலம் சமாளிக்கப்பட்டனவென்றால், பயங்கரமான யுத்தத்திற்குத் தயாராக இருந்ததுதான் அதற்குக் காரணம். தகராறுகளின் விளைவுகள், சம்பந்தப்பட்டவர்களைக் கடைசி நிமிஷத்தில் பயமுறுத்தி, திட்டமான முடிவு செய்வதை மீண்டும் மீண்டும் தள்ளிப் போடச் செய்தன. யுத்தத்திற்கான சதுரங்கக் காய் ஆட்டத்திற்குப் பதிலாக இது நிகழ்ந்தது. ஆனால் இந்த இரண்டாவது நூற்றாண்டு (இருபதாம் நூற்றாண்டு) உண்மையான சமாளிப்புக் காலமாக இருக்கும். இந்த ராணுவங்கள் யுத்தத்திற்கு மாற்றல்ல— யுத்தத்திற்காக ஏற்பட்டவையே. இரண்டு தலைமுறைகளுக்குள் இவற்றின் விருப்பப்படியே எல்லாம் நடக்கும். உலகத்தையே அடைவதற்காக அவை நடத்தும் யுத்தங்களின் கண்டங்கள் பணயம் வைக்கப்படும். இந்தியா, சீனா, தென் ஆப்பிரிக்கா, ரஷியா, இஸ்லாமிய நாடுகள் எல்லாம் பணயமாகும். புதுப் புது முறைகள் அனுஷ்டிக்கப்படும். அதிகாரம் குவி பெற்ற பிரம்மாண்ட நாடுகள், சிறிய நாடுகளையும், அவற்றின் பிரதேசத்தையும், பொருளாதாரத்தையும், மக்களையும் தங்கள் இஷ்டம்போல் முடிவுகட்டும். சம்பவங்களின் மகத்தான போக்குக்கு வெற்றியின் கதி முக்கியமில்லை.

"ரத்தப் பெருக்கு எடுத்து ஓடும் இந்தப் பயங்கரங்களுக்கிடையே உலக மக்களின் அமைதி சமாதானம் பற்றிய கூக்குரல் மீண்டும் எழும்."

முதலாவது உலக யுத்தத்திற்கு முன்னால் சிந்திக்கப்பட்டு, யுத்த காலத்தில் எழுதப்பட்ட ஒரு புத்தகத்தில், தீர்க்க திருஷ்டியுடன் கூறப்பட்ட இந்த சில விஷயங்கள் மிகவும் சரியாக இருக்கின்றன. சமாளிப்பு காலத்தில் நடைபெறும் யுத்தங்களைப்பற்றி ஸ்பெங்லர்

கூறும் வர்ணனையும் இதை ஒத்து இருக்கின்றன.

"ஒவ்வொரு கலாசாரத்திலும் யுத்த தந்திரங்கள் தொழில் நுட்ப வளர்ச்சியை அரைகுறையாகவே பின் பற்றி வந்திருக்கின்றன. நாகரிகத்தின் ஆரம்ப காலத் தில் அந்த யுத்த தந்திரங்கள் உடனடியாக அந்தந்தக் காலத்தின் இயந்திர வசதிகள் எல்லாவற்றையும் தங் கள் சேவைக்குப் பயன்படுத்திக் கொள்கின்றன. ராணுவத் தேவையின் அவசியத்தை முன்னிட்டுப் புதுப் புது முறைகளும் கண்டு பிடிக்கப்பட்டிருக் கின்றன."

இந்த யுத்தங்கள் சிறு ராணுவங்கள் நடத்தும் யுத்தமல்ல. அவற்றில் ஒரு கட்சி ஓய்ந்து விட்டதாக அறிவித்ததும் யுத்தம் நின்று விடுவதுமில்லை. இவை மாபெரும் ராணுவங்களைக் கொண்டு, எதிரி அடி யோடு அழியும்வரை நடத்தப்படும் யுத்தங்களாகும். இவற்றிற்கு "முழு யுத்தங்கள்" என்பது நவீனப் பெயர்.

இந்த நிலையில் மேற்கத்தி கலாசாரத்தில் நாம் வசிக்கும் இடமும் பங்கும் விதியின் மூலம் நிர்ணயிக் கப்படுவதாக ஸ்பெங்லர் கருதுகிறார். அவர் தம் புத்த கத்தின் முடிவில் பின்வரும் வாக்கியத்தை எழுதியிருக் கிறார்.

"விதி நம்மை இந்தக் கலாசாரத்தில் தள்ளியிருக் கிறது. இதன் வளர்ச்சியின் தற்போதைய நிலைமை யில் பணம் தன் இறுதி வெற்றியைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறது. அடுத்து ஆதிக்கம் செலுத்த வேண்டிய ஸீஸரிஸம் அமைதியான உறுதியான அடி எடுத்து வைத்து வந்து கொண்டிருக்கிறது. நாம் செல்ல வேண்டிய திசை குறுகலானது. வேறு வழியில் செல்வதென்றால் வாழ்க்கை வாழத்தகுந்ததாக இராது. இந்த இடத்தையோ அந்த இடத்தையோ அடைவ தற்கு நமக்குச் சுதந்திரமில்லை. தேவையானதைச்

செய்யவோ, அல்லது ஒன்றுமே செய்யாமலிருக்கவோ தான் நமக்கு சுதந்திரம் உண்டு. சரித்திர பூர்வமான அவசியம் ஏற்படுத்தியிருக்கும் காரியம் தனி நபரின் ஆதரவுடனே அல்லது அவன் விருப்பத்திற்கு மாருகவோ நிறைவேறியே தீரும்.

# 5

## ஸ்பெங்லரின் வெறுப்புக்கள்

நாகரிகங்களின் வாழ்க்கையையும் அழிவையும் பற்றிய ஸ்பெங்லர் தத்துவத்தின் சுருக்கத்தை முந்தின அத்தியாயத்தில் கூற முயன்ருேம். ஆனால் அவருடைய புத்தகத்தின் இந்தப் பொதுக் கருத்து அவருடைய வெறுப்புக் குவியல்களுக் கிடையே மறைந்து கிடக்கிறது.

அவருடைய இத்தகைய வெறுப்புக்களைப் பிரித்து வெளிச்சம் போட்டுக் காட்டி நாகரிகங்கள் பற்றிய அவருடைய கருத்துக்களை மறைந்து போகாமல் செய்வது அவசியமாகும். சமூகம்-நாகரிக வளர்ச்சியில் ஏதாவது ஒரு கட்டத்திலுள்ள சமூகம் பற்றி ஸ்பெங்லரின் கருத்து ஜனநாயகமான கருத்தல்ல.

"பிறப்பினுல் எல்லாரும் சமம்; சம உரிமைகள் பெற எல்லாரும் தகுதியுள்ளவர்கள் என்ற அடிப்படையான ஜனநாயகக் கருத்தை அவர் ஏற்கவில்லை. ஒவ்வொரு நாடும், சமுதாயமும், அதிகாரம் செலுத்த வேண்டுமென்று திட உறுதி கொண்ட ஒரு சிறு கோஷ்டியினுல் தான் ஆளப்படுகிறது என்பது அவருடைய கருத்து. ஆகையால் எல்லா நாகரிகமுமே, 'ஆளும் சிறுபான்மை' என்றும், 'ஆளப்படும் மக்கள்' என்றும் இரண்டு விதமாகப் பிரிந்திருக்கின்றன என்பது அவருடைய வாதம்.

ஜனநாயக முறையின் மதிப்பை ஸ்பெங்லர் உண

ராமலில்லை. ஆனால் இது ஒவ்வொரு கலாசாரத்திலும் தோன்றி மறையும் ஒரு கட்டமென்றே அவர் கருதுகிறார். ஜனநாயகத்தின் அடிப்படை மதிப்பு அல்லது உண்மையில் அவருக்கு நம்பிக்கை இல்லை என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. ஒரு குறிப்பிட்ட ஆட்சி முறையின் நியாயத்தைப் பற்றியோ தர்மத்தைப் பற்றியோ அவர் ஒன்றும் சொல்லவில்லை. இருப்பினும் ஜாதி முறையை அவர் விரும்புகிறார் என்பதையும், ஜன நாயகத்தை வெறுக்கிறார் என்பதையும் வாசகர்கள் கவனியாமலிருக்க முடியாது. ஆகையால் ஜனநாயகம் என்பது ஆளும் உறுதிகொண்ட மத்திய தர வகுப்பின் ஆட்சியைத் தவிர வேறு எதுவாகவும் அவர் கண்ணில் படவில்லை. மக்கள் பெயரளவில் தான் வோட்டுச் சுதந்திரம் பெற்றிருக்கின்றனர் என்பது அவர் வாதம்.

சரித்திரத்தில் சர்வாதிகாரிகளின் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்த தவறை ஸ்பெங்லர் செய்கிறார்.

ஒவ்வொரு சமூகமும் நடைமுறையில் ஒரு சிறு பான்மையினால்தான் ஆளப்படுகிறது என்பது உண்மைதான். ஆயினும் ஆட்சியை நடத்தச் சிறுகோஷ்டி சில நியாயமான அதிகார வரம்புகளை மீற முடியாது என்பதை ஸ்பெங்லர் புறக்கணித்து விட்டார். எல்லாக் காலங்களிலும் எல்லா நாடுகளிலும், அநியாயமான, அல்லது கொடுமையுள்ள அல்லது திறமையற்ற நிர்வாகமென்று மக்கள் கருதினால் அந்த ஆட்சியை எதிர்த்துப் புரட்சி செய்திருக்கின்றனர். ஆகையால் ஜனநாயக லக்ஷியப்படி, ஆளும் சிறு கோஷ்டியினர், தங்கள் அதிகாரத்தைச் சட்டபூர்வமான, அல்லது தார்மீக ரீதியில் மக்களிடமிருந்து பெறவேண்டுமென்பதுடன், பிரத்யட்ச நடைமுறையிலும் அவ்விதமே நடக்கிறது என்பதை இது நிரூபிக்கிறது. மக்களிடையே ஆதிக்கம் செலுத்தும் நீதி உணர்ச்சியையும் தன்

நலத்தையும் ஆளும் கோஷ்டி புறக்கணிக்க முடியாது. மக்களின் இந்த உணர்ச்சிதான் எதிர்பாராத சில சமயங்களில் ஆளும் கோஷ்டியின் விருப்பத்திற்கு மாருன மாறுதல்களை ஏற்படுத்தி விடுகின்றன.

இதே ரீதியில் அவர் சிந்தித்துக் கொண்டு போகும் பொழுது, ஜன நாயகத்தில் சுதந்திரப் பத்திரிகைகள் என்பது மக்களின் மனத்தை மாற்றி அவர்களுக்கு ஆணையிடுவதற்கான புதிய வழி என்றும், அரசியல் வாதிகள் அதிகாரத்தைக் கைப் பற்றுவதற்கான சாதனங்களாக அரசியல் கட்சிகள் ஆகிவிடுமென்றும் ஸ்பெங்லர் கருதுகிருர்.

"தற்கால ஆங்கில—அமெரிக்க அரசியல் பத்திரிகைகளின் மூலம் ஒரு வித அறிவு, பொருளாதாரப் பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது. இதில் ஒவ்வொரு தனி நபரும் தனக்காக ஒதுக்கப்பட்டுள்ள ஸ்தானத்தைத் தன்னையும் அறியாமல் ஏற்கிருன். எங்கோ உள்ள ஆட்சியாளன் நினைக்கும் விதத்தில் இவன் நினைக்கவும் செயல் புரியவும் வேண்டும்" என்று ஸ்பெங்லர் வாதிக்கிருர்.

பிரிட்டிஷ் பத்திரிகை முதலாளி ஒருவரைப் பற்றி ஸ்பெங்லர் கூறியதாவது:

"......பத்திரிகைச் சர்வாதிகாரி, தம் வாசக அடிமைக் கூட்டத்தை. தம் தலையங்கங்கள், செய்திகள், படங்கள் ஆகியவற்றின் சாட்டையடிக்கு உட்படுத்தி வைத்திருக்கிருர். பத்திரிகை எதை நினைக்கிறதோ அது உண்மையாகி விடுகிறது. பத்திரிகை அதிகாரிகள் தங்கள் இஷ்டம் போல் உண்மைகளைத் தூண்டவும், திரிக்கவும் மாற்றவும் முடியும். பத்திரிகைகள் மூன்று வாரம் வேலை செய்தால் போதும். அவை சொல்லும் விஷயத்தை உண்மை என்று எல்லாரும் ஒப்புக்கொண்டு விடுவார்கள்."

சில பத்திரிகை முதலாளிகளின் நியாயமற்ற செல்

வாக்கு பற்றி ஸ்பெங்லர் சொல்வதில் ஓரளவு உண்மை உண்டென்றாலும், அவர் 'சகட்டுமேனிக்கு'ச் சொல்வது முற்றிலும் தவறு. 1940-லும், 48-லும் நடந்த அமெரிக்க ஜனாதிபதி தேர்தல்கள் இதை நிரூபிக்கின்றன. மிகப் பெரும்பாலான அமெரிக்கப் பத்திரிகைகள் செய்த பிரசாரத்திற்கும், அவை கூறிய ஹேஷ்யங்களுக்கும் மாறாக இருந்தன தேர்தல் முடிவுகள்.

ஒருபுறம் விதியை நிர்ணயிப்பவன், அரசியல்வாதி ஆகியவர்களுக்கும், மற்றொருபுறம் தத்துவ வாதி. சிந்தனையாளன், அறிவாளி ஆகியவர்களுக்குமிடையில் பெரும் வித்தியாசம் கற்பிக்கிறார் ஸ்பெங்லர், முதலில் கூறப்பட்டவர்களிடம் தமக்கு உள்ள ஆழ்ந்த மரியாதையும், பின்னால் கூறப்பட்டவர்களிடம் உள்ள வெறுப்பையும் அவர் ஒளிக்கவில்லை.

ப்ளேட்டோவோ, ரூஸ்ஸோவோ சரித்திரத்தை மாற்றவில்லை. அலெக்ஸாந்தரும், ஸீஸரும் நெப்போலியனும் போன்ற காரியவாதிகள்தான் அதைச் செய்தனர்.

இவ் விஷயத்தில் இரண்டே இரண்டு விஷயங்களைப் பற்றி மாத்திரம் குறிப்பிட்டுவிட்டு நிறுத்திக் கொள்வோம். வால்டேரும் ரூஸ்ஸோவும் வெளியிட்ட சக்திகளை நெப்போலியன் பயன்படுத்திக் கொள்ளவில்லையென்றால் அவன் வெற்றி பெற்றிருக்க முடியுமா? கார்ல்மார்க்ஸ் இட்ட பயிரை லெனினும் ஸ்டாலினும் அறுவடை செய்யவில்லை யென்றால் அவர்களுடைய சாதனைகளைச் சாதித்திருக்க முடியுமா ?

இரண்டாவதாக, இந்த இரண்டு அம்சங்களும் (சிந்தனையும் செயலும்) சில சமயங்களில் ஒரே மனிதனிடம் சேர்ந்திருக்க முடியும் என்பதை ஸ்பெங்லர் மறந்து விடுகிறார். உண்மையில் ஒரு ராஜதந்திரியின் பெருமையை, அவன் நடத்திய யுத்தங்களின் எண்ணிக்கையைக் கொண்டு மாத்திரம் அளவிடாமல்,

அவன் காட்டிய விவேகத்தையும், அவன் ஏற்படுத்திய நீடித்த நல் விளைவுகளையும் கொண்டு கணக்கிட்டுப் பார்த்தால், செயல் சக்தியையும் ஆத்ம சக்தியையும் ஒருங்கே பெற்றிருந்தவர்கள் தான் மகத்தான ராஜ தந்திரிகள் என்பது தெரியும். பெரிகிள்ஸ், மௌனி வில்லியம், ஆப்ரஹாம் லிங்கன், டிஸரலி, தாமஸ் மஸாரிக், உட்ரோ வில்ஸன், வின்ஸ்டன் சர்ச்சில், ஸன்யாட்ஸென், காந்தி முதலானோர் இதற்கு உதாரணம். ஜெர்மனியின் லட்சிய புருஷர்களான மஹா பிரெடரிக், பிஸ்மார்க், ஹிட்லர் போன்றவர்கள்கூட, அவர்களிடம் செயல் சக்தியும் தீர்க்க திருஷ்டியும் சேர்ந்திருந்ததால்தான், உலக அரங்கத்தில் தங்கள் பாகத்தை நடித்தார்கள்.

ஸ்பெங்லர் தம் வாதத்தின் போக்குக் கேற்றபடி சரித்திரத்தை ஆத்மீக சக்தி, குறிப்பாக மதத்தின் சக்தி பாதிக்கிறது என்பதை புறக்கணித்துவிடுகிறார். "ஒரு வாழ்க்கையின் பாணியை மதம் இதுவரை பாதித்ததில்லை" என்கிறார். இவ்விதம் சரித்திரத்தின் மீது பௌத்தம், கிறிஸ்தவம், இஸ்லாம் மதங்களின் செல்வாக்கைப்பற்றி வெறுப்புடன் ஒரே அடியாகத் தள்ளி விடுகிறார்.

அரசியலின் போக்கு ஒழுக்கத்தினாலோ, நியாய அநியாயத்தினாலோ பாதிக்கப்படுவதில்லை என்கிறார் ஸ்பெங்லர். சில ஜெர்மன் சிந்தனையாளர்களுக்கும் லூதர் முதல் ஹிட்லர் வரை உள்ள அரசியல் வாதிகளுக்கும் மிகவும் பிடித்தமான வாதம் இது.

"பிறப்பிலேயே ராஜ தந்திரியாக உள்ள ஒருவன் உண்மைக்கும் பொய்க்கும் அப்பாற்பட்டு நிற்கிறான். சம்பவங்களின் தர்க்க வாதத்தை, முறைகளின் தர்க்க வாதத்துடன் அவன் சேர்த்துக் குழப்புவதில்லை...... அவன் உயர்வாக மதிக்கும் கொள்கைகள் அவனுக்கு நிச்சயமாக உண்டு. ஆனால் தனி நபர் என்ற முறையி

லேயே அவற்றை வைத்துக்கொண்டிருக்கிறான். எந்த அரசியல் வாதியும் செயல் புரியும்பொழுது அவற்றிற்குத் தான் கட்டுப்பட்டிருப்பதாக உணர்வதில்லை'' என்கிறார் ஸ்பெங்லர்.

ஜெங்கிஸ்கானும், ஹிட்லரும் தாங்கள் உண்மைக்கும் பொய்க்கும் புறம்பானவர்களென்று நினைத்திருக்கலாம். ஆனால் மௌனி வில்லியமும் ஜார்ஜ் வாஷிங்டனும் அவ்விதம் நினைக்கவில்லை.

அரசியலின் ஒழுக்கமற்ற தன்மையைப் பிரகடனம் செய்வதில் ஸ்பெங்லர் இன்னும் ஒரு படி மேலே செல்கிறார். "நீதியையும் சத்தியத்தையும் ஆதரிப்பவர்கள், அதிகாரத்தில் நம்பிக்கை வைத்திருப்பவர்களால் தோற்கடிக்கப்பட்டே தீர்வார்கள்'' என்கிறார். ஆத்மீகத்தில் அவருக்கு உள்ள துவேஷம் காரணமாக "இனமும்'' ''பிரபஞ்ச சக்தியும்'' தான் உண்மையான ஆக்க சக்திகள் என்பதில் அவருக்குள்ள நம்பிக்கை நன்றாகத் தெரிகிறது.

''உலக சரித்திரம் என்பது உலக கோர்ட். பலம் பொருந்திய, பூரணத்துவம் பெற்ற, தன்னம்பிக்கையுள்ள வாழ்க்கைக்குச் சாதகமாகவே அது தீர்ப்புக் கூறி வந்திருக்கிறது. அது சத்தியத்தையும், நீதியையும் பலத்திற்கும் இனத்திற்கும் பலியிட்டு வந்திருக்கிறது. செயலைவிட சத்தியத்தை மேலாகவும், பலத்தைவிட நீதியை உயர்வாகவும் கருதியவர்களுக்கு அது நாசத்தையும் மரணத்தையும்தான் கொடுத்திருக்கிறது'' என்கிறார் அவர்.

நீட்ஷேயின் எதிரொலியை இங்கே கேட்கிறோம். இந்தக் கருத்துக்களையெல்லாம் படித்த பின், இவற்றை எழுதியவர் பதவி, இன தத்துவங்களின் தீர்க்கதரிசி என்ற முறையிலேயே ஆரம்பத்தில் வரவேற்கப்பட்டார் என்பதைப் புரிந்துக்கொள்கிறோம்.

இவை ஸ்பெங்லரின் மதிப்புக்களை பாதித்துள்ள

சில துவேஷங்கள்.

வாழ்க்கையைப் பற்றி அவரவர்களுக்கு இஷ்டமான நோக்கும் மதிப்புக்களும் ஏற்படுத்திக்கொள்ள அனைவருக்கும் உரிமை உண்டு. எந்தச் சரித்திராசிரியனும் தன் சொந்தக் கருத்துக்களிலிருந்து பூரணமாகத் தப்பித்துக்கொள்ள முடியாது. ஆனால் ஓர் ஆசிரியர் சாஸ்திரீய முறையில் எழுதப்பட்ட எழுத்தை இந்த விருப்பு வெறுப்புக்கள் பாதிக்கவிட்டு, இவற்றை எல்லாக் காலத்திற்கும் எல்லா தேசங்களுக்கும் பொருந்தக் கூடிய உண்மைகளென்று வெளியிடும்போது எதிர்ப்பும் அதிகமாகிறது. கிறிஸ்தவ தர்மத்திலும் ஜனநாயக சமூக அமைப்பிலும் நம்பிக்கை உள்ளவர்கள், அந்தக் கருத்துக்கள் எவ்வளவு தீவிரமாக வெளியிடப் படுகின்றனவோ அவ்வளவு தீவிரமாக அவற்றை எதிர்ப்பது அவசியமாகிறது. இத்தகைய விருப்பு வெறுப்புக்களினால் பாதிக்கப்பட்டு வெளியிடப்படும் கருத்துக்கள், ஒரு நாகரிகத்தின் தன்னம்பிக்கைக்கே கொடிய தீங்கு விளைவிக்கக் கூடியவையென்றால் அவற்றை எதிர்த்தே ஆக வேண்டும்.

இந்த விருப்பு வெறுப்புக்களை விட்டு விட்டு, நாகரிகங்களின் சுழற்சிப் போக்கு பற்றிய ஸ்பெங்லரின் கருத்தை அதன் சுய மதிப்புக்களைக்கொண்டு மதிப்பிட வேண்டும்.

இந்த அமைப்பில்கூட பலத்த எதிர்ப்புக்கள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானவை வருமாறு:

சரித்திர சம்பவங்களை ஒரு குறிப்பிட்ட அமைப்பில் பொருத்துவதற்கு எதிராக, "சரித்திரத்தில் ஒரு அமைப்பைக் கண்டு பிடிப்பது அசாத்தியம்; ஆகையால் அதைக் கண்டு பிடிப்பது வீண்" என்பது எப்பொழுதுமே மிகவும் சக்தி வாய்ந்த வாதமாக இருந்து வந்திருக்கிறது. மறுப்பதற்கு மிகவும் கஷ்டமான வாதம் இது. பின்னர் ஒரு சரித்திராசிரியர் சரித்திரத்தின் அமைப்பைக் கண்டு பிடிக்க மகத்தான முயற்சி

செய்தபொழுது இதே ஆட்சேபம் எழுப்பப்பட்டது. இதை மறுப்பதற்காக அவர் ஓர் அத்தியாயமே செல விட்டிருக்கிறுர். இதை 5, 6-வது அத்தியாயங்களில் கவனிப்போம்.

பிறந்து, வளர்ந்து, மங்கி மறையும் நாகரிகங்களி ஞல் ஆனதுதான் சரித்திரம் என்ற கருத்தும் தாக்கப் பட்டிருக்கிறது. ஸ்பெங்லர் பல்வேறு நாகரிகங்களுக் கிடையே அளவுக்கு மீறிய ஒற்றுமைகளை எடுத்துக் காட்டி, அளவுக்கு மீறிய நுணுக்கமான விஷயங்களை யெல்லாம் புகுத்துவதால் அவருடைய கூற்றுக்குப் போதிய பலம் ஏற்படவில்லை. அத்துடன், பரிகசிக்கத் தக்கதாகவும் ஆகிவிடுகிறது. ஒப்பிட்டுக் காட்டுவது சில முக்கிய அம்சங்களுக்கு மட்டுமே பொருந்தும் என்பது நினைவிலிருக்கு மட்டுமே இவ்விதம் ஒப்பிடு வது உதவியாக இருக்கும். இரு சரித்திர நிகழ்ச்சிகள் நூற்றுக்கு நூறு ஒரே மாதிரி இருப்பதில்லை. இதைத் தான் ஸ்பெங்லர் மறந்துவிட்டார். பல்வேறு நாகரி கங்களிலும் திட்டமான சம்பவங்களுக்கிடையிலும், நபர்களுக்கிடையிலுங்கூட ஒற்றுமை இருப்பதாகக் காட்ட முயற்சிக்கையில், நாகரிகங்களின் முக்கிய அம்சங்களில் ஒற்றுமை இருக்கிறதா என்ற முக்கிய பிரச்னையை மறந்துவிட்டார். டாய்ன்பியின் வாதங் களிலும் இதே கேள்வி எழும். டாய்ன்பியின் வாதங் களை நாம் ஆராயும் வரை இதற்குப் பதிலளிப்பதையும் நாம் நிறுத்தி வைப்பது நல்லது.

சரித்திர உலகம், இயற்கை உலகத்தைப்போலல் லாமல், காரண காரியங்களுக்கு அப்பாற்பட்ட சக்தி களினுல் நடைபெறுகிறதென்பதும், சாஸ்திரீய முறை யில் அதை ஆராயக்கூட முடியாதென்பதும் ஸ்பெங்ல ரின் சித்தாந்தங்களில் ஒன்று. சரித்திரத்தின் போக்கை விதிதான் நிர்ணயிக்கிறது என்பது அவ ருடைய கருத்து. நிபெலுங்கனின் பயங்கர முடிவி

லிருந்து ஹிட்லர் தன்னையே எரித்துக்கொண்டு தற்கொலை செய்துகொண்ட சம்பவம் வரை ஜெர்மனியின் ஜீவனை இந்த விதிதான் ஆட்டி வந்திருக்கிறது. ஸ்பெங்லர் கூறும் முடிவுகளின் உண்மையான மதிப்பை அளவிட வேண்டுமென்றால் இந்த விதியை கவனிக்க வேண்டும். நம் நாகரிகம் அழிவை நெருங்கிக்கொண்டிருக்கிறது என்று அவர் ஜோஸ்யம் சொல்வதற்கு இது முக்கிய காரணமாகும்.

"ஒவ்வொரு நாகரிகமும் ஒரு குறிப்பிட்ட பாதையிலேயே செல்லவேண்டுமென்று, அது தோன்று முன்பே விதி நிர்ணயித்து விடுகிறது; அந்தப் பாதையிலிருந்து அதை மாற்ற முயற்சிப்பது முட்டாள்தனமும் கோழைத்தனமுமாகும்" என்பது ஸ்பெங்லரின் வாதம். வலிவுள்ள மனிதன் இந்த விதியை ஏற்று அதன்படி நடக்கிறான்.

இதில் என்ன கஷ்டமென்றால், இந்த விதியைப் பற்றிச் சொல்வது ஸ்பெங்லரின் நூல் ஒன்றுதான். வேறு வியாக்கியானங்களை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. இது விதியின் விருப்பம் என்று அவர் சொல்வதை நாம் ஏற்க வேண்டும். சரித்திரம் சாஸ்திர விதிகளுக்கும், காரண காரிய விதிகளுக்கும், உட்படாதென்பது அவர் கருத்தாகையால், கடந்த கால சம்பவங்களைக்கொண்டு எதிர்காலத்தை ஊகிக்க முடியாது. ஆனால் இதற்கு முரணான முறையில், இதையேதான் செய்ய முயற்சிக்கிறார் ஸ்பெங்லர்.

விதியில் நம்பிக்கை கொள்ளும் இந்தக் கருத்தும் தனிப்பட்ட நம்பிக்கையாக இருக்க முடியுமேயன்றி சாஸ்திரமாகாது. ஸ்பெங்லரைப்போல் ஒரு புறம் சரித்திரத்தின் காரணகாரிய விளைவுகளை மறுத்து, மற்றொரு புறம் அவர் வருணிக்கும் விதிக்கு மக்கள் குருட்டுத்தனமாகப் பணிய வேண்டுமென்பது ஒருவரும் பின்பற்ற முடியாத பாதையாகும்.

விதியின் வலிமையில் நம்பிக்கைக் கொள்வதால் ஏற்கெனவே கடுமையாக உள்ள ஸ்பெங்லரின் சரித்திரம் பற்றிய கருத்து, நாகரிகங்களின் உயிரியல் கருத்தினுல் இன்னமும் கடுமையாகிறது. அவற்றை அவர் உயிருள்ள பொருள்களுக்கு ஒப்பிடுவதுடன் நிற்காமல், தாவரம் அல்லது மனிதனுக்கு இருக்கும் குணங்களும் அவற்றிற்கு இருப்பதாகக் கூறுகிருர். நாகரிகங்களின் பிறப்பு, வளர்ச்சி, யௌவனம், முதிர்ச்சி, மரணம் முதலியவை வெறும் உதாரணத்திற்கும் மேற்பட்ட முக்கியத்துவத்தைப் பெறுகின்றன. தம் கருத்துக்களை விளக்குவதற்கு இதை ஓர் உதாரணமாக உபயோகிப்பதற்குப் பதிலாகத் தமது உபமானங்களிலேயே சிக்கி அவற்றிற்கு அடிமையாகிவிடுகிருர். அவருடைய நாகரிகங்களுக்கு உயிர் இருக்கிறது. மற்ற கலாசாரங்கள் விஷயத்தில் இவை நடந்துகொள்ளும் முறைகள் இருக்கின்றன. வயதாவதைப் பற்றி அஞ்சுகின்றன. தங்கள் லக்ஷியத்தைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக ராஜ தந்திரிகளையும் தேசங்களையும் பயன்படுத்திக் கொள்கின்றன.

ஸ்பெங்லரின் கருத்துப்படி, மனிதன் விதியினிடம் மன உறுதியற்ற கருவியாகி விடுகிருன். ஸ்பெங்லர் நீதிபதியின் ஸ்தானத்தில் அமர்ந்து மேற்கத்தி நாகரிகத்திற்கு விதிக்கும் மரண தண்டனையை மனிதன் ஏற்க மறுப்பது தவறு என்றுதான் கூறவேண்டும்.

ஆனுல் இந்த விதித் தத்துவத்தை ஏற்க மறுப்பவர்கள் விருப்பு வெறுப்புக்களால் திரிந்த மேற்படி நீதிபதியின் தீர்ப்பை ஏற்க வேண்டுமென்ற அவசியமில்லை. ஒரு வழக்கைப்பற்றி ஒருதலைப் பக்ஷமாக அபிப்பிராயப்படக்கூடிய நீதிபதியை உலகத்தின் எல்லாச் சட்ட முறைகளுமே கோர்ட்டிலிருந்து வெளியேற்றி விடுகின்றன. நம் நாகரிகத்திற்கு மரண தண்டனை விதிக்கப்படும் சமயத்தில் இந்த விதியைப் பிரயோகிக்கக் கூடாதா?

முடிவு:

ஸ்பெங்லர் சகட்டுமேனிக்குக் கூறியிருக்கும் வாதங்களையும், பயங்கர ஹேஷ்யங்களையும் துருவி ஆராய்ந்து பார்த்தால் அவற்றில் பல வெறும் மரக் குதிரைகளே என்பது தெரியும். ஆனால் அவற்றை அவர் அவ்வளவு அழகாகவும், வேகத்துடனும் சொல்வதால் அவற்றின் உண்மை சொரூபத்தை அறிய வாசகர்கள் கண்ணைக் கசக்கிக்கொண்டு அவற்றைப் பார்க்க வேண்டும்.

ஆனால் ஸ்பெங்லரின் நூல், அற்புதமாக எழுதப்பட்டிருப்பதுடன், நாகரிகங்களைப்பற்றி மகத்தான புறக்கோடுகளை வரைந்திருப்பதால் கவர்ச்சியுள்ளதாகவும் குறிப்பிடத் தக்கதாகவும் விளங்குகிறது. ஒரே நூலில் மேதையும், அனுபவத்திற்கு ஒவ்வாத மூட நம்பிக்கையும் இவ்வளவு அழகாகக் கலந்திருப்பது அரிது. "இதை ஊன்றிப் படிப்பவர்கள், ஒரு பிரம்மாண்டமான மலையின்மீது கண்ணில் பைத்தியக்கார ஒளி ஜொலிக்கும் ஒரு வழி காட்டியுடன் பிரயாணம் செய்வது போலிருக்கிறது" என்று ஹூக்ளிங்கா கூறுகிறார்.

ஸ்பெங்லர் ராணுவம், ஜாதிக் கட்டுப்பாடு ஆகியவற்றின் புகழைப் பாடாமல் தம் நூலில் சாஸ்திரீயக் கட்டுப்பாட்டைக் கையாண்டிருந்தால், எல்லா நாகரிகங்களும் ஒரே மாதிரியான வாழ்க்கை மார்க்கத்தில் செல்கின்றன என்ற அவருடைய வாதம் இன்னும் தெளிவாகவும், இன்னும் நம்பத் தகுந்த உருவிலும் அமைந்திருக்கும். நிழலும் ஒளியுமாக இருக்க வேண்டிய சித்திரத்தில் அவர் அளவுக்கு மீறிக் கருப்பையும் வெளுப்பையும் தீட்டிவிட்டார். கடுமையான வேற்றுமைகள், உதாரணங்களை அனாவசியமான மிகச் சிறிய விஷயங்களுக்கும் பிரயோகித்து, விதியை வெளியிடுவதுபோல் தம் கருத்துக்களைக் கூறியது, நாகரிகங்

களை உயிருள்ள பொருள்கள்போல் பாவிப்பது முதலியவற்றில் அவர் அளவு மீறிப் போய்விட்டார். இந்தக் குறைபாடுகளை விட்டுவிட்டுப் பார்த்தால், அவருடைய 'அடிப்படைக் கருத்தின் மதிப்புக் குறையவில்லை என்பது தெரியும். நாகரிகங்களின் வளர்ச்சியில் ஒருவித ஒற்றுமை இருக்கத்தான் செய்கிறது. இந்தக் கருத்துக்கள் உண்மைகளின் மூலமும், மற்றவர்கள் எழுதி யிருப்பவற்றின் மூலமும் பலத்த ஆதரவு பெறுகின்றன என்பது பின் அத்தியாயங்களில் தெரியும்.

ஸ்பெங்லரின் கருத்துக்களுக்கு இந்த அத்தியாயத்தில் கூறப்படும் மறுப்பானது, முதல் உலக யுத்தத்திற்கு முன்னேயே இந்தப் புத்தகத்தை எழுதிய அவர், உலக யுத்தங்களின் வருகை, பாமர ஜனநாயகம், மாபெரும் சர்வாதிகாரிகள், உலக நகரங்களின் வளர்ச்சி, ரஷியா, ஆசியா ஆகியவற்றின் எழுச்சி முதலியவற்றை அவர் தீர்க்க திருஷ்டியுடன் முன் கூட்டியே கண்டார் என்பதை மறுக்கவில்லை. முதல் உலக யுத்தத்திற்குப் பின் நிகழ்ந்த இந்தச் சம்பவங்கள் ஸ்பெங்லரின் ஹேஷ்யங்களை நிரூபிப்பவையாக இருந்தன.

குறிப்பிட்ட காலங்களுக்கும் சம்பவங்களுக்கும் ராணுவ ரீதியில் ஜனநாயகத்திற்கு விரோதமாக, கிறிஸ்தவப் பண்பில்லாத முறையில் அவர் கொடுத்த மதிப்புக்கள் சரி என்பதை இவை நிரூபிக்கவில்லை. நாகரிகத்தின் கடைசி காலம் மிகவும் மட்டமானது என்பதையோ, அந்தக் கட்டத்தின் மதிப்பும் கால அளவும் மனிதன் சக்தியை மீறி முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன என்பதையோ, இச் சம்பவங்கள் நிரூபிக்கவில்லை.

# 6

## ஆர்னல்டு டாய்ன்பியின் கருத்து

சுமார் இருபது வருஷத்திற்குப் பின் பிரிட்டிஷ் கால்வாயின் மறுகரையில் ஸ்பெங்லரைவிட விரிந்து பரந்துள்ள நோக்கம் உள்ளவராக இல்லாவிட்டாலும் ஸ்பெங்லர் அளவுக்கு மதிக்கக்கூடிய ஒரு சரித்திராசிரியர் நாகரிகங்களின் வாழ்வையும் தாழ்வையும் பற்றிய விதிகளை ஆராயும் வேலையில் ஈடுபட்டார். ஆராய்ச்சி முறை, தேசீய பகைப்புலன் முதலியவற்றின் வேற்றுமைகள் இருந்தாலும், நாகரிகங்களின் வளர்ச்சியில் சில ஒற்றுமைகள் இருப்பதாக டாய்ன்பியும் கருதுகிறார். இதன் விளைவாக நாகரிகங்களின் வளர்ச்சி பற்றி ஒரு விரிவான அமைப்பை இவரும் வகுக்கிறார். "சரித்திர ஆராய்ச்சி" என்ற அவருடைய பெரிய நூலில் அடுக்கியுள்ள விஷயங்களிலிருந்து அவருடைய சிந்தனையின் போக்கை கண்டுபிடிக்க முயற்சிப்போம்.

தெரிந்த எல்லா நாகரிகங்களையும், (முப்பது நாகரிகங்களை) டாயின்பி தமது ஆராய்ச்சியில் கொண்டு வருகிறார். இவற்றில் இருபத்தோரு நாகரிகங்கள் பூரண வளர்ச்சி பெற்றவை; ஐந்து நாகரிகங்களைத் "தடைப்பட்ட நாகரிகம்" என்று அழைக்கிறார் அவர். இவை பூரண வளர்ச்சி பெறுவதற்கு முன்பே இவற்றின் வளர்ச்சி தடைப்பட்டுவிட்டது. மற்ற நான்கு நாகரிகங்கள் செத்துப் பிறந்தன. ("குறைப் பிரசவ நாகரிகங்கள்.")

பூரண வளர்ச்சி பெற்ற இருபத்தோரு நாகரிகங்களில் ஏழு நாகரிகங்கள் ஜீவனுள்ள சமுதாயங்களாக இன்னமும் இருக்கின்றன. அவை, ஹிந்து, இஸ்லாம், கீழ்க்கோடி, பைஸாண்டைன், அல்லது தென் ஐரோப்பாவின் வைதிகக் கிறிஸ்தவம், இந்த நாகரிகத்துடன்

ரஷியக் கிளை, மேற்கத்தி நாகரிகம் ஆகியவை யாகும். இவற்றிற்கு முன்னால் இருந்து இறந்து போன நாக ரிகங்கள், எகிப்து, அண்டீன், ஸினிக், மினேன் ஸுமேரிக், மயான், யுகாடெக், மெக்சிகோ, (இவை இரண்டும் மத்திய அமெரிக்க நாகரிகமாகக் கலந்து விட்டன) ஹாடிட், ஸிரியக், பாபிலோனிக், இரானிக், அரபிக் (இவை இரண்டும் இஸ்லாமாகக் கலந்து விட்டன) ஹெலெனிக் நாகரிகங்களாகும்.

டாய்ன்பி தம் வாதங்களை நிதானமாகவும் கம்பீர மாகவும் புனைந்துக்கொண்டு போகிறார். இவற்றில் ஓர் அடிப்படையான கருத்து திரும்பத் திரும்பப் பல மாறுதல்களுடன் வருகிறது. நாகரிகங்களின் வாழ்க்கை பற்றிய அவருடைய கருத்துக்களை ஆரா யப் புகுமுன், இதைக் கவனிப்பது அவசியம். இது, ஒரு நாகரிகத்தின் வளர்ச்சி முழுமையிலும் காணப்படும் இடையறுத லயம் - கடியாரபெண்டுலத்தின் ஆட்டம் போன்ற அசைவு - பற்றிய தத்துவமாகும். ஒரு நாடு அல்லது தனி நபரின் வாழ்க்கையிலும் இது போன்ற லயம் காணப்படுகிறது. இதன் சக்தி நெருக்கடியான கட்டங்களில் வெளிப்படையாகத் தெரிகிறது, டாய்ன் பியின் சித்தாந்தங்களில் இந்த லயம் பல உருவங் களில் தோன்றுகிறது.

முக்கிய உருவம் "சவாலும் பதிலும்" ஆகும். ஒரு நாகரிகத்தின் வளர்ச்சிக் காலத்தில் அதன் க்ஷேமத் திற்கு அதன் வாழ்வுக்கே கூட, பல சவால்கள் வரு கின்றன. இந்தச் சவாலுக்கு நாகரிகம் என்ன பதில் அளிக்கிறது என்பதைப் பொருத்தே இருக்கிறது அதன் எதிர்காலம். அதன் பதில் சவாலைச் சமாளிப் பதற்குப் போதுமானதாக இருந்தால், வெற்றியினால் கிடைக்கும் பலத்தையும் பெற்று அதன் ஆயுள் நீடிக் கும். சவால் போதுமான அளவில் சமாளிக்கப் படா விட்டால் அதன் சமூகத்தின் அடிப்படை மதிப்போ,

வெளிகௌரவமோ, உலகாயத க்ஷேமமோ குறைந்து அதன் ஆயுளே முடிவடைந்தது போன்ற நிலைக்கு வந்து விடுகிறது.

இந்தச் சவால்களும் பதில்களும் ஒரு நாகரிகத்தின் வாழ்க்கையில் தாழ்வுகளும் உயர்வுகளுமாக அமைகின்றன. நாகரிகத்தின் சிதைவு காலத்திலும் இந்த நிலைமை ஏற்படுகிறது. சீர்குலைவு கட்டத்தில் இந்த லயத்தை "கலையும் சேர்க்கையும்" என்று அழைக்கிறார் டாய்ன்பி. சவால் - ஜவாபுக்கும் இதற்குமிடையில் முக்கிய வித்தியாசம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. பிறப்பு வளர்ச்சி கட்டங்களில் ச்வாலை விட பதிலின் சக்தி அதிகமாக இருந்து, நாகரிகத்தை மேன்மேலும் உயர்ந்த நிலைக்குக் கொண்டு வருகிறது ; ஆனால் நாகரிகத்தின் சீர் குலைவு காலத்தில் கலைவின் சக்திக்குச் சமமாக இருப்பதில்லை சேர்க்கை பலம். இந்த இரண்டு கட்டங்களுக்குமிடையில் உள்ள வித்தியாசம் இதுதான். இதை வேறு விதமாகச் சொல்வதென்றால் நாகரிகத்தின் வளர்ச்சியோ தாழ்வோ இடையூறு இல்லாத ஏற்றமாகவோ இறக்கமாகவோ இருப்பதில்லை.

மூன்றாவது லயம் ஒன்றைப் பற்றியும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். அதாவது "பின் வாங்குவதும் திரும்பி வருவதும்." இயற்கையில் இது ஆக்கத் தன்மையுள்ள பொதுவான இயக்கம். விதை மண்ணுக்குள் "பின் வாங்கி"ச் சென்று, செடியாக வளர்ந்து மீண்டும் வெளியே வருகிறது. இதுபோல தனி நபர், அல்லது சமூகம், அல்லது நாடு, அல்லது நாகரிகமும் வெளி உலகத்திலிருந்து பின் வாங்கி உள் சுத்தம் அல்லது அபிவிருத்தி செய்துகொண்டு அதிகச் செழுமையுடனும் மீண்டும் வெளிவருகிறது. இதற்குப் பல உதாரணங்களை டாய்ன்பி கூறுகிறார். அவற்றில் சிலவற்றைப் பின்னால் கவனிப்போம்.

ஒரு நாகரிகத்தின் லயத்தைப்பற்றி டாய்ன்பி

கூறியிருப்பவற்றை இதுவரை கவனித்தோம். உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களின் வாழ்க்கையிலும் இந்த லயத்தைக் காணலாம். இது இன்னும் பெரிய லயத்திற்குள் தோன்றும் சிறிய லயம்தான். பெரிய லயம் நாகரிகங்களின் தோற்றம், வளர்ச்சி, மறைவு ஆகியவற்றினூலான சுழற்சியாகும். அவருடைய நூலில் இந்த லயம்தான் முக்கிய இடம் பெறுகிறது. அவர் அதை நான்கு பாகங்களாகப் பிரித்து ஒவ்வொன்றிலும், நாகரிகங்களின் வளர்ச்சி, முறிவு, சீர்குலைவு ஆகியவை பற்றி விவரிக்கிருர்.

நாகரிகங்களின் பிறப்புக்கு, மற்ற சரித்திராசிரியர்களைப்போலல்லாமல் டாய்ன்பி வேறு காரணம் கூறுகிருர். ஓர் இனத்தின் உயர்விஞலோ, அல்லது சாதகமான விசேஷச் சூழ்நிலையிஞலோ நாகரிகங்கள் உதிப்பதில்லையென்றும், அசாதாரணமான கஷ்ட நிலைமையே நாகரிகம் உதிப்பதற்குக் காரணமென்றும் அவர் கருதுகிருர். இத்தகைய சந்தர்ப்பங்கள் சமூகத்திற்கு ஒரு சவாலாகும். சமூகம் வாழ, அல்லது தன் க்ஷேமத்தைப் பாதுகாத்துக்கொள்ள அந்தச் சவாலைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. இந்தச் சவாலை சமூகம் வெற்றிகரமாகச் சமாளித்துவிட்டால் அதன் அகச் சக்தி பெரிதும் அபிவிருத்தியடைந்து, பொதுவாக "நாகரிகம்" என்று கூறப்படும் விஷயத்தைப் பெறுகிறது.

இதற்கு உதாரணமாக எகிப்திய, சுமேரிய நாகரிகங்களின் பிறப்பை டாய்ன்பி எடுத்துக் காட்டுகிருர். கால நிலை மாறி, செழிப்பான ஆசிய ஆப்பிரிக்க சமவெளிகள் வரண்ட பாலைவனமாக மாறியதால்தான் இந்த நாகரிகங்கள் பிறந்ததாக அவர் கூறுகிருர். நைல் நதிப் பள்ளத் தாக்கோ, யூபிரிடிஸ் - டைக்ரிஸ் நதிப் பள்ளத்தாக்கோ க்ஷேமத்திற்கேற்ற இடமல்ல என்பது அவர் வாதம். நைல் நதிப் பள்ளத் தாக்கின்

மேற்பகுதியிலும், யூபிரிடிஸ் - டைக்ரிஸ் டெல்டாவிலும் வாழ்பவர்கள் இன்னும் அநாகரிகமான நிலையிலேயே இருப்பதை அவர் உதாரணமாக எடுத்துக் காட்டுகிறார்.

சீன நாகரிகம், செழிப்பான யாங்ட்ஸி பள்ளத் தாக்கில் தோன்றாமல், வெள்ளமும் சக்தியும் நிறைந்த மஞ்சள் நதிப் பிரதேசத்தில் தோன்றியதை அவர் மற்றோர் உதாரணமாகக் கூறுகிறார்.

இந்த நாகரிகங்கள் உதித்த காரணத்தைப் பின் வருமாறுதான் விளக்கவேண்டும். சம்பந்தப்பட்ட சமுதாயம் அல்லது இனம், தான் வசித்துவந்த இடம் மேற்கொண்டு வசிப்பதற்கு லாயக்கற்றதாக விட்டபின், சம்பந்தப்பட்ட சகதியான பள்ளத் தாக்கைச் செழிப்பு நிலங்களாக மாற்ற உறுதியுடன் முயற்சிக்கிறது. அதன் முயற்சி வெற்றி பெற்றுவிட்டால், அது ஏற்படுத்திய சாதகமான சூழ்நிலையே நாகரிகத்தின் கரு வளர்வதற்கேற்ற இடமாக அமைந்து விடுகிறது.

ஸ்பெங்லர் கூறியதைப்போல் நாகரிகம் பிறந்த பின் இயற்கையாக எளிய முறையில் வளர்வதாக டாய்ன்பி கருதவில்லை. பல நாகரிகங்களின் வளர்ச்சி பாதியில் நின்று போனது இதை நிரூபிக்கிறது. எதிர் நோக்கும் சவாலைச் சமூகம் சமாளிக்கும் முயற்சியில் அதன் சக்தியெல்லாம் செலவாகிவிட்டால் நாகரிகத்தின் வளர்ச்சி நின்றுவிடுகிறது. போராட்டத்தின் முடிவு வெற்றிகரமாக இருந்தாலும், மேற்கொண்டு வளர்ச்சிக்குத் தேவையான ஆக்க சக்தி அதில் மிச்சமிருப்பதில்லை.

நாகரிகம், அதன் பிறப்பைத் தொடர்ந்து இயற்கையாக வளரவில்லையென்றால், அந்த வளர்ச்சியின் தன்மைகள் தான் என்ன ?

இந்தக் கேள்விக்கும், வெளிப்படையாகத் தோன்றும் சில சாத்தியங்களை விட்டுவிட்டுத்தான் டாய்ன்பி

பதில் சொல்ல முயற்சிக்கிறார். நிலம் அல்லது மக்கள் மீது அதிகாரத்தை விஸ்தரிப்பதோ அல்லது செய் முறைகளை வசப்படுத்துவதோ நாகரிக வளர்ச்சியின் அறிகுறியல்ல. உண்மையில் இதை நேர்மாருக வியாக் கியானம் செய்யலாம். ஒரு நாகரிகம் சீர்குலையத் தொடங்கும் சமயத்தில்தான் பிரதேசங்களின் மீது அதிகார விஸ்தரிப்பு உயர்ந்த பக்ஷ அளவை அடை கிறது என்பதைச் சரித்திரம் காட்டுகிறது. செய்முறை அபிவிருத்தி ஒரு நாகரிகத்தை அழிக்கவே அழித்து விடக்கூடும். அபிவிருத்தி செய்யப்பட்ட செய்முறை எல்லாச் சக்தியையும் உறிஞ்சி விடுகிறது. சமூகம் தொழில் முறையின் எஜமானனுக ஆவதற்குப் பதில் அதன் அடிமையாகி விடுகிறது.

ஒரு நாகரிகம் ''லேசாக ஆவது'' தான் அது வள ரும் நாகரிகம் என்பதற்கு அடையாளம் என்கிறார் டாய்ன்பி. பாஷை, உடை, தொழில் முறை, கலைகள் முதலிய எல்லாத் துறைகளிலும் எளிமை வரவர அதி கரித்து வருமென்கிறார் அவர். இதன் விளைவாக வாழ்க் கையின் ஸ்தூலப் பிரச்னைகளைத் திணிப்பதற்கு சக்தி குறைவாகவே செலவாகும். அதனால் ''ஆத்மீக'' விஷயங்களுக்கு உபயோகிக்க அதிக சக்தி கிடைக் கிறது, இதேபோல் சவாலும் பதிலும் இயங்குமிடத் திலும் மாறுதல் ஏற்படுகிறது. இப்பொழுது சவால் கள் ஸ்தூல சூழ்நிலையிலிருந்து அதிகமாகவும், சமூகத் திற்குள் நடைபெறும் சமூக, அல்லது ஆத்மீகப் போராட்டங்களிலிருந்து அதிகமாகவும் பலம் பெறு கிறது. ஆகையால் வளர்ச்சி ''சுய நிர்ணய'' உருவம் பெறுகிறது.

இந்த நடவடிக்கையில் பின் வாங்குவதும் திரும்பி வருவதும் ஒரு முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. சமூகங் கள் அல்லது அவற்றின் ''ஆக்கச் சிறுபான்மைகள்'' தற்காலிகமாகப் பின் வாங்கியதற்குப் பல உதாரணங்

களை டாய்ன்பி எடுத்துக் காட்டுகிறார்.

கி. மு. எட்டாம் நூற்றாண்டு முதல் ஆறும் நூற்றாண்டு வரை நடைபெற்ற பொது கிரேக்க காலனி விஸ்தரிப்பில் ஏதென்ஸ் கலந்துகொள்ளவில்லை. பிறகு அது திரும்பி வந்து கிரேக்க ராஜ்யங்களின் முதன்மை ஸ்தானம் வகித்தது. பதின்மூன்றாவது நூற்றாண்டு முதல் பதினைந்தாம் நூற்றாண்டுவரை நிலப் பிரபுத்துவ முறையிலிருந்து இத்தாலி பின் வாங்கி யிருந்தது. இந்தக் காலத்தில் அது விவசாயத்திலிருந்து நகர வர்த்தக, கைத்தொழில் சமூகமாக மாறியது. பதினைந் தாம் நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரை ஐரோப்பாவிலிருந்து விலகியிருந்த பொழுது பார்லிமெண்டரி ஜன நாயகத்திற்கும், நவீன கைத் தொழில் சமூகத்திற்கும் அஸ்திவாரம் போட்டது. தற் சமயம் ரஷியா வெளி உலகத்திலிருந்து ஒதுங்கி யிருப் பதும் இதுபோன்ற தற்காலிக வாபஸாக இருக்கக் கூடுமென்றே டாய்ன்பி கருதுகிறார்.

டாயின்பியின் நூலில் இந்தக் கட்டத்தில் ஒரு கருத்து தோன்றுகிறது. இது சமூகங்களுக்கும் அவற் றின் தலைவர்களுக்குமிடையில் நிலவும் உறவைப் பற்றியதாகும். சமூகம், "தனி நபரை அங்கத்தின ராகக் கொண்ட ஜீவனுள்ள ஸ்தாபனம்," அல்லது, "அது தனி நபர்கள் அடங்கிய வெறுங்கூட்டம்" என்ற இரு கருத்துக்களையுமே அவர் ஒதுக்கித் தள்ளி விடுகிறார். ஒவ்வொரு சமூகத்திலும், செயல் சக்தி தனி நபர்களிடமோ அல்லது சிறு கோஷ்டிகளிடமோ தான் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை என்று சுட்டிக் காட்டுகிறார். செயலற்று, ஆக்க சத்தியற்று இருக்கும் பெரும் பான்மையினர் அந்தச் சிறு பான்மையினரின் கருத்தை ஏற்று, அதை அமல் நடத்தும்படிச் செய்வது தான் அவர்களுடைய (சிறு பான்மையின்) பிரச்னை. ஆக்க சக்தியுள்ள சிறுபான்மையினருக்கு ஏற்படும்

அனுபவங்களெல்லாம் பாமரர்களும் அனுபவிக்க முடியாதாகையால், பாமர மக்கள் தலைவர்களின் கருத்தை ஏற்று, தலைவர்களைப்போல் காப்பி யடிக்கும்படிச் செய்வது ஒன்றுதான் உயர்ந்த பக்ஷம் சாதிக்கக்கூடிய விஷயம். இதை "அபிநவம்" என்கிறுர் டாய்ன்பி.

தலைவர்களுக்கும் பாமரர்களுக்குமிடையே உள்ள உறவு பற்றி ஸ்பெங்லரின் ராணுவ வாதக் கருத்தை விட இது அனைவராலும் ஒப்புக்கொள்ளக் கூடியதாகவும், யதார்த்தமானதாகவும் உள்ளது. மேம்போக்காகப் பார்க்கும்பொழுது இரு வாதங்களுக்குமிடையில் தரத்தாலும், வியாக்கியானம் செய்யும் முறையிலும்தான் வித்தியாசமே தவிர, அடிப்படையில் வித்தியாசமில்லை என்று தோன்றும். ஒவ்வொரு சமூகத்திலும் ஆளும் சிறுபான்மையும், அதற்கு அடங்கி நடக்கும் பெரும்பான்மையும் இருக்கத்தான் செய்கிறது என்பதை இருவருமே ஒப்புக்கொள்வது போலிருக்கும். ஆயினும் பெரும்பான்மையினருக்கு சர்க்காரிடமுள்ள கடமை, விசுவாசம் பற்றி இந்த இரு கருத்துக்களுமே முற்றிலும் மாறுபடுகிறது. இந்த வித்தியாசம், நாகரிகத்தின் சீர்குலைவில் தெளிவாகத் தெரியும். "ஆனுல் சிறுபான்மையின் ஆக்க சக்தி குறைந்து, மக்களிடையே தன் கவர்ச்சியை இழந்துவிட்ட பிறகும் அது தன்னுடைய தலைமையை நீடிப்பதற்காக அதிகாரத்தைப் பிரயோகித்து மக்களைக் குருட்டுத் தனமாகப் பணிய வைக்கிறது என்பது டாய்ன்பியின் வாதம். ஆனுல், "ஒரு நல்ல நாகரிகத்தில் மக்கள் தலைவர்களுக்குக் குருட்டுத்தனமாக அடங்கி நடப்பதும் அவசியம்; அது போய்விட்டால் நாகரிகமே அழிந்து விடுகிறது" என்பது ஸ்பெங்லரின் வாதம். ஆகையால், அதிகாரத்தின் மூலம் குருட்டுத்தனமாகக் கீழ்ப்படிய வைக்கும் முறையானது ஒன்றுக்கு அவசியமான போதிலும் அதுவே மற்றென்று அழிவதற்குக் காரண

மாகவும் ஆகிவிடுகிறது.

இது, நாகரிகத்தின் முறிவாகிய அடுத்த கட்டத்திற்கு நம்மைக் கொண்டு போகிறது.

இதற்கு முந்தின சரித்திராசிரியர்கள் இத்தகைய நிகழ்ச்சிகளுக்குக் கூறிய விளக்கங்களை டாய்ன்பி மறுத்துவிட்டு மீண்டும் தொடங்குகிறார்.

இதன்படி, ஒரு சமூகத்தை அழிப்பது வெளிச் சக்தியல்ல. ஒரு சமூகம் வெளி அரசியல் அல்லது ராணுவ பலத்தினால் சில சமயங்களில் தோற்கடிக்கப் படுகிறதென்றால் அது உள்ளுக்குள்ளேயே அழிந்து வந்திருக்கிறது என்பதுதான் அதற்குக் காரணம். அதன் வளர்ச்சிக் காலத்தில் இத்தகைய அபாயங்கள் ஏற்பட்டால் அவை வெற்றிகரமாக எதிர்க்கப்படுவது மாத்திரமின்றி, அந்த நாகரிகம் மேலும் உயர்ந்த நிலையை அடைய அவையே ஆதாரமாகவும் இருக்கின்றன.

சரித்திரத்தின் கர்ம வாதங்களையோ, நாகரிகங்கள் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பின் இன அல்லது ஆத்மீக நாசத்தினால் அழியும் என்பதையோ அவர் ஒப்புக்கொள்ளவில்லை.

தவிர. செய்முறை அபிவிருத்தி அல்லது அதிகார விஸ்தரிப்பு ஒரு நாகரிகத்தின் வளர்ச்சியைக் காட்டவில்லையென்பது அவர் ஏற்கெனவே கூறியுள்ள வாதமாகும். அதைப்போலவே செய்முறை குறைவதும் அதிகார எல்லை சுருங்குவதும் அந்த நாகரிகத்தின் முறிவைக் காட்டவில்லையென்பதும் அவர் கருத்துத்தான்.

ஆனால், ஒரு நாகரிகத்தின் முறிவு என்பது எது? ஒரு குறிப்பிட்ட சவாலை வெற்றிகரமாகச் சமாளிக்கத் தவறுவதுதான். இப்படிச் சமாளிக்க முடியாமல் தோற்றுப்போவதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். இதுவரை, விரும்பிக் காப்பியடிப்பதாக இருந்து வந்த

குணம் இனி, தானாகவே காப்பியடிக்கும் குணமாக மாறிவிட்டிருக்கக் கூடும். பழைய பழக்க வழக்கங்கள் புதிய நிலைமைக் கேற்றபடி மாறாமலிருக்கலாம். ஆத்ம திருப்தி, மக்கள், ஸ்தாபனங்கள் அல்லது செயல் முறைகளைப் பூஜிக்கத் தகுந்தவையாகக் கருதுவது முதலிய காரணங்களினால் ஆக்க சக்தி அழிந்துவிடக் கூடும்.

இவைகள் எல்லாவற்றிலுமே விளைவு ஒன்றுதான். காலத்தின் சவாலை ஏற்பதற்குப் போதுமான சக்தியை உண்டாக்கப் படைப்பு வேலை செய்யும் சிறு கோஷ்டியினால் முடியாமல் போகிறது. இதன் விளைவாக மக்களிடையே உள்ள செல்வாக்கை இந்த கோஷ்டி இழந்து விடுகிறது. ஆனால் பலாத்காரத்தின் மூலமோ, நடிப்பின் மூலமோ தன் அதிகாரத்தைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சிக்கிறது. ஆகையால் இது வெறும் வெத்து வேட்டாகிவிடுகிறது. ஆக்க சக்தியை அளிக்கக்கூடிய இச் சிறு பான்மை கோஷ்டி வெறும் ஆதிக்கம் செலுத்தும் சிறு பான்மையாகி விடுகிறது. இதன் காரணமாக பாமர மக்கள், அல்லது அவர்களில் ஒரு பகுதியினர் கடமையில் தவறி விடுகின்றனர். சமூகத்திற்கும் அதன் நாகரிகத்திற்கும் புறம்பானவர்களாக அவர்கள் தங்களைக் கருதுகின்றனர். இவர்களை "அகப்பாட்டாளிகள்" என்று அழைக்கிறார் டாய்ன்பி. இவ்விதம் சமூக ஒற்றுமை போய்விடுகிறது. சீர்குலைவின் ஆரம்பம் இதுதான். இவ்விதம் நாகரிகம் தன் கடைசி கட்டத்தை அடைகிறது.

முறிவு ஏற்பட்டால் அதைத் தொடர்ந்து சீர்குலைவு ஏற்பட்டுத்தான் ஆக வேண்டுமா? இக் கேள்விக்கு எதிர் மறையில் பதில் அளிக்கப்படுகிறது. இதற்கு ஒரு மாற்று உண்டு. பிளவு ஒன்று சேர்க்கப்பட்டு; சமூகத்தில் பலமான ஒற்றுமை இருந்தால் சீர்கேடு தடுக்கப்பட்டு, சமூகம் ஒரு புதிய உறுதி பெறுகிறது.

இந்த நிலை பல நூற்றூண்டுகள் நீடிக்கலாம். எகிப்திய நாகரிகத்திற்கும் கீழ்கோடி நாகரிகங்களுக்கும் இது தான் நேர்ந்தது என்கிறூர் டாய்ன்பி.

ஆனூல் சீர்குலைவு ஆரம்பத்திலேயே தடுக்கப்படா விட்டால் அது தன் இஷ்டப்படி வளரும். எல்லா நாகரிகங்களின் அந்தியக் கட்டங்களிலும் இதன் அறி குறிகளைக் காணலாம்.

மேலே கூறியது போல் சமூகத்தில் முதலில் "ஆதிக்க சிறுபான்மை" களுக்கும் "அகப் பட்டாளி" களுக்குமிடையில் பிளவு ஏற்படுகிறது. சீர்குலையும் சமூகத்திற்கு இவ்விதம் உள்ளேயிருந்து ஏற்படும் அபாயத்திற்கு, உதவியாக வெளியே, "புறப்பாட் டாளி" களிடமிருந்தும் ஏற்படும் அபாயம் உதவி செய் கிறது. ஒவ்வொரு நாகரிகத்தையும் வெளி நாகரிகங் களோ கோஷ்டிகளோ இடைவிடாது பயமுறுத்திக் கொண்டே யிருக்கின்றன. நாகரிகம் வளர்ந்து வரும் வரை இந்த அபாயங்களைச் சமாளிப்பதுடன் அபாயம் ஏற்படுத்தும் நாகரிகங்களின் மீதே தன் செல்வாக்கைப் பிரயோகித்து இதன் தலைமையை ஏற்கும்படிச் செய் கிறது. ஒருமுறை முறிவு ஏற்பட்டுவிட்டால் இதன் கவர்ச்சி சக்தி போய் விடுகிறது. ஆதிக்கம் செலுத்தி வந்த சிறுபான்மை கோஷ்டி வெளியிலிருந்து வரும் அபாயங்களைச் சமாளிக்க முடியாமற் போய், அதைத் தாக்கும் வெளிச் சக்திகள் "புறப்பாட்டாளி', களாகி விடுகின்றன. அதாவது இவை, பொருளாதார, அர சியல், சமூக உரிமைகள் இல்லாமல், சமூகத்திற்கு வெளியே உள்ள பெரிய கோஷ்டிபோல் உணர் கின்றன. சீர்குலையும் ஒரு நாகரிகத்தின் சமூக, அரசி யல் அமைப்பு மூன்றூகப் பிரிகிறது: முதலவாது ஆதிக் கம் செலுத்தும் சிறுபான்மை இதை "அகப் பாட் டாளி"களும் "புறப் பாட்டாளி"களும் தாக்குகின்றனர். இந்த முறிவு சமூக, அல்லது லட்சிய பிளவாக இருக்க

லாம்; அல்லது பூகோள ரீதியில் பிரிந்துள்ள பிரதேசங்களுக்கிடையே நடைபெறும் போராட்டமாகவும் இருக்கலாம். நம் காலத்தில் நடப்பது போல் இந்த இரண்டு போராட்டங்களும் சேர்ந்தும் நடைபெறலாம்.

### ஆத்மீக முறிவு

சீர்குலேயும் நாகரிகத்தில் சமூகம் முறியும் அதே சமயத்தில் அதன் ஆத்மாவும் முறிகிறது. இதைச் சமூகம் முழுவதும், தனி நபர்களும் உணர்கின்றனர். படைச் சக்திக்குப் பதில் பொதுப் பற்று சுதந்திரமும், நடிப்புக்குப் பதில் மந்தம் தியாக உணர்ச்சியும்; படைப்பு ஆர்வத்திற்குப் பதில் தயக்கம் அல்லது பாப உணர்ச்சியும், பாணி உணர்ச்சிக்குப் பதில் குழப்ப உணர்ச்சி அல்லது ஐக்கிய உணர்ச்சியும் வளர்ச்சியின் அறிகுறியாக இருந்த பாகுபாட்டு உணர்ச்சிக்குப் பதில் அழிவின் அறிகுறியாகிய ஒரு தரப்படுத்தும் தன்மையும் தோன்றுகினறது.

### கஷ்ட காலம்

சீர்குலேவிஞல் பெரிய அரசியல், சமூகப் போராட்டங்கள் மூள்கின்றன. டாய்ன்பியின் பாஷையில் இதற்குக் "கஷ்டகாலம்" என்று பெயர். பலம் பொருந்திய அரசாங்கங்கள் அல்லது லக்ஷியங்களுக்கிடையே பெரிய யுத்தங்கள் நடக்கின்றன. நவீன பாஷையில் இதற்குப் பூரண யுத்தம் ஏன்று பெயர். தேசம் முழுவதும் இதில் ஈடுபட்டு, இதனுல் பாதிக்கப் படுகிறது. பயங்கரமான முடிவு ஏற்படும்வரை நீடிக்கிறது. எதிரியைத் தோற்கடிப்பது மாத்திரம் இதன் நோக்கமல்ல. எதிரிகளேயும் எதிரிகளின் தலேவர்களேயும் பூண்டோடு அழிப்பதே இதன் நோக்கம்.

இக் 'கஷ்டகாலம்' யுத்தத்தில் ஈடுபட்ட நாடுகள் அல்லது கட்சிகளே கலேக்கச் செய்து, ஜனங்களிடையே சமாதானம், நிரந்தரமான க்ஷேம வாழ்க்கை

ஆர்வத்தை ஏற்படுத்தி விடுகிறது. இவ்விதம், சீர் குலேவின் அடுத்த கட்டமான பலம் பொருந்திய நாடு, அல்லது கட்சியின் ஏகாதிபத்திய ஆட்சிக்கு யுத்தம் வழிகோலி விடுகிறது. கடைசியில், நசித்த நாகரிகம் பரவியிருந்த பிரதேசம் முழுவதிலும் இந்த ஆட்சி வியாப்பிக்கிறது.

## பொது ஆட்சியும் பொது மதமும்

பொது ஆட்சி என்பது, விருப்பமில்லாத மக்கள் மீது ஒரு சிறு கோஷ்டி ஆதிக்கம் செலுத்துவதாகை யால் நாசத்தின் வித்து இதிலேயே அடங்கியுள்ளது. ஆதிபத்திய கோஷ்டியின் ஆட்சிக்கு அகப் பாட்டாளி களும் புறப் பாட்டாளிகளும் விடுவிக்கும் சவாலுக்கு சிறு கோஷ்டியின் ஆட்சி கவர்ச்சி யற்றதாகி விடும் பொழுது பாட்டாளிகள் அதிருப்தி கொள்கின்றனர். ஆகையால் பாட்டாளி வர்க்கம் புதிய லட்சியங்கள் அல்லது மதங்களே உருவாக்கும். இந்த லக்ஷியங்களில் ஒன்று பொது மதமாகும். ஆதிபத்திய கோஷ்டியின் சவாலுக்குப் பாட்டாளி வர்க்கத்தின் பதில் இது.

பொது ஆட்சி நெடுங்காலம் நீடிக்கலாம். நாகரி கத்தை உறைந்துபோன நிலேயில் இது பாதுகாக்கும் போது மதம் இன்னும் அதிக காலம் நீடிக்கக் கூடும். நாகரிகம் அழிந்த பிறகும் இது ஜீவித்திருக் கக் கூடும். ஆனுல் சீர்குலேவைத் தடுக்க இவை இரண் டினுலும் முடியாது. உண்மையில் பொது மதம் ஆளும் கோஷ்டியின் கொள்கைகளுக்கு மாருனதாகை யால் அந்தக் கோஷ்டி இதைப் பின்பற்றினுலும் அந்த நாகரிகத்திற்கே இது குழி பறிக்கும். ரோம சாம்ராஜ் யத்தின் கடைசி காலத்தில் கிறிஸ்தவ மதம் இப்படித் தான் செய்தது.

## காட்டுமிராண்டி போர்க் கும்பல்கள்

பொது ஆட்சிக்கு, புறப் பாட்டாளி வர்க்கம் காட்டுமிராண்டி போர்க் கும்பல்களே ஏற்படுத்துவதன்

மூலம் பதிலளிக்கிறது. தங்களுக்கெனத் தனி லக்ஷி யங்களை ஏற்படுத்திக் கொள்ளும் தலைவர்களின்கீழ் இவை இயங்குகின்றன. பொது ஆட்சி நடைபெறும் பிரதேசத்தின் எல்லைகளை இந்தக் காட்டுமிராண்டி வீரர்கள் இடைவிடாமல் தாக்குவது நாகரிகத்தின் கடைசி கட்டத்தில் நிகழும் மற்ருெரு சம்பவம்.

கடைசியில் பொது ஆட்சியும் அதன் நாகரிகமும் வீழ்கின்றன. ஆதிக்கம் செலுத்தும் சிறு கோஷ்டி அகப் பாட்டாளிகளிடமும் புறப் பாட்டாளிகளிடமும் தோல்வி யடைகிறது. இதோடு நாகரிகம் ஒரு முடி வுக்கு வருகிறது.

இடைக் காலம்

சமூகம், இனி ஒரு புதிய நாகரிகம் உதயமாகும் வரை காட்டுமிராண்டி நிலைமைக்கே திரும்பி விடு கிறது. இதை இரு நாகரிகங்களுக்கிடையே தோன் றும் "இடைக் காலம்" என்கிருர் டாய்ன்பி. முன்பு பொது ஆட்சி நடந்துகொண்டிருந்த சாம்ராஜ்யத்தின் மக்களும் காட்டுமிராண்டிக் கும்பல்களும் தங்கள் இருப்பிடங்களை விட்டுக் கிளம்பிப் பெருத்த அளவில் இடம் மாறி அலைகிருர்கள். "வீரர் சகாப்தம்" என்றும் இதை அழைப்பதுண்டு. ஒவ்வொரு சமூகத்தின் காட்டு மிராண்டி நிலையிலும் யுத்த வெறியர்களும் போர் வீரர் களும் ஆதிக்கம் செலுத்துவதால் இது இவ்விதம் அழைக்கப்படுகிறது.

"இடைக் காலத்தில்" பழைய நாகரிகத்தின் பெரும் பகுதி மறைந்து விடுகிறது. ஆனல் அது முற்றிலும் அழிந்து விடுவதில்லை. அகப் பாட்டாளி களால் ஏற்படுத்தப்பட்ட பொது மதம் இங்குதான் தன் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த, மதிப்பற்ற கடமையைச் செய்கிறது. பொது மதம் பழைய நாகரி கத்தின் சிருஷ்டியல்லவாகையால், அந்த நாகரிகத் தோடு அது அழிவதில்லை. இடைக் காலத்தில் அது

பின்னுக்குச் சென்று பிறகு புதிய நாகரிகத்தைச் சிருஷ்டிக்கும் சக்தியாக மீண்டும் வெளியே வருகிறது. பழைய நாகரிகத்தைவிட இன்னும் அழகான புதிய நாகரிகம் தோன்றும் பொருட்டு பழைய நாகரிகம் உறங்கும் கூடாகப் பொது மதம் விளங்குகிறது. இவ் விதம் வாழ்வும் தாழ்வும் அடங்கிய அமரச் சுழல் பூர்த்தியாகிறது. ஒரு நாகரிகம் இறந்தது. ஆனால் அந்த இறப்பிலிருந்து அதைவிட உயர்ந்த நாகரிகம் பிறப்பதற்கு வேண்டிய வித்து முளைவிடுகிறது. இந்த அற்புதம் மக்களின் புறக் கண்முன் மீண்டும் விரிந்தாலும், மனிதனுக்கு சிந்தனு சக்தி தோன்றிய நாள் முதலாக இதற்கு விடை காண முயன்று வருகிறான். "ஏன் ? இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? அர்த்தம் இருந்தால் அது மனிதன் கண்ணுக்குப் புலப்படுமா?" என்ற நித்தியமான புதிரின் முன் நாம் நிர்க்கதியாக நிற்கிறோம்.

டாய்ன்பியின் சித்தாந்தத்திற்கு எதிராகக் கூறப் படும் பலமான வாதத்திற்கு நம்மை இது கொண்டு போகிறது. நாம் ஒரு முடிவிற்கு வருமுன் இதையும் கவனிப்பது அவசியம்.

# 7

## டாய்ன்பியின் கருத்துக்கள் வளர்ந்த விதம்

மேற்கத்தி நாகரிகம் தன்னையும் தன் எதிர் காலத்தையுமே சந்தேகிக்கும் சமயத்தில் டாய்ன்பியின் சித்தாந்தம், சரித்திரத்திலேயே காணுத அளவு ஆவலை எழுப்பி, ஆதரவைப் பெற்றிருப்பதில் ஆச்சரியமில்லை.

ஸ்பெங்கலரின் "மேற்கின் அஸ்தமனம்" என்ற நூல் 1920-ம் வருஷத்திற்குப்பின் ஏற்படுத்திய கிளர்ச்சி முதல் யுத்தத்திற்குப் பின் இருந்த நிலைமையைப் பிரதி பலிக்கிறது. இரண்டாது உலக யுத்தம் இன்னும்

பலமாக பாதித்தது. இதனுல் மேற்கத்தி உலகத்தில் இன்னும் அதிக நெருக்கடி-உணர்ச்சி ஏற்பட்டது. ராணுவ நடவடிக்கையின் விஸ்தீரணம் அதிகரித்ததற் கேற்ப இதில் அக்கறையுள்ள பகுதியின் விஸ்தீரண மும் அதிகரித்தது. ஸ்பெங்லர் முக்கியமாக ஐரோப்பா வைப் பற்றிக் கூறினுர். டாய்ன்பி ஆங்கிலோ-சாக்ஸன் உலகத்தைப் பற்றியே கூறினுர்.

டாய்ன்பியின் கருத்துக்கள் விரிவான சர்ச்சை களையும் பலதரப்பட்ட கண்டனங்களையும் எழுப்பியது. இருப்பினும் அவரைக் குறை கூறியவர்களில் பலரும் அவருடைய சரித்திர ஞானத்தையும், அறிவின் ஆழத் தையும் கருத்துக்கள் அமைப்புப் பற்றி அவருடைய திறனையும் போற்றுகின்றனர். அவருடைய நூலைப் போல் மற்றென்றும் ஒருவராலும் சிருஷ்டித்துவிட முடியவில்லை. அதற்கு யாரும் முயற்சிக்கக்கூட இல்லை. டாய்ன்பிக்குப் போட்டியாக வரவோ அவரை வெற்றி காணவோ ஒருவராலும் முடியவில்லை.

அவர் எழுப்பிய பலம் பொருந்திய கட்டிடம் விமரி சனத் தாக்குதல்களை எதிர்த்து நிற்கும் சக்தி வாய்ந் ததா? அதன் உண்மைச் சக்தியை அறிய வேண்டு மானுல் விமரிசன ஆயுதங்களின் திறமையை ஆராய வேண்டும்.

சரித்திர ஆராய்ச்சியைப் பற்றி மிகக் கடுமையான ஒரு குறை கூறுவதுண்டு: அதாவது அளவற்ற வள மும், முடிவற்ற வேறுபாடுகளும் உள்ள சரித்திரத்தின் போக்கை எந்த ஒரு விதமான அமைப்பிலும் அடைக்க முடியாது என்பது டாய்ன்பியின் நூலை விமர்சனம் செய்த அனைவரும் இவ்விதம் கூறியிருக்கின்றனர். ''சரித்திரம் சதா மாறிக்கொண்டேயிருக்கிறது; இதன் போக்கை முன் கூட்டிச் சொல்ல முடியாது என்பது கடந்த நூற்றுண்டையும் இந்த நூற்றுண்டையும் சேர்ந்த பெரும்பாலான சரித்திராசிரியர்களுடைய

கருத்தாகும். இதன் தீவிர வாதிகள் "சரித்திரத்தில் எவ்விதப் பொருளும் இருக்கிறதென்று நிரூபிப்பதும், நிரூபித்தாலும் அதைப் புரிந்து கொள்வதும் மனித சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம்" என்று கருதுகின்றனர். சரித்திரத்தில் ஓர் அர்த்தத்தைச் சரித்திராசிரியர்கள் காண்பது சாத்தியமென்றும், காண்பது அவசியமென்றும் வாதிக்கும் மற்றவர்கள், "அந்தப் பொருள், திரும்பத் திரும்ப நிகழும், வளைந்து கொடுக்காத ஒரு விஷயமல்ல" என்கின்றனர்.

இதற்கு டாய்ன்பி அளிக்கும் பதிலில், வளைந்து கொடுக்காத ஓர் அமைப்பில் தமக்கும் நம்பிக்கை இல்லையென்றும், அத்தகைய அமைப்பு எதையும் ஏற்படுத்தத் தாம் முயற்சிக்கவில்லையென்றும் கூறுகிறார் "உண்மையில் என் ஆராய்ச்சி பரிக்ஷார்த்தமானதுதான்; இந்த ஆராய்ச்சியில் நாகரிகங்களுக்கிடையே ஏதாவது ஓர் ஒற்றுமை காணப்பட்டால் அது மாற்ற முடியாத ஒரு பாதையில் செல்ல வேண்டுமென்பதில்லை; எல்லா நாகரிகங்களும் இந்தப் பாதையிலேயே செல்ல விதிக்கப்பட்டிருக்கின்றனவென்பதில்லை" என்கிறார் அவர். ஆனால் சென்ற சில தலைமுறைகளாக மேற்கத்தி சரித்திராசிரியர்களிடையே ஒரு மோஸ்தராக நிலவி வருவதும்; "சரித்திரத்தில் அர்த்தமில்லை" என்ற கருத்தை அவர் முழு பலத்துடன் எதிர்க்கிறார். சரித்திர உண்மைகளைக் கொண்டு ஏன் ஓர் அர்த்தத்தைக் கண்டு பிடிக்கக் கூடாது என்பதற்குக் காரணமில்லை என்கிறார். புரொபஸர் கெய்லுடன் ரேடியோ விவாதம் ஒன்றில் அவர் கூறியதாவது: "அத்தகைய தோல்வி மனப்பான்மையை நாம் ஏற்கக் கூடாது. மனித அறிவின் பெருமைக்கு இது பொருந்தாது; மனித அறிவின் கடந்த காலச் சாதனைக் காணும்பொழுது இது பொய்யாகிறது. சரித்திரத்தில் ஒரு பொருளைக் காண்பது நம்

காலத்தில் மிக முக்கியமான ஒரு தேவையாகும்" என்றார்.

சரித்திரத்தை ஒரு பொருள் கூறும் வகையில் வியாக்கியானம் செய்யலாமா கூடாதா என்பது அடிப்படையான கருத்து வேற்றுமையாகும். டாய்ன் பியின் சித்தாந்தத்தைப் பற்றி என்ன கருத்துக் கொள்வது என்பதை இது நிர்ணயிக்கிறது. சரித் திரத்தில் ஓர் அர்த்தத்தைக் காண முடியாதென்று நினைப்பவர்கள் டாய்ன்பியின் நாகரிக வளர்ச்சிபற்றிய சித்தாந்தத்தையும், ஸ்பெங்லரின் வாதத்தையும், மார்க்ஸின் சரித்திர பூர்வமான உலகாயதவாதத்தை யும் ஏற்பது கஷ்டம். சரித்திரத்தைப் பாரபக்ஷமின்றி ஆராய்ந்தால் அதில் சில பொதுவான, திரும்பத் திரும்ப நிகழும் அம்சங்கள் உள்ளன என்பதை அடுத்த அத்தியாயத்தில் காணலாம்.

சரித்திரத்தில் அர்த்தம் இருக்கிறதா இல்லையா என்பதை முடிவு செய்வது பெரும் அளவுக்கு ஒரு வரின் மத, ஆத்மீகக் கருத்துகளைப் பொருத்திருக் கிறது. ஆகையால் இது விஞ்ஞான பூர்வான ஆராய்ச் சிக்கு ஒத்து வராது.

டாய்ன்பியின் வாதத்தைச் சில சரித்திராசிரியர்கள் ஆட்சேபிக்கும் இரண்டாவது காரணத்தை இனிக் கவனிப்போம். டாய்ன்பி கண்ட முடிவுகள் விஞ்ஞான ரீதியாகக் கண்ட முடிவுகளல்ல வென்றும், மத நம்பிக் கையினால் பிறந்தவை யென்றும் அவர்கள் கூறுகின் றனர். அமெரிக்க சமூக சாஸ்திரியான எச். ஈ. பார்னஸ் இக் கருத்தை மிகவும் காரசாரமாக எடுத்துச் சொல்கிறார்.

"கிறிஸ்தவ இதிகாசம்" என்று ஜார்ஜ் சாந்தாயனா கூறியதன் கம்பீரமான புது வடிவமே "சரித்திர ஆராய்ச்சி" என்று அகஸ்டினும் அவர் சகாக்களும் கூறியவை:

மனித ஜாதிக்கு ஆதியில் ஏற்பட்ட நாசத்தையும் இறுதியில் ஏற்படக்கூடிய விமோசனத்தையும்விளக்கு வதே டாய்ன்பியின் அடிப்படையான நோக்கம்.

உண்மையான மத நம்பிக்கை இல்லாத சமூகங் கள் அழிந்த வரலாறு, "சரித்திர ஆராய்ச்சி"யின் சித்தாந்தத்திற்கு ஓர் எடுத்துக் காட்டு.

இது, டாய்ன்பியைச் சரியானபடி வியாக்கியானம் செய்வதாகாதென்பது, அவருடைய நூலைப் படித் தவர்களுக்கு நன்கு தெரியும். தம்முடைய கிறிஸ்தவ மத நம்பிக்கையே தமக்கு வழி காட்டுகிறது என்ப தையும், மேற்கத்தி நாகரிகம் ஜீவிப்பது கிறிஸ்தவ மதம் புத்துயிர் பெறுவதையே பொருத்திருக்கிறது என்பதையும் அவர் தெளிவு படுத்தி யிருப்பது நன்ரு கத் தெரிகிறது. ஆனால் அதே சமயத்தில் மற்ற நாகரிகங்கள் வீழ்ந்ததற்குக் காரணம் "உண்மையான மத நம்பிக்கை" இல்லாததுதானென்று அவர் எங்கும் சொல்லவில்லை. நாகரிகங்களின் பல்வேறு கட்டங்களையும் பற்றிய அவருடைய கருத்துக்கள் மதம் சம்பந்தமான கருத்துக்களிலிருந்து தோன்ற வில்லை.

அவருடைய வாதத்திற்குக் கிறிஸ்தவ மத நம்பிக்கை "அடிப்படை" என்று சொல்லலாமே தவிர, "பற்று" என்று சொல்ல முடியாது. இது அடிப் படையில் சரியான தாகையால் இதற்குப் பதில் சொல் லித்தான் ஆகவேண்டும். நம் அபிப்பிராயத்தில் இதற்கு இரண்டு பதில்கள் சொல்லலாம்.

முதலாவதாக, கிறிஸ்தவ மதத்தில் நம்பிக்கை உள்ள விஞ்ஞானிகள், வெல்ஸின் தர்க்க சக்தி வாதத் திலோ ஸ்பெங்லரின் விதி வாதத்திலோ, மார்க்ஸிய வாதத்திலோ நம்பிக்கை உள்ள விஞ்ஞானிகளைவிட அதிக பாரபக்ஷம் உள்ளவர்களாக இருப்பார்கள் என்ப தற்குக் காரணமில்லை. இதைக் கொண்டு பார்த்தால்,

வாழ்க்கையின் அடிப்படையான பிரச்னைகளுடன் நெருங்கிய தொடர்புள்ள விஞ்ஞான அம்சங்களுக்கு முற்றிலும் விஞ்ஞான பூர்வமான பதில் அளிப்பதென் பது சாத்தியமில்லை. அதாவது எந்த விஞ்ஞானியுமே விரும்பியோ விரும்பாமலோ சில கொள்கைகள், அல்லது கருத்துக்கள் அல்லது ''பாரபக்ஷ''த்துடனேயே வேலை செய்கின்றனர். ''விஞ்ஞானத்திற்காகவே பயிலப்படும் ''சுத்த விஞ்ஞானத்தினால்'' மனித ஜாதிக்கு தார்மிக அம்சத்தை விட்டுவிட வேண்டிய அளவுக்கு மகத்தான பலன் ஏதாவது ஏற்பட்டிருக்கிறதா என்பதை இங்கு ஆராயவேண்டுவதில்லை.

இரண்டாவதாக, வெறும் உண்மைகளை மாத்திரம் கொண்டு சரித்திர உண்மையை ஸ்தாபிக்க விரும்புவோரும், ஸ்பெங்லரின் ராணுவ வெறி நோக்கை விட்டுவிட்டு அவருடைய கருத்துக்களை மாத்திரம் எடுத்துக் கொண்டது போல டாய்ன்பியின் கிறிஸ்தவக் கருத்துக்களை விட்டு விட்டு, உண்மைகளைக் கொண்டு அவர் கண்டுள்ள சில முடிவுகள் ஏற்பது சாத்தியமாகும். நாகரிகங்களின் வளர்ச்சி பற்றி அவர் கண்டுள்ள முடிவுகளுக்கும் கிறிஸ்தவ மத நம்பிக்கைக்கும் சம்பந்தமில்லையென்று தோன்றுகிறது

நாகரிகங்கள் பிறந்து, வளர்ந்து, முதிர்ந்து கடைசியில் சாகின்றன என்ற கருத்து அதன் எளிமையினால் கவர்ச்சிகரமாகத் தோன்றிய போதிலும், அவை பிறப்பதுமில்லை, இறப்பது மில்லை யாகையால் இந்த வாதம் முற்றிலும் பொருந்தாது. இது, டாய்ன்பியின் வாதத்திற்கும், டானிலெவ்ஸ்கி, ஸ்பெங்லர் ஆகியவர்களின் வாதங்களுக்கும் கூட அடிப்படையான மூன்றாவது ஆக்ஷேபமாகும். இவ்விதம் வாதிப்பவர்கள், ஒரு நாகரிகம் என்பது கட்டுக்கோப்பான

ஓர் அமைப்பல்லவென்றும், ஒருமைப் பாட்டுடன் கூடிய ஒரு தொகுதி யல்லவென்றும், அரசியல், பொருளாதாரம், விஞ்ஞானம், மதம், சமூகம் முதலிய பல கலாசார நிகழ்ச்சிகளின் சேர்க்கையே என்றும் கூறுகின்றனர். இந்த நிகழ்ச்சிகளை ஒரு நாகரிகத்திலிருந்து மற்ரொரு நாகரிகத்திற்கு மாற்ற முடியும். இந்த நிகழ்ச்சிகள் பல ஒன்று சேர்ந்து ஒரு நாகரிகத்தை உண்டாக்கியபோதிலும், அந்த நாகரிகம் தோன்றுவதற்கு முன்பே இந்த நிகழ்ச்சிகளில் சிலவாவது இருந்திருக்கக் கூடும். நாகரிகம் மறைந்த பிறகும் இவற்றில் சில நீடிக்கக் கூடும். ஆகையால் நாகரிகத்திற்குப் பிறப்பு என்று ஒன்று இல்லை; ஆகையால் அது முற்றிலும் இறப்பதுமில்லை என்ருகிறது.

இவ்விதம் நினைக்கும் ஸோரோகின் போன்றவர்களின் கருத்துப்படி பார்த்தால், கிரேக்க-ரோமானிய நாகரிகங்கள் கிரேக்க இலக்கிய கர்த்தாக்கள் வேதாந்திகள் ஆகியவர்களின் நூல்களிலும், ரோமானிய சட்டம், ரோமானிய ஆட்சி முறை ஆகியவற்றிலும் இன்னமும் ஜீவித்திருக்கின்றன என்றே கூற வேண்டும்.

"கிரேக்க-ரோமானிய நாகரிகங்களின் கலாசார அம்சங்களில் பல, நம்முடைய நாகரிகத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டு, அநுஷ்டானத்தில் கடைப்பிடிக்கப் பட்டு வருகின்றன. சென்ற வருஷம் அதிகம் விற்பனையான புத்தகங்களையும், நேற்றைய மோஸ்தர்களையும் விட இவை அதிக காலம் ஜீவித்திருக்கின்றன. இவை ஜீவனுடன் வாழ்ந்து நம் வாழ்க்கையையும் பாதிக்கின்றன. எந்தப் பெரிய நாகரிகமும் அடியோடு அழிந்து விடுவதில்லை. "மறைந்து போனவை" என்று கருதப்படும் பழைய நாகரிகங்களில் ஒரு கணிசமான பகுதி—சில நாகரிகங்களின் மிகப் பெரும் பகுதி—இன்னமும் ஜீவித்திருக்கின்றன என்று நிச்சயமாகக் கூற

லாம்'' என்று அவர்கள் வாதிக்கின்றனர்.

இந்த வாதத்தைத் துருவி ஆராய்ந்தால் இது தவறு என்பது விளங்கும். ஹோமர், பிளேட்டோ ஆகியவர்களின் நூல்கள் இன்னமும் படிக்கப் படுகின்றன. ரோமானிய சட்டங்கள் இன்னமும் படிக்கப்பட்டு பிரயோகிக்கப்படுகின்றன என்பதால் அந்த நாகரிகங்கள் இன்னமும் ஜீவித்திருக்கின்றன என்பதில்லை. நாம் பைஜாமா அணிவதாலும், காப்பி குடிப்பதாலும் ஆட்டோமான் நாகரிகம் ஜீவித்திருக் கிறது என்பதுமில்லை. ஓர் ஆசிரியர் இறந்துவிட்ட பிறகும் அவருடைய நூல்களை அதிக மக்கள் படித்துக்கொண்டிருப்பார்கள். ஓர் ஓவியர் மறைந்து போன பிறகும் அவருடைய சித்திரம் பாராட்டப் பட்டுக் கொண்டிருப்பதும் உண்டு. ஒரு தேயிலைச் செடியின் இலை தேநீர் தயாரிப்பதற்காக உபயோகிக் கப்பட்டு வந்த போதிலும் அந்தச் செடி இறந்து விட்டிருக்கக் கூடும். ஒரு நாகரிகம் ஜீவித்திருக் கிறதா அல்லது இறந்து விட்டதா என்பதற்கு, அதன் மூலம் புதிய உருவங்களை ஏற்படுத்த முடியுமா என்பதுதான் சோதனை. இந்த விஷயத் தில் மட்டும் ஜீவனுள்ள பொருள்களுக்கும் கலா சாரங்களுக்குமிடையில் வித்தியாசமில்லை. கிரேக்க, ரோமானிய நாகரிகங்கள் அழிந்த பின் புதிதாக கிரேக்க இலக்கியம் எதுவும் தோன்றவில்லை. புதிய ரோமானிய சிற்பங்களோ சட்டங்களோ தோன்ற வில்லை. பிற்கால ஆசிரியர்கள் கிரேக்க மொழியிலும், லத்தீன் மொழியிலும் நூல்கள் எழுதினர். இப்பொழு தும் எழுதிக்கொண்டிருக்கலாம். ரோமானிய பாணி யில் கட்டடங்கள் தோன்றின. ரோமானிய சட்டங் களைப்பற்றிப் பலர் வியாக்கியானங்கள் செய்திருக்க லாம். ஆனால் இவையெல்லாம் கிரேக்க, ரோமானிய நாகரிகங்களின் ஒரு பகுதியாக முடியாது. ஒரு நாக

ரிகம் வளர்ந்து புதிய உருவங்களைச் சிருஷ்டிக்க முடியாத பொழுது அது சிறந்த நாகரிகமாகி விடுகிறது. கடந்த காலத்தில் இந்த நாகரிகங்களின் மூலம் தோன்றிய உருவங்கள் இன்னமும் நம் கலாசாரப் பொக்கிஷங்களாகப் போற்றப்படுகின்றன என்பதால் நிலைமை மாறுவதில்லை.

டாய்ன்பியின் நூலுக்கு எதிராகக் கூறப்படும் மற்ற வாதங்களுக்கும், மேலே கூறப்பட்ட முதல் வாதமே ஆதாரமாக அமைகிறது.

டாய்ன்பியுடன் பேராசிரியர் கெய்ல் ரேடியோவில் நடத்திய விவாதத்தில், இந்த நூல் மேற்கத்தி நாகரிகத்தின் எதிர்காலம் பற்றி அசுவசியமான சோகத்தைக் கிளப்பி விடுவதாகச் சொன்னார். இதற்கு டாய்ன்பி பதில் அளிக்கையில், "ஒரு சித்தாந்தம் கிலேசத்தை ஏற்படுத்துகிறதா அல்லது சந்தோஷத்தை ஏற்படுத்துகிறதா என்பதற்கும் அது சரியா தப்பா என்பதற்கும் சம்பந்தமில்லை" என்றார். உண்மைகளைப் பாரபக்ஷமின்றி ஆராய்ந்து காணும் ஒரு முடிவு வருத்த மூட்டுவதாக இருக்கிறது என்ற ஒரே காரணத்தினால் அதை நிராகரிப்பது கோழைத்தனம்.

இந்த வாதத்திற்கு இன்னும் அடிப்படையான பதில் ஒன்று இருக்கிறது. அழிவுதான் நம் நாகரிகத்தின் தலைவிதி என்பதே டாய்ன்பி வாதத்தின் பொருளானால்தான் அது நமக்கு வருத்தம் ஏற்படுத்தும். டாய்ன்பி இதை பலமாக மறுத்திருக்கிறார்; இதற்கு நேர்மாறான கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார்.

டாய்ன்பியின் "சவால்-ஜவாப்" வாதப்படி நம் காலத்தில் கவலை யூட்டக் கூடிய சம்பவங்கள் பல நிகழ்ந்துள்ளன வென்றால், இவை "செயல் புரியுமாறு தூண்டும் சவால்களே யன்றி நம் உறுதியை அழிக்

கும் மரண தண்டனை அல்ல.''

டாய்ன்பியின் வாதத்திற்கு எதிராகக் கூறப்படும் மற்ற வாதங்கள் அவருடைய ஒருதலைப் பக்ஷமான போக்கைக் கண்டிக்கின்றன. சரித்திரத்தில் நிகழ்ந்துள்ள எண்ணற்ற சம்பவங்களில் தம் வாதத்திற்கு ஆதரவான உதாரணங்களை மாத்திரம் அவர் எடுத்துக் காட்டுகிறார் என்பது முதல் ஆக்ஷேபம். அவரைப் போலவே நிரம்பப் படித்த வேறு யாரும், அவருடைய வாதங்களுக்கு எதிராக, அதே அளவு உதாரணங்களை எடுத்துக் காட்ட முடியும். தாம் நடுநிலைமையில் இருப்பதாக டாய்ன்பி நம்பினாலும், உண்மையில் தம் வாதங்களுக்குப் பொருத்தமான உதாரணங்களையே அவர் பொறுக்கி எடுக்கிறார்.

அவர் எடுத்துக் காட்டியுள்ள உதாரணங்களையே சிறிதோ அல்லது முற்றிலுமோ வேறு விதமாக வியாக்கியானம் செய்தால் அவருடைய வாதங்களை அவை ஆதரிக்காது என்றும், அவருக் கெதிராகவே அவற்றை உபயோகிக்க முடியுமென்றும் வேறு சில விமரிசகர்கள் கூறுகின்றனர்.

டாய்ன்பியின் முடிபுகள் கிரேக்க நாகரிகத்தின் வளர்ச்சியையே அடிப்படையாகக் கொண்டதென்றும், மற்ற சமூகங்களையும் அந்த அமைப்பில் பொருத்த அவர் முயற்சிக்கிறாரென்றும் வேறு சில விமர்சகர்கள் கூறுகின்றனர். உண்மைகளை அளவுக்கு மீறி எளிமைப் படுத்துதவன் மூலம் தம் வாதத்தை எளிமையாகவும் அழகாகவும் சித்திரிக்கிறார் என்று சிலர் கூறுகின்றனர். அவர் தெளிவான, சுலபமாகப் புரியும்படியான சித்திரத்தைத்தான் வரைந்திருக்கிறார். ஆனால் அது உண்மைக்குப் பொருத்தமானதாக இருக்கிறதா? இல்லையென்றே, அவருடைய நூலைப் பற்றிச் சர்ச்சை செய்த சரித்திராசிரியர்கள் அனைவரும் கருதுகின்றனர்.

"சரித்திரத்தைப் புராணத்தின் அளவுக்கு டாய்ன்பி சுலபப்படுத்தி விடுகிருர். அவர் எவ்வளவு அழகான வார்த்தைகளை உபயோகித்தாலும், சரித்திரத்தில் இயங்கும் மிகச் சிக்கலான முறைகளை, ஒரு சில சக்திகளே வேலை செய்வதுபோல் சுருக்கிக் காட்டுகிருர்" என்கிருர் புரொபஸர் கே. ஜி. லோச்சர்.

இந்த சரித்திராசிரியர்களின் ஆதாரத்தையும் சரித்திர உண்மைகளையும் கொண்டு பார்க்கும்பொழுது விஷயங்களை டாய்ன்பி அளவுக்கு மீறித்தான் எளிமையாகக் காட்டுகிருர் என்பது விளங்கும். நாகரிக வளர்ச்சியிலும், சிதைவிலும் டாய்ன்பியின் சித்தாந்தம் அநுமதிக்காத அளவுக்கு நாம் சில உதாரணங்களை அடுத்த அத்தியாயங்களில் கவனிப்போம்.

இருந்தபோதிலும், இது அந்த சித்தாந்தத்தை மொத்தமாகச் செல்லுபடியாகாததாகச் செய்துவிடாது. எல்லா எதிர்ப்புகளும் டாய்ன்பி பொறுக்கி எடுத்துள்ள உதாரணங்களையும், அவை உபயோகப்படும் முறையையுமே பற்றியவையாகும். அவருடைய பொதுவான சிந்தனைப் போக்கை இவை தாக்கவில்லை. அவர் உதாரணங்களை ஒரு தலைப்பக்ஷமாக உபயோகித்தாலும், அவருடைய சித்தாந்தத்தின் பொது அமைப்பில் ஒரு பொருள் உள்ளவரை, அந்த சித்தாந்தம் முழுவதையுமே தவறென்று தள்ளிவிட முடியாது. புதியதாகத் தோன்றும் எந்தப் பெரிய சித்தாந்தத்தைத் துருவி ஆராய்ந்தாலும், சில இரண்டாம் பக்ஷ, அல்லது சில முக்கியமான விஷயங்களிலோ கூட தவறுகளோ, மிகையான கூற்றுகளோ இருப்பது தெரியும். இதனுல் அந்த சித்தாந்தத்திற்கு மதிப்பில்லையென்றே, அது தவறென்றே ஆகாது.

ஒரு தலைப் பக்ஷமானது என்று காரணம் கூறுபவர்கள் மற்றொரு காரணத்திற்காகவும் இதைக் கண்

டிக்கின்றனர். நாகரிகத்தின் ஒரு முக்கியமான அம்ச மாகிய கலைகள் விஷயத்தில் டாய்ன்பி கவனம் செலுத்தவில்லை யென்று அவர்கள் கூறுகின்றனர். விஞ்ஞானம், தொழில்நுட்ப வளர்ச்சி முதலிய முக்கிய மான விஷயங்களை அவர் அடியோடு புறக்கணித்து விட்டாரென்பதையும், விஞ்ஞான வரலாறு, பொருளா தார வரலாறு, கலாசார சரித்திரம், சமூக சரித்திரம் முதலியவற்றை அவர் கவனிக்கவேயில்லை யென்றும் குற்றம் சாட்டுகின்றனர். சரித்திரத்தின் போக்கை ஆத்மீக, அரசியல் சக்திகள் தான் நிர்ணயிக்கின்றன என்ற அவருடைய நம்பிக்கைதான் இதற்குக் காரணம். ஒரு நாகரிகத்தின் ஜீவிய காலத்தில் முக்கியமாக உள்ள அம்சங்களையும், நம் நாகரிகத்தின் எதிர்காலம் பற்றி ஹேஷ்யம் கூறுவதற்கு அவசியமான சில காரண காரியங்களையும் அவர் போதுமான அளவு கவனிக்க வில்லை. இந்த ஆக்ஷேபம் சரியென்றால் இது அடிப் படை முக்கியத்துவம் பெற்றதாக ஆகும். குறிப்பாக சரித்திரத்தில் தொழில் நுட்பமும் பொருளாதாரமும் புறக்கணிக்கப்படுவதை சரித்திரீய பொருளாதாரத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் சகிக்கமாட்டார்கள்.

ஆனால் கீழ்காணும் சில முக்கியமான உதாரணங் களைக் கவனித்தால் இந்தக் கண்டனங்கள் நியாய மல்ல என்பது தெரியும்.எகிப்திய நாகரிகத்தின் தோற் றத்திற்குக் கடுமையான பொருளாதார சூழ்நிலையே காரண மென்று டாய்ன்பி கூறுகிறார். அதன் முறி வுக்குக் காரணம், பிரமிடு (நான்முக கோபுரங்கள்) கட்டுவதற்கு மனித சக்தி அளவுக்கு மீறி இழுக்கப் பட்டதே என்கிறார். ஏதன்ஸின் அளவு மீறிய ஜனத் தொகைப் பிரச்னைக்கு அது கண்டு பிடித்த பரிகாரமே அதன் உயர்வுக்குக் காரணமென்கிறார். ரோமானிய சமூகத்தின் முறிவுக்கு பிரம்மாண்டமான ஜமீன்களே காரணமென்று டாய்ன்பி கூறியிருக்கிறார். உண்மை

யில் அவருடைய "சவால்-ஜவாப்" வாதத்தில், ஆரம்ப கால சவால்கள் பெரும்பாலும் பொருளாதாரத் தன்மை வாய்ந்தவையாகவே இருக்கின்றன.

இந்த விமர்சகர்கள் கண்டிப்பதெல்லாம், "பொருளாதார, தொழில் நுட்ப, உலகாயத காரணங்கள் தான் மற்றெல்லாவற்றையும்விட முக்கியம்; அறிவே ஆதிக்கம் செலுத்துகிறது" என்ற தங்கள் நம்பிக்கைகளை டாய்ன்பி ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைத்தான். எந்த பாரபக்ஷத்திற்காக டாய்ன்பி மீது இவர்கள் குற்றம் சாட்டுகிறார்களோ அந்தப் பாரபக்ஷம் இந்த நம்பிக்கைகளுக்கும் பொருந்தும்.

விஞ்ஞானத்தின் சரித்திரமும் பொருளாதார சரித்திரமும் புறக்கணிக்கப்பட்டு விட்டதாக மற்றொரு குற்றச்சாட்டு.

"சரித்திர ஆராய்ச்சிக்கான அளவை, ஒரு சமுதாய ஆட்சியோ, மனித ஜாதி முழுமையுமோ அல்ல; ஆனால் நாம் 'சமூகம்' என்று அழைக்கும் ஒரு மனித கோஷ்டியேயாகும்" என்பதுதான் டாய்ன்பியின் அடிப்படை வாதங்களில் ஒன்று. மேற்கத்தி நாகரிகத்தைப் புரிந்துகொள்ளாவிட்டால் இங்கிலாந்தின் சரித்திரத்தைப் புரிந்துகொள்ள முடியாததுபோல, கிரேக்க அராபிய நாகரிகங்களைப் புறக்கணித்தால் மேற்கத்தி நாகரிகத்தைப் புரிந்துகொள்ள முடியாது என்ற காரணத்தினால் இந்த அடிப்படைக் கருத்து தாக்கப்படுகிறது.

நாகரிகத்தின்மீது விஞ்ஞானமும் பொருளாதாரமும் செலுத்தும் செல்வாக்கை டாய்ன்பி குறைத்து மதிப்பிடுவதுதான் இந்த அடிப்படையான அநுமானத்திற்குக் காரணமென்றும் கருதப்படுகிறது. இவற்றையும் கவனித்தால், ஒரே நாகரிகத்துடன் நில்லாமல், பல நாகரிகங்களுக்கு வியாபிக்கும், நாகரிகங்களின் நீண்ட காலப் போக்கை இவை வெளியிடுமென்று

இந்த விமர்சகர்கள் கருதுகின்றனர்.

நாகரிகங்களுக்கிடையே உள்ள உறவை டாய்ன்பி உணர்ந்திருக்கிருர் என்பதை எடுத்துக் காட்டுவது தான் அவருக்கு நியாயம் வழங்குவதாகும். ஒரு சமூகத்தின்மீது ஏற்படும் மற்ருெரு சமூகத்தின் செல்வாக்கை அவர் புறக்கணித்து விடவில்லை.

கடைசியாக அவருடைய 'நாகரிக முறிவு' பற்றிய சர்ச்சைக்கு வருகிருேம். இதற்கெதிராகக் கூறப்படும் வாதம் அவருடைய மகத்தான நூலையே தகர்த்து விடக் கூடிய அடிப்படைத் தன்மை வாய்ந்ததல்லவென்ருலும் ஓரளவு முக்கியமானதாகும்.

இந்த விஷயத்தை அவர் கையாளும் முறை இரண்டு விதத்தில் கண்டிக்கப்படுகிறது. ஒன்று முறிவின் காலத்தைப் பற்றியதும், மற்ருென்று அதன் தன்மையையும் விளைவுகளையும் பற்றியதுமாகும்.

கிரேக்க நாகரிகத்தின் முறிவு, பெலோ போனேஷிய யுத்தத்தின் ஆரம்பத்துடன், கி. மு. 431-ம் ஆண்டில் ஆரம்பமானதாக டாய்ன்பி கூறுகிருர்.

ஒரு நாகரிகத்தின் ஜீவிய காலத்தில் மிகவும் முன் கூட்டியே அதன் முறிவு ஆரம்பமாகிவிட்டதாக டாய்ன்பி கூறுகிருர் என்பது நியாமான முறையில் எடுத்துக்காட்டப் பட்டிருக்கிறது. இதை நிரூபிப்பதற்கு மூன்று உதாரணங்களை எடுத்துக் காட்டினுல் போதும்.

கிரேக்க நாகரிகத்தின் முடிவு பெலோ போனேஷிய யுத்தம் ஆரம்பமானபோது, கி. மு. 431-ம் வருஷத்திலேயே ஆரம்பமாகிவிட்டதாக டாய்ன்பி கூறுகிருர். கிரீஸின் முடிவு அப்பொழுதே ஆரம்பமாகி விட்டதாக போதிய ஆதாரங்களுடன் வாதிக்கலாம். ஆனுல் டாய்ன்பி கருதுவதுபோல் கிரேக்க சாம்ராஜ்யத்தையும் ரோமானிய சாம்ராஜ்யத்தையும் ஒன்ருகக் கருதுவதானுல் ரோமானிய சாம்ராஜ்யத்தின் சாதனைகளெல்

லாம் அந்த நாகரிகத்தின் அஸ்தமன காலத்தைச் சேர்ந்தவையாகி விடும்.

"வைதிக" ரஷிய நாகரிகத்திற்கும் இது பொருந்தும். இது பத்தாம் நூற்ருண்டில் ஆரம்பமாயிற்று. டாய்ன்பியின் கருத்துப்படி, 12-ஆம் நூற்ருண்டில் கீவ் அரசாங்கம் நசித்ததிலிருந்து இதன் முறிவு ஆரம்பமானதாக ஆகிறது. அதன் கஷ்ட காலம் 1075-ம் ஆண்டில் ஆரம்பமானதென்கிருர். இப்படிப் பார்த்தால் இந்த நாகரிகத்தின் வளர்ச்சிக்காலம் ஒரு நூற்ருண்டே ஆகிறது.

மேற்கத்தி நாகரிகத்திற்கு அவருடைய வாதத்தைப் பிரயோகிக்கும்பொழுது இந்தத் தவறு இன்னும் தெளிவாகத் தெரிகிறது. மேற்கத்தி நாகரிகம் முறிந்து விட்டதா என்பதை டாய்ன்பி இன்னும் தெளிவாகச் சொல்லவில்லை. ஆனல், மேற்கத்தி நாகரிகம் முறிந்து சீர்குலைந்து விட்டதென்ருல் அபிப்பிராயத்தை அவர் ஏற்படுத்தி யிருப்பதாக அவர் கூறியுள்ள பல விஷயங்களிலிருந்து அறிய முடிவதாக அவர் சகாக்கள் கருதினர். பதிஞரும் நூற்ருண்டில் மதத்திற்காக யுத்தங்கள் நடந்தபொழுதே இந்த முறிவு ஏற்பட்டிருக்க வேண்டும். கெய்ல் கூறுவதுபோல், சென்ற நான்கு நூற்ருண்டுகளும் நீண்ட சீர்குலைவுக் காலமாகவே இருந்திருக்க வேண்டும்.

விமர்சகர்கள் எடுத்துக் காட்டும் உதாரணங்களில் ஒரு சில உதாரணங்கள் மட்டுமே இங்கு குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றின்படி பார்த்தால், நாகரிகத்தின் முடிவுமிகவும் முன்கூட்டியே நிகழ்ந்துவிட்டதாக டாய்ன்பி கூறுகிருர் என்று ஆகிறது. அல்லது "முறிவு" என்ற வார்த்தையை அவர் குழப்பம் ஏற்படுத்தும் முறையில் உபயோகித்திருப்பதாகக்கொள்ள வேண்டும்.

டாய்ன்பியின் பாஷையில் "முறிவு" என்ற சொல்

எதைக் குறிக்கிறது? அதன் விளைவு என்ன? நாகரிகத்தின் ஒரு திருப்பம் என்ற அர்த்தத்திலேயே அவர் உபயோகித்திருக்கிறார். நாகரிகத்தின் வளர்ச்சிக்கும் தாழ்வுக்குமிடையில் உள்ள சிக்கல் என்ற பொருளில் இந்த சொல் உபயோகிக்கப்பட்டுள்ளது. இவ்விதம் உபயோகித்தால் "திரும்ப முடியாத ஒரு நிலை" என்று இச்சொல் பொருள்படும்; நாகரிகம் மீளமுடியாத ஒரு பெருந் தவறு செய்துவிட்டதாக-நெருக்கடியில் வீழ்ந்து விட்டதாக-ஆகும்.

அப்படியானால்-நாகரிகத்தால் முறிவு ஏற்பட்டு விட்டால்-பிறகு அந்த நாகரிகம் சீர்குலைய வேண்டியதுதான். முன்பே நிர்ணயமான ஒரு விதியின்படி நிகழும் ஒரு சம்பவமாக இது ஆகிவிடும். ஆனால் இந்தக் கருத்தை டாய்ன்பி பலமாக நிராகரிக்கிறார்.

சரித்திரத்தின் விதி முன் கூட்டியே நிர்ணயிக்கப் படுவதில்லையென்று இந்தச் சரித்திராசிரியர் கூறுவதை நாம் மதிக்க வேண்டும். எந்தச் சமயத்திலும், அதாவது முறிவுக்குப் பிறகு கூட நாகரிகம் புத்துயிர் பெறமுடியும் என்பதே இதன் பொருள். நம்முடைய தற்போதைய நாகரிகம் பற்றி அவர் பின்வருமாறு கூறுகிறார். ''சரித்திரத்தில் ஏற்கெனவே நிகழ்ந்திருப்பது போல் மேற்கத்தி நாகரிகம் இஷ்டப்பட்டால் சமூகத் தற்கொலை செய்துகொள்வதை ஒன்றும் தடுத்து விடுவதற்கில்லை, ஆனால் சரித்திரத்தில் ஏற்கெனவே நிகழ்ந்ததுபோல் மீண்டும் நிகழ்வதற்கு நாம் விட வேண்டியதில்லை. இதற்கு முன் நிகழாத வகையில் சரித்திரத்தை நாம் புது வழியில் திருப்பிவிட முடியும். மனிதர்கள் என்ற முறையில் நமக்கு செயல் சுதந்திரம் உண்டு. நம் பொறுப்பை கடவுள் மீதும் இயற்கையின் மீதும் சுமத்திவிட முடியாது. அதை நாம் தான் ஏற்கவேண்டும். அது நம் பொறுப்பு...தவிர்க்க முடியாத விதியின் வசத்தில் நாம் இல்லை" என்கிறார்

("நாகரிகத்தின் சோதனை" என்ற நூலில்).

இந்த ரீதியில் பார்த்தால் முறிவு என்பது முற்றிலும் வேருகப் பொருள்படுகிறது. அது ஈடு செய்ய முடியாத விபரீத மல்ல;- நாகரிகத்தை இறுதியில் அழிக்கக் கூடிய தவறுகளின் ஆரம்பமே ; மனித உடலின் நோயின் ஆரம்ப நிலையில் தோன்றும் அறிகுறிகள் போன்றதே. ஒருவன் நிமோனியாவிஞல் இறப்பதாக வைத்துக் கொள்வோம். அவனுடைய ஹிருதயம் பலமாக இருந்திருந்தாலும், அல்லது அவனுக்கு ஜலதோஷம் ஏற்பட்டவுடனேயே அதைக் குணப்படுத்துவதில் கவனம் செலுத்தி யிருந்தாலும் அவன் பிழைத்திருக்கக் கூடும். அவனுக்கு ஜலதோஷம் பிடித்தவுடனேயே, அவன் இறந்து விடுவான் என்று யாரும் சொல்லி யிருக்க முடியாது.

ஒரு நாகரிகம் "முறிவு" ஏற்பட்ட பின் மறுபடியும் தோன்றி அபிவிருத்தியடைந்து வாழமுடியாது என்று இந்த "முறிவு" என்ற வார்த்தைக்குப் பொருள் கொள்ள முடியாது. குழந்தைப் பருவத்திலேயே க்ஷயரோகத்தின் அறிகுறிகள் காணப்பட்ட ஒருவன் நாற்பதாவது வயதில் அந்நோயிஞல் இறப்பதாக வைத்துக் கொள்வோம். அவன் பெரியவஞக வளர்வதை அந்நோய் தடுக்கவில்லை. அவனுக்குக் காலாகாலத்தில் சிகிச்சை செய்திருந்தால் அவன் எழுபது வயதுவரையில் கூட ஜீவித்திருக்கக் கூடுமல்லவா? இந்த அர்த்தத்தில் பார்த்தால் "முறிவு" என்ற வார்த்தைக்கு அதன் வழக்கமான பயங்கர அர்த்தம் தோன்றவில்லை. ஆஞல் டாய்ன்பி இதை இந்த அர்த்தத்திலும் அடிக்கடி உபயோகிக்கிருர்.

இவ்விதம் இரு பொருள்படக் கூறுவது அவருடைய நூல் முழுமையிலுமே காணப்படுகிறது. இந்த இருமை அவருடைய அடிப்படை மனப்பான்மையிலேயே காணப்படுகிறது; நாகரிகம் ஒரு குறிப்

பிட்ட பாதையிலேயே செல்கிறது என்று ஒருபுறமும் ஒரு குறிப்பிட்ட சமயத்தில் அது மேல் நோக்கியோ கீழ் நோக்கியோ செல்கிறது என்று மற்ருெரு பக்க மும் கூறுகிருர். அவர் மனத்தில் கர்ம வாதத்திற்கும் சோதனை வாதத்திற்கு மிடையில் நிகழும் போராட்டம் இது; உண்மையைக் காண வேண்டுமென்ற ஆவலி ஞல் எழும் போராட்டம்.

இருந்தாலும் மேற்கத்தி நாகரிகத்தின் எதிர் காலம் பற்றி எவ்வித முடிவு செய்வதாளுலும் இந்தக் குழப் பத்தை நன்ருகப் புரிந்து கொண்டு அதன் விளைவுகளை ஊகிக்க வேண்டும். முறிவு தவிர்க்க முடியாத விபரீத மென்ருல், அந்த முறிவு மேற்கத்தி நாகரிகத்தில் ஏற் பட்டு விட்டதா என்பது சாவா வாழ்வா என்ற பிரச்னை யாகும். முறிவு ஏற்பட்டு விட்டதென்ருல் ஸ்பெங்லர் கூறுவது போல் இது அழிவது நிச்சயம். அன்றி இந்த முறிவு என்பது நோயின் ஆரம்ப அறிகுறிகளே யென்ருல் அதன் முக்கியத்துவம் குறைந்துவிடுகிறது. "முறிவு" என்று கூறப்படும் நிலை ஏற்பட்ட பிறகும் இந்த நாகரிகம் சிறந்த பலனை அளிக்க முடியும். டாய்ன்பியின் சித்தாந்தத்தில் ஏதாவது பொருள்காண வேண்டுமென்ருல் இந்தச் சொல்லுக்கு இரண்டாவ தாகக் கூறப்படும் பொருளைத்தான் ஏற்கவேண்டு மென்பது அடுத்த அத்தியாயத்தில் வரும் உண்மை களிலிருந்து தெரியும். உண்மையில் இந்த அர்த்தத் தில்தான் இந்தச் சொல்லைத் தாம் உபயோகிக்க நினைத்ததாகவும் பேராசிரியர் டாய்ன்பி இந்நூலாசிரி யரிடம் கூறினுர்.

"முறிவு" வாதம் தற்சமயம் ஜீவித்திருக்கும் நாக ரிகங்களுக்கு முக்கிய மென்ருலும் அது அவருடைய சித்தாந்தத்தையோ அல்லது அதன் முக்கிய அம்சங் களையோ அழித்து விடவில்லை. பல சமூகங்களில் உண்மையான முறிவு டாய்ன்பி குறிப்பிடும் காலத்

திற்கு வெகு நாள் பின்னால் நிகழ்ந்துள்ளதென்றாலும் அவருடைய வாதத்தின் பொது அமைப்பிற்கு பாதக மில்லை.

டாய்ன்பியின் சித்தாந்தம் எட்டு முக்கிய காரணங் களுக்காகத் தாக்கப்படுகிறதென்பதை இதுவரை பார்த்தோம். முதல் ஆக்ஷேபத்தைத் தவிர மற்றவை அந்த சித்தாந்தத்தை மறுக்கக் கூடியவை அல்ல வென்பது இதுவரை சுருக்கமாகக் கூறப்பட்ட விஷ யங்களிலிருந்து தெரியும்.

முதல் ஆக்ஷேபத்தின் விஷயம் வேறு.சரித்திரத்தில் ஒரு பொது அமைப்பையோ கோர்வையையோ காண முடியாத அளவுக்கு அது மிகவும் சிக்கல் வாய்ந்த தென்றால் டாய்ன்பி மிகவும் ஜாக்கிரதையாகக் கட்டி யுள்ள தெளிவான கட்டிடம் முழுவதும் தரை மட்டத் திற்கு வீழ்ந்து விடுகிறது.

ஆகையால் நாகரிகங்களின் வாழ்க்கையில் ஒரு பொது அமைப்பைக் காண முடியுமா என்ற பிரச்னை இன்னும்மும் பதிலளிக்கப்படாமலே நிற்கிறது. அந்தப் பிரச்னையை அடுத்த அத்தியாயத்தில் கவனிக்கலாம்.

# 8

## சேர்க்கையே நாகரிகங்களின் அமைப்பு

இந் நூலின் முதல் பாகம் முடிவை நெருங்கு கிறது. நம்முடைய நாகரிகத்தின் தற்போதைய நிலை யையும் எதிர்காலப் போக்கையும் ஆராய்வதற்கான சாஸ்திரீயமான அடிப்படையை இந்த முதல் பாகத்தில் அமைத்துக்கொண்டோம். நாகரிகங்களின் வாழ்க் கையையும் அழிவையும் பற்றிய ஒரு சித்தாந்தத்தை வகுப்பதற்காகச் செய்யப்பட்ட ஒரு புராதனமான முயற்சியையும், மகத்தான இரு நவீன முயற்சிகளையும் இதுவரை சுருக்கமாகக் கவனித்தோம். சரித்திரம்

சக்கரம் சுழல்வது போன்ற லயத்துடன் நிகழ்கிற தென்ற முடிவுக்கே இந்த மூன்று ஆசிரியர்களும் வருகின்றனர். இவை தவிர, சுழலும் கருத்தை அடிப்படையாகக் கொள்ளாத மற்றும் பல முக்கியமான முயற்சிகளும் செய்யப்பட்டிருக்கின்றன. ரஷியாவில் பிறந்த தத்துவ ஆராய்ச்சியாளர்களான பெர்டியேவ், ஸோரோகின், பால்டிக்கைச் சேர்ந்த ஷூபர்ட், அமெரிக்கர்களான நார்த்ராப், க்ரோபர் முதலியோர் இவ்விஷயத்தை ஆழ்ந்து ஆராய்ந்திருக்கின்றனர். சுழலும் வாதத்தை இவர்கள் ஏற்கவில்லை யென்றாலும் அதன் அம்சங்கள் பலவற்றை ஆதரிக்கின்றனர். இருதரப்பு வாதங்களையும் ஆராய்ந்த ஸோரோகின், "இவர்களுக்கிடையே உள்ள வேற்றுமை வெளிக்குத் தோன்றுவதைவிட மிகக் குறைவு; இவர்களுக்கிடையே காணப்படும் ஒற்றுமை குறிப்பிடத் தக்கது என்ற முடிவுக்கு வருகிறார். முன்னுரையில் கூறிய காரணங்களுக்காக டானிலெவ்ஸ்கி, ஸ்பெங்லர், டாய்ன்பி ஆகிய மூவரின் சித்தாந்தங்களைப் பற்றி மட்டும் இங்கு ஆராய்ந்தோம். இருந்தாலும், மற்றவர்களின் அனுபவங்களையும் இந்த அத்தியாயத்தில் பயன்படுத்திக் கொள்வோம். அவற்றைப்பற்றிக் குறிப்பிட வேண்டிய சந்தர்ப்பங்கள் அடிக்கடி ஏற்படும்.

நாம் ஒரு முடிவு காண முயற்சிக்கையில், ஸ்பெங்லர், டாய்ன்பி ஆகிய இருவரின் மாபெரும் சிந்தாந்தங்களையும் ஒப்பிட்டுப் பார்ப்பது பயனளிக்கும். டானிலெவ்ஸ்கி இவ்விஷயத்தை இவர்களைப்போல் அவ்வளவு ஆழ்ந்து ஆராயாததால் அவருடைய சித்தாந்தம்கூட அவ்வளவு முக்கியமல்ல.

ஸ்பெங்லருக்கும் டாய்ன்பிக்கு மிடையில் அடிப்படையான வித்தியாசங்கள் பல இருக்கின்றன. வாழ்க்கையை இவர்கள் நோக்கும் விதத்தில் உள்ள வித்தியாசம் மிகவும் அடிப்படையானதாகும். ஸ்பெங்

லர் ராணுவ வாதி; டாய்ன்பி கிறிஸ்தவர். ஸ்பெங்லருக்கு, பிரச்னைகளை இறுதியாக முடிவு செய்யும் விஷயம் பலாத்காரம். பலசாலியே வாழ வேண்டுமென்பதுதான் சரித்திரம் போதிக்கும் உண்மை என்பது அவர் கருத்து. ஆனால் சரித்திரத்தில் ஒரு தார்மீக நோக்கம் இருக்கிறதென்று டாய்ன்பி நம்புகிறார். மனிதனைக் காட்டுமிராண்டி நிலையிலிருந்து மனித நிலைக்கும் பின்னர் மனிதத் தன்மையையும்விட உயர்ந்த நிலைக்கும் உயர்த்துவதே சரித்திரத்தின் லக்ஷியமென்று அவர் கருதுகிறார். யுத்தமும் ராணுவ வெறியும்தான் சிருஷ்டி கர்த்தாக்களென்பது ராணுவ வாதியான ஸ்பெங்லரின் கருத்து. பெருமை பொருந்திய எல்லாவற்றையும் அழிக்கக் கூடியவை இவை என்பது கிறிஸ்தவரான டாய்ன்பியின் கருத்து. அரசியலோ சரித்திரமோ தார்மீக விதிகளுக்கு உட்பட்டவையல்ல என்பது ஸ்பெங்லரின் கொள்கை. இவை இரண்டுமே கடவுளின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டவை என்பது டாய்ன்பியின் நம்பிக்கை.

இந்தக் கருத்து வேற்றுமைகளினால் இருவரின் முடிவுகளிலுமே முக்கியமான வித்தியாசம் ஏற்படுகிறது. இதற்கு ஓர் உதாரணம் நாலாவது அத்தியாயத்தில், 'நாகரிகத்திற்குக் குருட்டுத்தனமாகப் பணிவது பற்றிக் கூறப்பட்டது. மற்றோர் உதாரணம் இங்கே தரப்படுகிறது. ரோமானிய நாகரிகத்தின் அஸ்தமன காலம் கி. மு. 41-ம் ஆண்டில், ஆக்டியம் போருக்குப் பின் ஆரம்பமானதாக ஸ்பெங்லர் கூறுகிறார். ஏனெனில் அதன் பிறகு ரோமானியர் பெரிய அளவில் போர் புரியவில்லை. ஆனால், ரோமானிய நாகரிகம் உள்ளிட்ட கிரேக்க நாகரிகத்தின் தாழ்வு கி. மு. 431-ம் வருஷத்தில் பெலோ பொனேசிய யுத்தத்தின்போதே ஆரம்பமாகி விட்டதாக டாய்ன்பி கூறுகிறார். இவர் இப்படி நினைப்பதற்குக் காரணம்,

இந்தப் போருக்குப் பிறகுதான் கிரேக்க ராஜ்யங்களுக்குள் பெரிய அளவில் போராட்டங்கள் நடக்கத் தொடங்கி, அவர்கள் ஒன்று படுவதைத் தடுத்து, அவர்களின் வீழ்ச்சிக்கு வழி கோலின என்பது.

இப் பிரச்னையை ஸ்பெங்லர் ஜெர்மானியருக்கே உரிய முறையில் அணுகுகிருர்; அதேபோல் டாய்ன்பி பிரிட்டிஷ் முறையில் இதை அணுகுகிருர். ஸ்பெங்லர் தெரிந்தோ தெரியாமலோ எல்லா நாகரிகங்களையும் வளைந்து கொடுக்காத ஒரு சட்டத்திற்குள் அடைக்கப் பார்த்தார். ஆனுல் டாய்ன்பி, பிரிட்டிஷ் பாணியில், முன்கூட்டி எவ்விதமான கருத்தும் ஏற்படுத்திக் கொள்ளாமல் இப் பிரச்னையை ஆராய வேண்டுமென்ற நோக்கத்துடன் சோதித்துப் பார்க்கும் பாதையில் செல்கிருர். ஆகையால் ஸ்பெங்லர் கர்மவாதி; டாய்ன்பி சோதனை வாதி. எல்லா நாகரிகங்களின் விதியும் முன் கூட்டியே நிர்ணயமாகி விடுகிறதென்பது ஸ்பெங்லரின் கருத்து. ஆனுல் ஒவ்வொரு நாகரிகமும் தன் எதிர்காலத்தை நிர்ணயித்துக் கொள்ள உரிமை இருப்பதாக டாய்ன்பி நினைக்கிருர். ஸ்பெங்லரின் கருத்துப் படி எல்லா நாகரிகங்களும் தவிர்க்கமுடியாத வகையில் ஒரே மாதிரி பாதையில் செல்லும். டாய்ன்பியின் வாதப்படி நாகரிகங்களின் வளர்ச்சியில் காணப்படும் ஒற்றுமைகளிலிருந்து சில நீண்ட காலப் போக்குகளை ஊகிக்க முடியுமென்ருலும் அவற்றின் வளர்ச்சிக்கு எத்தனையோ மார்க்கங்கள் உள்ளன. ஆனுல் இதில் ஒரு விஷயத்தை மாத்திரம் முதலிலேயே கவனிப்பது அவசியம். அதாவது டாய்ன்பியின் சித்தாந்தம் வளைந்து கொடுக்காதது என்று கருதும் மற்ற ஆசிரியர்களில் அனேகமாக அனைவருமே இவரை ஆதரிக்கின்றனர்.

இத்தகைய அடிப்படையான கருத்து வேற்றுமைகளினுல் நம் காலத்தைப் பற்றியும் வெவ்வேறு வித

மான முடிவு செய்யவே காரணமாகும். மேற்கத்தி நாகரிகத்திற்கு ஏற்கெனவே சாவு மணி அடிக்கப்பட்டு விட்டது என்பது ஸ்பெங்லரின் கருத்து. தவிர்க்க முடியாத நாசத்தைப் பெருந்தன்மையுடன் அனுபவிப் பதா, அல்லது அற்பத்தனத்துடன் அனுபவிப்பதா, பெரிய மனிதர்களைப்போல் சாவதா அல்லது கோழை கள்போல் சாவதா என்பதை நிர்ணயித்துக் கொள்வது தான் நாம் இனி செய்யக்கூடியது என்கிறார் அவர். இதுபற்றி டாய்ன்பி தம் இறுதியான கருத்தை இது வரை வெளியிடவில்லை. ஆனால் அவருடைய கூற்று களைக் கவனித்தால், தற்காலத்தின் அறிகுறிகள் அவ ருக்குப் பெரிதும் கவலை ஏற்படுத்தி யிருக்கின்றன வென்றாலும், மேற்கத்தி நாகரிகத்தின் விதி ஏற் கெனவே நிர்ணயமாகி விட்டதாக அவர் நினைக்க வில்லை என்பது தெரியும். மற்ற ஆசிரியர்களில் பெரும் பாலானவர்கள் இப்படித்தான் நினைக்கின்றனர்.

"நம் காலத்தில் ஏற்பட்டுள்ள நெருக்கடி மனித சரித்திர நாடகத்தின் கடைசிக் காட்சியாக இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை என்பதை ஸ்பெங்ல ரைத் தவிர மற்றெல்லா ஆசிரியர்களும் ஒப்புக் கொள்ளுகின்றனர். இதன் வளர்ச்சியைத் தடுத்து ஒரு புதிய சகாப்தத்தை ஏற்படுத்துவது சாத்தியமே" என்கிறார் ஸோரோகின்.

ஆனால், தேசீய ஆத்மீக அடிப்படைகளில் இந்த ஆழ்ந்த கருத்து வேற்றுமைகள் இருந்த போதிலும் முறையைப் பொருத்த வரையில் ஸ்பெங்லரும் டாய்ன் பியும் மற்றவர்களும் கண்ட பொது முடிபுகளில் ஒரு குறிப்பிடத் தக்க ஒற்றுமை இருக்கத்தான் இருக் கிறது.

வேறொரு நாகரிகத்தைச் சேர்ந்த மற்றொரு தத்துவ ஆராய்ச்சிக்காரர், ஸ்பெங்லருக்கும் டாய்ன் பிக்கும் அரை நூற்றாண்டுக்கு முன்பே எழுதியுள்ள

நூலில் இதே போன்ற முடிவுக்கு வந்திருக்கிறார் என்பதை முதல் அத்தியாயத்தில் காண்கிறோம். இதை கவனிக்கும் பொழுது மேலே குறிப்பிடப்பட்ட ஒற்றுமை இன்னமும் தெளிவாகத் தெரிகிறது.

**ஆசிரியர்களின் கருத்து ஒற்றுமை**

மனிதன் ஜீவனுள்ள நாகரிகமில்லாமல் உயிர் வாழ்ந்த "சரித்திரமற்ற" சகாப்தத்திற்குப் பின் நாகரிகம் பிறந்தது அல்லது தோன்றியது அல்லது வெளிப்பட்டது என்பதை நாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட மூன்று ஆசிரியர்களும் மற்றும் பலரும் ஏதாவது ஒரு பெயரில் ஒப்புக்கொண்டிருக்கின்றனர்.

நாகரிகத்தின் இந்த ஆரம்ப காலத்தில் புராணங்களும், இதிகாசங்களும், பண்படாத கலைகளும் தோன்றுகின்றன. ஆரம்ப மகா கவிகள், கலைஞர்களின் காலம் இது. சமூகத்தின் பொருளாதார, சமூக, ஆத்மீகத் துறைகளில் ஒரே தத்துவம் ஆட்சி புரிகிறது; லௌகீக அதிகாரமும் பிணைக்கப்பட்டோ நெருங்கிய தொடர்பு கொண்டோ இருக்கின்றன. மேல் வகுப்பில் உள்ளவர்கள் மதச் சட்டங்களின் மூலமும் தர்மங்களின் மூலமும் ஆட்சி நடத்துகின்றனர். கடுமையான தார்மீகக் கோட்பாடுகள் பொதுவாக ஒப்புக் கொள்ளப் படுகின்றன. சமூக வாழ்வில் குடும்ப பந்தம் பலமாக உள்ளது. இந்தக் காலத்தின் பொருளாதாரம் கிராமியமாகவும் விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டதாகவும் உள்ளது. ஆகையால் நிலம் படைத்தவர்கள் அதாவது பிரபுக்களும் மதத் தலைவர்களும் சமூக, பொருளாதாரத் துறைகளில் ஆதிக்கம் செலுத்துகின்றனர்.

நாகரிகத்தின் வஸந்தம் அல்லது மலர்ச்சி அல்லது இளமை அல்லது வளர்ச்சிக் காலம், நகரங்கள் தோன்றும் பொழுது ஆரம்பமாகிறது. இந்த நிகழ்ச்சி மதத் தலைவர்களிடமிருந்தும் நிலப் பிரபுக்களிடமிருந்தும் மனித மனத்திற்கு அதிக சுதந்திரம் அளிக்கிறது.

மனத்தை இயக்க வைத்துத் தீவிரமான அறிவு வாழ்க்கையை ஏற்படுத்துகிறது. இருப்பினும் தேசீயத்தை மதமும், தர்க்க ஞானத்தைவிட இயற்கை உணர்வும், உபயோக அம்சத்தைவிடச் சம்பிரதாயமும், உலகாயத மதிப்புக்களைவிட ஆத்மீக மதிப்புக்களுமே அதிக முக்கியத்துவம் வகிக்கின்றன. இந்த நிலையில் ஒருவித உணர்ச்சி ஒற்றுமையும், அதற்கேற்ற பாணி உணர்ச்சியும் நிலவுகின்றன. இவற்றின் முத்திரை அந்தந்த நாகரிகத்தின் கலைகள், தத்துவம், அரசியல் முதலியவற்றில் பதிந்து விடுகின்றன. மகா பண்டிதர்களின் காலம் இது.

நகரங்களின் வளர்ச்சி புதிய மாறுபாட்டை அடைந்து கிராமங்களைவிட நகரங்கள் அதிக முக்கியத்துவம் பெற்று விடுகின்றன. நகர வாசிகளில் முக்கியஸ்தர்களான மத்தியதர வகுப்பு வியாபாரிகள், மதத் தலைவர்களிடமிருந்தும் கிராமாந்தர நிலப் பிரபுக்களிடமிருந்தும் ஆட்சியைக் கைப்பற்றுகின்றனர். நகரங்களில் நடைபெறும் ஆத்மீக நடிவடிக்கைகள், மனித மனத்தில் மறு மலர்ச்சியை உண்டாக்கி மதக் கட்டுப்பாடுகளிருந்து அவர்களைப் பூர்ணமாக விடுவிக்கின்றன. ஆத்மீக வாழ்வு மதக் கட்டற்றதாகி, நளின கலைகள்,சட்டம்,நியதிகள் எல்லாம் மதத்திலிருந்து விடுபட்டு விடுகின்றன. அவற்றின் மதிப்புகள் சர்ச்சைக்குரியதாகி தனி நபர்களைப் பொருத்த விஷயங்களாகவும் ஆகிவிடுகின்றன. மதம் தாழ்ந்து உலகாயதம் தலைதூக்குகிறது; உள்ளுணர்ச்சிகளுக்குமேல் உபயோக வாதம் உயர்கிறது. மேதைக்குமேல் செயல் முறை முக்கியத்துவம் பெறுகிறது. விஞ்ஞானம் உயர்வடைந்து ஸ்தூலமான சூழ்நிலையையும், மனித வாழ்வின் சுற்றுணர்ச்சியையும் கட்டுப்படுத்துகிறது. ஆனால் இந்த மாறுதல்கள் ஒரு நாகரிகத்தின் பலத்திற்கு காரணங்களோ அத்தாட்சிகளோ அல்ல. நாகரி

கத்தின் உட்புறத்தில் ஏற்படத் தொடங்கியுள்ள அழிவை இவை மறைப்பதாகக்கூட டானிலெவ்ஸ்கியும் டாய்ன்பியும் கருதுகின்றனர்.

நாகரிகத்தின் அழிவு ஏற்படுவதற்குப் புறநிலைமை அடிப்படைக் காரணமல்லவென்றும் இந்த ஆசிரியர்களில் பெரும் பாலானவர்கள் கருதுகின்றனர். அகக் காரணங்களினுல், குறிப்பாக ஆக்க சக்தியை இழப்பதனுல்தான் அழிவு தொடங்குகிறது என்பது அவர்கள் கருத்து. இவ்விஷயத்தில் ஸ்பெங்லர், டாய்ன்பி ஆகியவர்களுக்கும் மற்றும் பல ஆசிரியர்களுக்குமிடையில் ஓரளவு ஒற்றுமை உள்ளது.

நாகரிகங்களின் கடைசி கட்டம் பற்றித்தான் பெரும்பாலான தத்துவ ஆராய்ச்சியாளர்களிடையேயும் அதிகக் கருத்து ஒற்றுமை காணப்படுகிறது. இது பற்றி டாய்ன்பி, ஸ்பெங்லர் ஆகியவர்களின் கருத்துக்களில் கீழ்க்கண்ட ஒற்றுமைகளைக் காணலாம்.

இந்தக் காலத்தில் பெரிய குழப்பங்களும் மகாயுத்தங்களும் நடந்து இறுதியில் ஏதாவது ஒரு கட்சி வெற்றி பெறுகிறது.

வெற்றி பெறும் கட்சி பொது அமைதியையும் பொது ஆட்சியையும் சமூகத்தின்மீது திணிக்கிறது.

சர்வாதிகாரிகளும் யுத்த வெறியர்களும் தோன்றுகின்றனர்.

ஆக்க சக்தி போய் விடுகிறது.

கலைகளில் பாணிகள் மறைந்து அவைகளில் ஒரு குழப்பம் நிலவுகிறது.

ஓய்ந்து போன பாமர மக்கள் உலக சமாதானத்திலும் மதத்திலும் தஞ்சம் புகுகின்றனர்.

கடைசியாக சமூகம், ஜீவனுள்ள நாகரிகமில்லாத காட்டுமிராண்டி நிலையை மீண்டும் அடைந்து விடுகிறது.

இவை இந்த இரு ஆசிரியர்கள் மாத்திரமின்றி

மற்றும் பலரின் கருத்துக்களிலும் உள்ள ஒற்றுமை களாகும்.

மற்ற ஆசிரியர்கள் வேறு அடிப்படையில் இப் பிரச்னையை ஆராய்ந்து இதே முடிவுக்கு வந்திருக்கின்றனர். ஒரு உதாரணத்தை மட்டும் இங்கு கவனிப்போம்.

நாகரிகம் சக்கரம்போல் சுற்றி வருகிறதென்ற கருத்தை பெர்டியேவ் என்ற ரஷிய தத்துவ ஆராய்ச்சிக்காரர் ஒப்புக்கொள்ள வில்லை யென்ருலும் பல விதத்திலும் மேலே கூறப்பட்டது போலவே உள்ள முடிவுக் கேவருகிருர். நாகரிகங்களில் கீழ்க் கண்ட நான்கு நிலைகள் ஏற்படுவதாக அவர் கூறுகிருர்.

1. காட்டுமிராண்டி நிலை.

2. இடைக்கால கிறிஸ்தவ நிலை. இதில சன்யாசம், வீரம் ஆகியவற்றின் கட்டுப்பாடுகளின் மூலம் ஆக்க சக்தியை நாகரிகம் சேர்த்துக் கொள்கிறது.

3. அடுத்தது மனிதத் தன்மையுள்ள மதச் சார் பற்ற நிலை. இதில் மனிதன் பிரபஞ்சத்தின் மையமாகக் கருதப்படுகிருன். மனிதன் அமானுஷ்யமான கட்டுப்பாடுகளிலிருந்து விடுபட்டு, தன்னுள் அடங்கியுள்ள ஆக்க சக்தியை உணர்ந்து, கலைகளைக் கொழிக்கச் செய்து, வாழ்க்கையை மதச் சார்பற்றதாகச் செய்கிருன்.

4. நம் நாகரிகம் தன் ஆக்க சக்தியை இழந்து, தற்சமயம் "புதிய இடைக் காலத்தில்" பிரவேசிக்கிறது. "உண்மையான பூரண வாழ்க்கை" வாழ வேண்டுமென்ற ஆர்வம் இந்த கட்டத்தின் விசேஷமாகும். க்ஷேமத்திற்கும் சந்தோஷத்திற்கும் வாழ்க்கையை ரஸிப்பதற்குமான இந்த ஆசை ஆக்க சக்திக்கு அவசியமான, அகம்பாவத்தை அழிக்கும் கட்டுப்பாட்டை இது கொல்ல முயற்சிக்கிறது.

ஸோரோகின், ஷுபர்ட், நார்த்ராப் முதலிய சரித்திரத்தின் சக்கர கதியை ஏற்காத மற்ற ஆசிரியர்கள்,

ஏற்கெனவே விவரிக்கப்பட்ட அம்சங்கள் நம் நாகரி கத்திலும் மற்ற நாகரிகங்களிலும் காணப்படுவதாகக் கருதுகின்றனர். இந்த ஒற்றுமைகள் பற்றி ஸோரோ கின் கூறும் சுருக்கமான விளக்கத்திலிருந்து, அவை, பல நுட்பமான அம்சங்களுக்கும் பொருந்துமென்பது தெரியும்.

பல விஷயங்களைப் பற்றியும், பல இன மக்களைப் பற்றியும் பரந்த ஞானமுள்ள ஆசிரியர்கள் வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு தத்துவங்களை அடிப்படை யாகக் கொண்டு எழுதும்பொழுது கண்ட முடிவுகளில் இவ்வளவு ஒற்றுமைகள் இருக்கின்றனவென்ருல் அவை சரியென்று நம்ப பலமான காரணமிருக்க வேண்டும். பொதுவாக அங்கீகரிக்கப்பட்ட சில உண் மைகள் இந்த நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்கின்றன.

### சரித்திர உண்மைகள்

நாம் நாகரிகங்களைப் பன்மையில் குறிப்பிடு கிரோம். இதனுல் சரித்திரத்தில் பல நாகரிகங்கள் இருந்திருக்கின்றன என்ருகிறது. அதோடு, நாக ரிகங்கள் பிறக்கவும் இறக்கவும் அல்லது தோன்றவும் மறையவும் செய்கின்றன என்றும் தெரிகிறது. டானி லெவ்ஸ்கியும் ஸ்பெங்லரும் கூறுவதுபோல் நாகரிகமே இல்லாத காலத்திலிருந்து இவை பிறந்து கடைசியில் அடியோடு இறக்கின்றனவா, அல்லது டாய்ன்பி கூறு வதுபோல் மதக் கூட்டிற்குள் புகுந்து கொண்டிருந்து இன்னமும் உயர்ந்த நாகரிகமாகப் பரிணமிக்கின்ற னவா என்பது வார்த்தைகளாலும் உபமேயங்க ளாலும் தீர்க்க வேண்டிய விஷயம்.

தவிர, ஒரு நாகரிகம் தோன்றுவது முதல்மறையும் வரை சலனமற்றிருப்பதில்லை. ஒவ்வொரு நாகரிகமும் ஒரு நிலையில், (சில சமயங்களில் பல நிலைகளில் கூட) உச்ச நிலையை அடைகின்றன. இதற்கான வளர்ச்சியில்

பல அம்சங்கள் உள்ளன என்று இது பொருள்படுகிறது.

இதோடு, ஒவ்வொரு நாகரிகத்திலும் பொருளாதாரமும் நாகரிக நடவடிக்கைகளும் கிராமாந்தரங்களிலிருந்து சிறு நகரங்களுக்கும், கடைசியில் மாபெரும் நகரங்களுக்கும், மாறுவதாகத் தோன்றுகிறது. இதற்கேற்ப அதிகாரம் மதத் தலைவர்களிடமிருந்தும் நிலப்பிரபுக்களிடமிருந்தும் செல்வம் திரட்டும் வர்க்கத்தினருக்கு மாறுகிறது. எனவே, மக்களுக்கும், இதனால் சர்வாதிகாரிகளுக்கும் ஸீஸர்களுக்கும் மாறுகிறது. பல நாகரிகங்களில்இந்த இயக்கத்தோடுகூடவே அரசியல், பொருளாதார அளவைகளும் விரிந்து கொண்டே போகின்றன. சிறு நகரங்கள் பெரிய ராஜ்யங்களாக வளர்ந்து நாடுகளாகவளரமுயற்சிக்கின்றன. இவ்விதம் வளரும் நாடுகள் ஒன்று சேர்ந்து இரண்டு மூன்று பிரம்மாண்ட நாடுகளாகின்றன. கடைசியில் இவை எல்லாமே ஒரே ஆட்சியின் ஆதிக்கத்தின் கீழ் வருகின்றன.

பழைய நாகரிகங்களில் மாநகரங்களும் ஸீஸர்களும் சில சமயங்களில் நீண்ட காலம் நீடித்திருந்த போதிலும் சாசுவதமாக இருந்ததில்லை யென்பதும், இவை நாகரிக நாடகத்தின் கடைசி காட்சியாகவே கருதப்பட வேண்டுமென்பதும் உண்மை. இங்குக் கூறப்பட்ட உண்மைகள் பல தலைசிறந்த ஆசிரியர்களால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன.

இதற்குமேல் போக முடியாது; முறை வகுக்கும் மனப்பான்மை யுள்ளவர்களுக்கு இது எவ்வளவுதான் கவர்ச்சிகரமாக இருந்தாலும், இவை கடுமையான ஒரே அமைப்பைப் பின்பற்றுகின்றன என்பதற்கு அத்தாட்சியில்லை. மனிதன், மிருகம், தாவரம் ஆகியவற்றின் வாழ்க்கைகளிலேயே ஆயிரக்கணக்கான மாறுதல்களுக்கு இடமிருக்கிறது. பௌதிக விதிகளுக்குக்

கட்டுப்படாத சமூகங்களின் விஷயத்தில் இந்த மாறுதல்களுக்கு இன்னமும் இடம் அதிகம்.

இருந்தாலும் ஒரு நாகரிகத்தின் விஷயத்தில் கூட சரித்திர அத்தாட்சியைக் கொண்டு பார்க்கும்பொழுது பிற்போக்கு ஓரளவுக்குத்தான் சாத்தியமென்று கருத வேண்டும். உலக நகரங்கள் ஏற்படும் நிலைக்கு வளர்ந்த எந்த நாகரிகமும் திரும்பி, விவசாயத்தை முக்கியமாகக் கொண்ட சமூகத்தின் நிலைக்குத் திரும்பியதற்குச் சரித்திரத்தில் அத்தாட்சியில்லை. மற்றெல்லாவற்றின் வாழ்க்கைகளையும்போல் நாகரிகங்களின் வாழ்க்கையும் மேல் நோக்கியோ, கீழ் நோக்கியோ தான் வளர முடியுமே தவிர, பின்னோக்கி வளர முடியாது.

நம் காலம் சம்பந்தமான இரு விஷயங்களில், அதாவது உயர்ந்த பக்ஷ வளர்ச்சி, அதையடுத்த அழிவு ஆகியவற்றில் இந்தப் பரந்த மாறுதல்களுக்கான சாத்தியம் காணப்படுகிறது. மீண்டும் சரித்திர உண்மைகளைக் கவனிப்போம்.

எகிப்து தன் நாகரிகத்தின் முதல் உச்ச நிலையைத் தான் மூன்ருவது, நாலாவது, ஐந்தாவது ராஜ வம்சங்களின் காலத்தில் அதாவது கி. மு. 2780 முதல் 2420-ம் வருஷத்திற்குள் அடைந்தது. கி. மு. 3200-வது வருஷம் முதல் நிலவிய நீண்ட கால சமூக ஒற்றுமையும், உள் நாட்டு அமைதியும் இதற்குக் காரணமாகும். அதை அடுத்த நாலு நூற்ருண்டுகளில் நைல் நதிப் பள்ளத்தாக்கில் பரோவாக்களின் பலம் குறைந்து, ஸ்தலப் போர்கள் மூண்டு, பொருளாதார, கலாசார சாதனைகள் குறைந்தன. கி. மு. 2000-ஆவது ஆண்டில் தீப்ஸ் மன்னர்கள் எகிப்தில் பலம் பொருந்திய முறையான ஆட்சியை ஏற்படுத்தினர். மத்திய கால ஆட்சி என்று கூறப்படும் இந்த ஆட்சி கி. மு. 1788 வரை நீடித்தது. எகிப்திய நாகரிகம் மறு மலர்ச்சி

யடையச் செய்தது. இதன் சின்னங்களைத்தான் எகிப்தின் கோயில்களிலும் சமாதிகளிலும் சித்திரங் களிலும் சிற்பங்களிலும் இலக்கியங்களிலும் காண் கிறோம். பிறகு ஏற்பட்ட உள்நாட்டு அரசியல், பொருளாதரர சீர்கேடுகளினால் ஹிங்ஸாங் ஜாதியினர் எகிப்தின்மீது தங்கள் ஆட்சியை ஸ்தாபித்தனர். இதி லிருந்து எகிப்தில் இரண்டாவது முறையாக இருள் சூழ்ந்த காலம் ஆரம்பமாயிற்று. கி. மு. 1500-வது வருஷ வாக்கில் எகிப்தியர் ஹிக்ளாக்களை விரட்டி விட்டு பதினெட்டாவது மன்னர் வம்சத்தின் கீழ் புதிய சாம்ராஜ்யத்தை ஏற்படுத்திக்கொண்டு மீண்டும் தங்கள் பழம் பெருமையை அடைந்தனர். இது கி. மு. 1350-ம் வருஷம் வரை நீடித்தது. லக்ஸார் கோயில், கர்னாக் கோயில் போன்ற மாபெரும் கோயில்களும், டுடான் காமன் சமாதி போன்ற பிரம்மாண்ட கட்டி டங்களும் எகிப்திய நாகரிகத்தின் மூன்றாவது மறு மலர்ச்சிக் காலத்தில் தோன்றியவைதான். பிறகு எகிப்து மீண்டும் இருளில் மூழ்கி கி. மு. ஏழாம் நூற் றாண்டில் சிறிது காலம் புத்துயிர் பெற்றிருந்தது.

இவ்விதம் எகிப்தின் நாகரிகத்தில் மூன்று முறை உச்ச நிலை ஏற்பட்டது. சுமார் 1500 வருஷ காலத்தில் இவை நிகழ்ந்தன. கடைசியாக ஏற்பட்ட புத்துயிரை யும் சேர்த்தால் இரண்டாயிரம் வருஷ காலத்தில் நான்கு உச்ச நிலைகள் என்று கூடச் சொல்லலாம்.

இதேபோல் ஸுமேரிய நாகரிகம் வெளி ஆதிக்கத் தின்கீழ் ஏற்பட்ட இருள் காரணமாக பிளவு தோன்றி இருமுறை உச்ச நிலைமைகள் ஏற்பட்டன. அஸிரிய நாகரிகத்திலும் இரு உச்ச நிலைகள் ஏற்பட்டன.

பாபிலோனிய நாகரிகமும் அஸிரிய நாகரிகமும் ஒன்றே என்று சிலர் கருதுகின்றனர். அப்படியானால் இந்த நாகரிகம் நான்கு முறை உச்ச நிலையை அடைந்த தென்று கூற வேண்டும். சில முக்கியமான முடிவு

களைச் செய்வதற்கு இந்த உதாரணங்கள் போதும்.

முதலில் ஒரு நாகரிகம் ஒரே ஒரு உச்ச நிலையில் தான் போய் முடிய வேண்டுமென்பதில்லை. அது இரண்டு அல்லது அதற்கு அதிகமான உச்ச நிலைகளைக்கூட அடைய முடியும். இந்த உச்ச நிலைகளுக்கும் காலத்திற்கும் சம்பந்தமில்லை. காலத்திலிருந்து இவை வேறுபட்டிருக்க முடியும். ஆகையால் ஸ்பெங்லரின் வாதம் அதாவது நாகரிகத்தின் உதயம் அஸ்தமனம், ஜீவிய காலம் யாவும் முன்கூட்டியே நிர்த்தாரணம் செய்யப்ப்டுகிறது என்னும் முடிவு உண்மைக்கு ஒத்ததாயில்லை.

ஒரு நாகரிகத்தில் முறிவு ஏற்பட்டு விட்டால் பிறகு அது அழிய வேண்டியதுதான் என்ற வாதத்தையும் மேலே கண்ட உண்மைகள் பொய்ப்பிக்கின்றன. டாய்ன்பியின் கருத்துக்கு மாருக, பொது ஆட்சி நடைபெறும் பிரதேசத்தைக் காட்டுமிராண்டிக் கும்பல் ஆக்கிரமித்துக் கொண்டாலும் நாகரிகம் மீள முடியாதபடி அதோடு அழிந்து விடுகிறதென்பதில்லை என்பதும் மேற்கண்ட உதாரணங்களிலிருந்து தெரிகிறது. சில சமயங்களில் ஆக்கிரமிப்புக்குப் பின் பல நூற்ருண்டுகளுக்குப் பிறகும் நாகரிகம் புத்துயிர் பெற்றிருக்கிறது. இந்த சமூகங்கள் சுதந்திரமாக, நன்ருய் அமைந்த ஆட்சியின்கீழ் இருந்த பொழுதுதான் அரசியல், பொருளாதார, கலாசாரத் துறைகளில் மகத்தான சாதனைகள் நிகழ்ந்தன. உள்நாட்டுச் சண்டைகளும் பூசல்களும் நிலவிய பொழுது காட்டுமிராண்டிகள் படையெடுத்துவந்து, அந்த நாகரிகத்தை அழித்தனர் என்பதும் இந்த சரித்திரங்களிலிருந்து தெரிகிறது.

கடந்த காலச் சமூகங்களின் விதிகளின்மீது மாபெருந் தலைவர்களின் தலைமை செலுத்திய செல்வாக்கும் அவற்றின் சரித்திரங்களிலிருந்துதெரிகிறது. அவற்றின் முன்னேற்றத்திற்கு இந்தச் செல்வாக்கே

காரணம் போல் சில சமயங்களில் தோன்றுகிறது ஆனால், இது ஏமாற்றக்கூடிய தவறான அபிப்பிராயம் தான். ஏனெனில் சமூகத்தில் மறைந்துள்ள சக்திகளைத் தான் பெரிய தலைமைகூட வெளிக் கொண்டு வர முடியும். ஆனால் அவர்கள் ஊட்டும் உணர்ச்சி சரித்திரத்தில் தான் அளவற்ற விளைவை ஏற்படுத்து மென்று தோன்றுகிறது. ‘‘விதியின் கையில் மனிதன் ஒரு சக்தி யற்ற கருவி; அவனுக்குச் சரித்திரம் விதிக்கும் விதியை அனுபவித்துத்தான் ஆக வேண்டும்’’ என்ற ஸ்பெங்லரின் தோல்வி மனப் பான்மைக் கருத்தை இது மறுக்கிறது.

நாகரிகங்களின் வாழ்க்கையில் ஒரு பரந்த ஒற்றுமை காணப்படுகிறது என்பதை இந்த முடிபுகள் மறுக்கவில்லை.

இவற்றில் ஆயிரக் கணக்கான வித்தியாசங்களுக்கு இடமிருந்த போதிலும் ஒற்றுமைகள் பரந்த அடிப்படையின் அளவில்தான் உள்ளன என்பதை இவை நிரூபிக்கின்றன.

அழிவின் அடையாளம்

இவ்விதம் முடிவு செய்தால், அழிவு என்பது எது என்ற பிரச்னை எழுகிறது. அழிவு ஆரம்பமாகி விட்டதா, ஆரம்பித்துவிட் டிருந்தால் அது எந்த அளவில் உள்ளது என்பவற்றை எத்தகைய சோதனை மூலம் முடிவு கட்டுவது?

சோதனை நிச்சயமாக இருக்கிறது என்றே நமக்குத் தோன்றுகிறது. ஒரு சமூகத்தின் தாழ்வுக்கு முக்கிய காரணம் ஆக்க சக்தி குறைவதுதான்.

மகத்தான கருத்துக்களுக்கும், கொள்கைகளுக்கும் பதிலாகப் பொது வாழ்வில் சுயநலச் சண்டைகள் தோன்றுவதற்கும், கலைகளில் புதிய மகத்தான புதிய பாணிகள் தோன்றாமற் போவதற்கும், பொது மதம் தவிர, புதிய தத்துவங்கள் இல்லாமலிருப்பதற்கும்,

அடிப்படையான காரணம் இதுதான். ஆக்க சக்தி யின் மையால்தான் இவை தோன்றுகின்றன. ஆக்க சக்தி மீண்டும் ஏற்பட்டால் இந்தக் குறைகள் மறைந்து விடும்.

ஒரு சமூகம் தாழ்வடையத் தொடங்கி விட்டதா இல்லையா என்பதை அறிய அதன் ஆக்க சக்தி எவ்வளவு பலமாக இருக்கிறது என்பதை அறிந்தால் போதும்.

மேற்கத்தி நாகரிகத்தை அந்தச் சோதனைக்கு உட்படுத்துவதற்கு முன்னுல், ஒரு சமூகத்தின் சாதாரண வளர்ச்சியில் எந்த நிலையில் நாம் இருக்கிறோம் என்பதை மதிப்பிடுவது அவசியமாகும்.

# 9

## மேற்கத்தி நாகரிகத்தில் தற்போதைய நிலை

மேற்கத்தி நாகரிகத்தின் வளர்ச்சி எந்தக் கட்டத்தை அடைந்திருக்கிறது என்பதை நிர்ணயிக்க முயற்சிக்கு முன் அது எங்கெந்த நிலையில் இல்லை என்பதை முதலில் நிர்ணயிப்பது சுலபம்.

ஒவ்வொரு நாகரிகத்திற்கும் ஆரம்ப கட்டமாகிய அநாகரிகமான கிராமாந்தர சமூக நிலையில் நாம் இல்லையென்பது வெளிப்படை. நம் நாகரிகம் தன்னுடைய இடை சகாப்தத்திலேயே அந்தக் கட்டத்தை அநுபவித்தது. நடு சகாப்த காலக் கோட்டைகளிலும், அதைக் காட்டிலும் அதிகமாக மடங்களிலும்தான் மேற்கத்தி நாகரிகத்தின் ஆரம்பச் சுடர்கள் பிரகாசிக்கத் தொடங்கின. அக் காலப் பாடகர்களின் பாட்டுக்களிலும், தட்டு முட்டுச் சாமான்களிலும், மாபெரும் ஆலயங்களிலும், ஏாஜரீகக் கோட்பாடுகளிலும், கடுமையான கிறிஸ்தவ விதிகளிலும், தார்மீகக் கோட்பாடுகளிலும் இது முதலில் வெளிப்படத் தொடங்கியது.

அதை அடுத்த வளர்ச்சிக்கட்டத்தில் நம் நாகரிகம் இல்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. மறுமலர்ச்சிக் காலத்தில் நம் நாகரிகம் இந்தக் கட்டத்தில் இருந்

தது. சமூகத்தின்மீது இருந்த மதத்தின் பிடிப்பும், நிலப் பிரபுத்துவத்தின் பிடிப்பும் தளர்ந்து, கோட்டைகளுக்குப் பதில் நகரங்கள் வளர்ந்து, விவசாயத்தின் ஸ்தானத்தைக் கைத்தொழில்கள் ஏற்று, கலைகளும் சாஸ்திரங்களும் வெடித்து மலர்ந்தபொழுது நம் நாகரிகம் மலர்ச்சி யடைந்தது.

ஆகையால் நம் நாகரிகம் முதிர்ந்த நிலையிலோ அல்லது இறுதிக் கட்டத்திலோதான் இருக்க வேண்டும்.

இருபதாம் நூற்றுண்டில் நாம் காணும் பிரம் மாண்ட ராணுவ, பொருளாதார, அரசியல், லக்ஷிய, வர்க்க, இனப் போராட்டங்களைக் கவனிக்கும்பொழுது இறுதிக் கட்டத்தை நாம் இன்னும் அடையவில்லையென்பது தெரிகிறது. ஆனுல் சரித்திரத்தைக் கவனிக்கும்பொழுது, இதே காரணங்களினுல் அந்த இறுதிக் கட்டம் சமீபத்திலேயே இருக்கிறதென்றும் தோன்றுகிறது.

ஒருவன் தன் காலத்தில் இயங்கும் சக்திகளையே சரியான பகைப் புலனில் வைத்து மதிப்பிடுவது கஷ்டம். தற்கால நிகழ்ச்சிகளை மிகைப்படுத்தியும், கடந்தகாலச் சம்பவங்களைக் குறைத்தும் மதிப்பிடுவதைத் தவிர்க்க முடியாது. ஒரு நாகரிகத்தின் வாழ் நாளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பின் சென்ற காலத்தை மாத்திரம் கொண்டு முடிவு செய்ய முடியாத அளவுக்கு அது மிகவும் குறைவு என்பது வெளிப்படை. நம் காலத்தின் தன்மையை நிர்ணயிக்க வேண்டுமானுல் நம் ஆராய்ச்சியில் பல ஆண்டுகளைச் சேர்த்துக் கொண்டு ஆராய்வது அவசியம்.

சரித்திரம் என்பது ஒரு தொடர்ச்சியான சம்பவம். அதைக் கச்சிதமான பிரிவுகளாகப் பிரித்துக்காட்ட முடியாது. ஆகையால் அதில் ஆராய்ச்சிக்கு ஆரம்ப

காலமாகத் தேர்ந்தெடுக்கும் எந்தக்காலமும் யதேச்சை யாக எடுக்கப்பட்ட காலமாகவே இருக்கும். இருந்தா லும் ஒரு முறைக்காக, சில குறிப்பிட்ட வருஷங்கள் சில குறிப்பிட்ட கட்டங்களின் ஆரம்பமாகவோ முடிவாகவோ கொள்ளப்படுகின்றன.

நம் காலத்தின் ஆரம்பம் என்று சொல்லக்கூடிய ஒரு வருஷத்தைக் குறிப்பிட வேண்டுமானல் அது 1914-ம் வருஷம் என்று சொல்லலாம். இனி கூறப் படும் லக்ஷணங்கள் யாவும் அந்த வருஷத்தில் ஆரம்ப மாயின அல்லது அப்பொழுதிலிருந்து வெளிப்படை யாகத் தெரியத் தொடங்கின. இருந்தாலும் அவற்றில் பெரும்பாலானவை அதற்கு முன்பே தோன்றிவிட்டன அல்லது உருப் பெறத் தொடங்கிவிட்டன. சமூக வளர்ச்சி பற்றிய ஆராய்ச்சியில் எந்தக் குறிப்பிட்ட வருஷத்தையும் ஆரம்ப காலமாகக் கொள்ளவேண்டிய அவசியமில்லையாகையால், நம் ஆராய்ச்சிக்கு, இருப தாம் நூற்றுண்டின் கழிந்துபோன பாகத்தையும், குறிப்பாக முதல் உலக யுத்தத்திற்குப் பின் சென்ற நாற்பது வருஷங்களையும் சேர்த்துக் கொள்வது நல்லது.

### நம் காலத்தின் தன்மை

ஏறக்குறைய பதினுரும் நூற்றுண்டிலிருந்துதான் பெரும்பாலான ஐரோப்பிய நாடுகள் தற்போதைய உரு வைப் பெற்றன. அது முதல் இருபதாம் நூற்றுண்டின் ஆரம்ப காலம் வரை இவற்றில் மிகவும் முக்கியமான நாடுகளின் சக்தியே உலகத்தில் ஆதிக்கம் செலுத்தி யது. போர்ச்சுகல், ஸ்பெயின், ஸ்வீடன், ஹாலந்து, பிரான்ஸ், இங்கிலாந்து, ரஷியா, ஜெர்மனி, இத்தாலி ஆகிய நாடுகள் அடுத்தடுத்தோ அல்லது ஏக காலத் திலோ முக்கிய ஸ்தானம் வகித்து, தங்கள் விதியைச் சுயேச்சையாக நிர்ணயித்துக் கொள்ளும் நிலையில்

இருந்தன. யதேச்சையான சுதந்திரம் அப்பொழுது பிரத்யக்ஷமாக இருந்தது.

இருபதாம் நூற்றுண்டின் முக்கியமான உண்மைகளில் ஒன்று, தேசீய அரசாங்கம் காலங் கடந்ததாகி வருவதுதான்.

இவ்விதம் அதிகாரம் பெருகி வருகிறது என்பது தெளிவு. சர்வதேச சங்கம், ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் முதலியவற்றின் உருவைப் பெறுகிறது இது. அரபு நாடுகள், தென் அமெரிக்க நாடுகள், தெற்கு, தென் கிழக்கு ஆசிய நாடுகள், மேற்கு ஐரோப்பா, வட அட்லாண்டிக் கூட்டு முதலிய பிரதேச கோஷ்டிகளும் சேர்கின்றன. இவற்றில் பெரும்பாலானவை அரசியல் பொருளாதார ரீதியில் ஒன்றுபட்டிருக்கின்றன.பழைய காலத்தில் நாடுகள் தற்காலிகமாக ஒன்று சேர்ந்ததை விட இவை அதிக பலம் பொருந்தியவை. இவற்றின் அரசியல், பொருளாதார, மத, கலாசார உறவுகள் இவற்றைப் பிரிய முடியாதபடி இவற்றைப் பிணைத்து வருகின்றன. கடந்த காலத்தில் சர்வதேச சமாதானத்திற்குமுன் நிலவிய இடைக்காலம் போன்ற நிலை இது.

நாடுகள், குறிப்பாக ஒரு காலத்தில் உலகத்தில் பேராதிக்கம் செலுத்திய ஐரோப்பிய நாடுகள், தங்களைச் சுற்றிலும் கண்டங்களைப்போன்ற அளவுள்ள பிரம்மாண்ட நாடுகளினுல் அற்பமாக்கப்பட்டுவிட்டன. இந்த பிரம்மாண்ட நாடுகள் உலகத்தின் தலைமைப் பதவிக்காகப் போராடிக் கொண்டிருக்கின்றன. உலக நாடுகளிடையே செய்யப்படும் முக்கிய முடிவுகள் இரண்டு அல்லது மூன்று பெரிய நாடுகளிலிருந்துதான் வெளி வருகிறது. முக்கியமான விஷயங்கள் வரும்பொழுது, இந்த நாடுகள் சொல்வதை மற்ற நாடுகள் கேட்காமலிருக்க முடியாது. பொருளாதாரத் துறையில் அவற்றின் தற்போதைய எல்லைக்குள், உற்பத்தியைப் போதிய அளவு பெருக்க முடியவில்லை.

பெரிய அளவில் பொருள்களை உற்பத்தி செய்து, பெரிய அளவில் உபயோகித்தால்தான் தற்காலத்தில் மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியும்.

கஷ்ட காலம் என்று வர்ணிக்கப்படும் நிலையில் தற்சமயம் நாம் இருக்கிறோம். என்றும் கண்டிராத அளவு பிரம்மாண்டமானவையும், நாசத் தன்மை பொருந்தியவையுமான இரு பிரம்மாண்ட யுத்தங்களை இந்த நூற்றாண்டு பார்த்து விட்டது. பத்து லட்சம் பேருக்குமேல் சம்பந்தப்பட்ட மற்றொரு யுத்தம் கொரியாவில் நடந்துள்ளது. இவை தவிர ரஷிய-ஜப்பானியப் போர், இந்தோ சீனப் போர் முதலிய சிறிய போர்கள் வேறு நடந்துள்ளன. மூன்றாவது உலக யுத்தத்தைத் தவிர்க்க முடியுமென்றால் கூட, நம் காலத்தை மகா யுத்தங்களின் காலம் என்பதற்கு இவை போதும்.

கடந்த காலத்தில் இதுபோன்ற சக்தி வாய்ந்த லக்ஷியப் போராட்டங்கள் (முஸ்லிம்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கு மிடையிலும், பிராடஸ்டெண்டுகளுக்கும் கத்தோலிக்கர்களுக்கு மிடையிலும்) நிகழ்ந்திருக்கின்றன வென்றாலும், உலகம் முழுவதிலும் வியாபிக்கும் இவ்வளவு பெரிய அளவில் நடந்ததில்லை.

இதே சமயத்தில், இந்த நூற்றாண்டின் முதற் பாதியில் ஆசியாவில் தேசீயம் தலையெடுத்து, வெள்ளையருக் கெதிராக துவேஷமும், போராட்டங்களும், ரத்தப் பெருக்கும் ஏற்பட்டு, இறுதியில் ஆசியா மீது இருந்த மேற்கத்தி ஆதிக்கம் ஒழிந்தது. இந்த மாறுதலின் அளவை யோசித்தால் அந்த நாடுகளிலும் இந்த நூற்றாண்டு பெரும் போராட்ட சகாப்தமே என்பது விளங்கும்.

இருபதாம் நூற்றாண்டு ஏற்கெனவே குறிப்பிடப்பட்ட "கஷ்ட காலம்" என்பதை இவையெல்லாம் நிரூபிக்கின்றன.

இந்த நிலையில், யுத்தங்களினாலும், லக்ஷியப்

போராட்டங்களினுலும், இனப் போராட்டங்களினுலும் அவஸ்தைப்பட்ட மக்களிடையே உலக சமாதான "ஒரே உலக" ஆர்வம் நாளுக்கு நாள் அதிகரித்து வருவதில் ஆச்சரியமில்லை. மக்கள் மனத்தில் உன்னத லக்ஷியமாக இருந்து வந்த சமாதான ஆர்வம் உயிர் வாழ்வதற்கான அபயக் குரலாகி விட்டது.

ரஷியாவின் இரண்டாவது நிகோலஸ் மன்னர் 1899-ல் முதல் சமாதான மகாநாட்டை ஹேகில் கூட்ட நடவடிக்கை எடுத்தார். இதற்கு முன்னுல் உன்னத லக்ஷியமாக, வாய்ச் சொல்லோடு நின்ற நிரந்தர சமாதானத்தைப் பிரத்யக்ஷமான விஷயமாக்குவதற்கு இது முதல் நடவடிக்கையாகும். "யுத்தம் வரப் போகிறதா, சமாதானம் நிலைக்கப் போகிறதா?" என்று எல்லா நாடுகளிலும் ஒவ்வொருவரும் கேட்கின்றனர். எந்த சர்க்காரும் மக்கள் ஆதரவைப் பெற வேண்டுமாளுல் சமாதானத்திற்கு முக்கியத்துவம் கொடுக்காமலிருக்க முடியாது.

பத்தொன்பதாம் நூற்றுண்டில் வர்த்தகத்திலும் கைத்தொழிலிலும் தலைமை வகித்த பூர்ஷ்வாக்களிடம் இருந்தது அதிகாரம். இருபதாம் நூற்றுண்டில் அது பாமர மக்களின் கைக்கு மாறிவிட்டது. இந்த நூற்றுண்டில் பாமர மக்கள் புரட்சி செய்து விட்டதாக ஓர்ட்டேகா ஓய்காஸெட் கருதுகிறுர். சமூக வாழ்வில் ஒரு சிலரே வகித்து வந்த ஸ்தானத்தை வகிக்கவும், உபயோகித்து வந்த கருவிகளை உபயோகிக்கவும், அனுபவித்த இன்பங்களை அனுபவிக்கவும் பாமரர்கள் தீர்மானித்துவிட்டதாக அவர் கருதுகிறுர்.

நம் சகாப்தம் பாமர சகாப்தமென்று அழைக்கப்படுகிறது. பாமர மக்களின் இந்த எழுச்சிக்குப் பல காரணங்கள் உள்ளன. அனேகமாக எல்லா இடங்களிலும் ஜனத்தொகை அபாரமாகப் பெருகிவிட்டது முதல் காரணம். நம் நாகரிகம் தோன்றிய காலம்

முதலே இது நிகழ்ந்து வந்து இப்பொழுது குறையத் தொடங்கி யிருப்பதாகத் தோன்றலாம். ஆனால் உண்மை வேறு. ஆறும் நூற்றாண்டு முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பம் வரை ஐரோப்பாவின் ஜனத் தொகை பத்தொன்பது கோடிக்குமேல் போக வில்லை. ஆனால் 1800-ம் வருஷத்திற்குமேல் 1950-ம் வருஷத்திற்குள் இது பத்தொன்பது கோடியிலிருந்து ஐம்பத்தெட்டு கோடியாக அதிகரித்துவிட்டது. ஆசியாவின் சில பாகங்களிலும் மேற்கு கோளத்திலும் ஜனத் தொகை இன்னமும் அதிகமாகப் பெருகியுள்ளது. சில உலக மாநகரங்களின் வளர்ச்சி பற்றிப் பின்னால் வரும் புள்ளி விவரங்களைக் கவனித்தால் இது நன்றாக விளங்கும். இந்த மகத்தான ஜனத் தொகைப் பெருக்கத்தின் அளவையும் விளைவுகளையும் கவனித்தால் டில்லி கோயில்கள் முதல் நியூயார்க் ஹோட்டல்கள்வரை எங்கு சென்றாலும் தாங்கமுடியாத கூட்டம் இருப்பதில் ஆச்சரியமில்லை. உலகத்தில் நிரந்தரமான ஜாகைப் பஞ்சம் இல்லாத நாடே இல்லையென்பது ஐ. நா. புள்ளி விவரங்களிலிருந்து தெரிகிறது.

ஜனத் தொகைப் பெருக்கத்துடன் பின் கண்ட காரணங்களாலும் பாமர மக்களின் சக்தி அதிகரித்துள்ளது.

தொழில் புரட்சி தொடர்ந்து விரிவடைந்து வருகிறது. அது சிருஷ்டித்த தொழிலாளர் வர்க்கமும் இதனால் பெருகி வருகிறது.

தொழிற் சங்கங்கள் அதிகரித்து வருகின்றன. ஆசியாவில் இது ஆரம்ப நிலையிலேயே உள்ளது.

பெருத்த அளவில் தகவல் பரவுவதற்கான சாதனங்கள், குறிப்பாகப் பத்திரிகைகள், ரேடியோ, டெலிவிஷன் முதலியவை அதிகரித்துள்ளன. இவை ஒருபுறம், பாமர மக்களுக்கு உலக சம்பவங்களுடன் நேர

டியான தொடர்பு ஏற்படும்படிச் செய்தன. மறுபுறம் இதற்குமுன் என்றும் கண்டிராத அளவில் மக்கள்மீது செல்வாக்குச் செலுத்தவும் ஜனங்களைக் கட்டுப்படுத்தவும் உதவுகின்றன.

பாமர மக்களின் விடுதலை முதலில், மேற்கத்தி நாடுகளில் தொழிலாளர் வர்க்கத்தின் அரசியல், சமூகப் போராட்டங்களிலும் மற்ற கண்டங்களில் அடிமை நாடுகளின் விடுதலைப் போராட்டங்களிலும் வெளியாயிற்று.

முந்தியதில் பாமர மக்களின் வெற்றிக்குப் பெரும் பாலான மேற்கத்தி நாடுகளில் சர்வ ஜன வோட்டுரிமையின் மூலம் முத்திரை யிடப்பட்டது. இதனுல் மேற்கத்தி நாடுகளின் அரசியல் வாழ்வில் மகத்தான மாறுதல்கள் ஏற்பட்டன.

ஆனுல் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் பாலிபியஸ் வர்ணித்த அமர வட்டத்தை நோக்கிச் சரித்திரம் சென்று கொண்டிருக்கிறது என்பதற்கான அறிகுறிகளும் காணப்படுகின்றன. ''முதலில் முடியாட்சி (அதாவது தனி நபர் ஆட்சி); பின்னர் பிரபுக்களின் ஆட்சி (அதாவது ஒரு சிலரால் நடத்தப்படும் ஆட்சி); அதிலிருந்து ஜனநாயகம் (மக்கள் ஆட்சி); மறுபடியும் தனி நபர் ஆட்சி என்ற கிரமத்தில் ஆட்சிமுறை சுற்றி வருமென்கிறுர் அவர்.

கடைசியாகக் கூறப்பட்ட மாறுதல் எல்லா நாடுகளிலும் ஏற்படவில்லை. ஆனுல் தற்சமயம், அனேகமாக எல்லா நாடுகளிலும் காணப்படும் "வீர பக்தி" (ஒரு பெரிய மனிதனைக் கடவுள்போல் போற்றுவது) இந்தத் தனி நபர் ஆட்சி பயிருக்குச் செழிப்பான விளை நிலமாகும். நம், காலத்தில் காணப்படும் இந்த வீர பக்தி கவலையூட்டும் விஷயம். ஏனெனில் கடந்த காலத்தில் மக்கள் ஒரு தனி நபரிடம் பக்தி செலுத்திக் கடைசியில் தங்கள் அதிகாரத்தையெல்லாம் அவ

னிடம் ஒப்படைத்து விட்டனர்.

சரித்திரத்தில் ஒரு விசித்திரத்தைக் காணலாம்: மக்கள் நெடுங்காலமாகப் போராடிப் பெற்ற உரிமைகளை ஏதாவது ஒரு காரணத்திஞல் பொது ஜன ஆதரவைப் பெறும் "பலசாலி"களிடம் ஒப்படைத்து விடுகின்றனர். அனேகமாகச் சரியான நபரிடமே அவர்கள் அதிகாரத்தை ஒப்படைக்கின்றனர். ஆஞல் சில சமயங்களில் மக்கள் உணர்ச்சி வசப்பட்டு ஆளத் தகுதியற்றவர்களைத் தேர்ந்தெடுத்துவிட்டு, காலம் கடந்த பின் தங்கள் தவறை உணர்கின்றனர். பின்னர், அவனைத் தேர்ந்தெடுத்ததுபோல் அவ்வளவு சுலபமாக அவனிடமிருந்து விடுபட முடிவதில்லை.

இந்த வீர பக்தியின் அபாயகரமான உருவத்தைச் சர்வாதிகார இயக்கங்களில் காணலாம். இவற்றில் ஒருவனைப் பதவிப் பீடத்தில் அமர்த்தி விட்டால் பிறகு புரட்சி செய்தாலொழிய அவனைப் பதவியிலிருந்து விலக்க முடியாது. சில சமயங்களில் கோடிக்கணக்கான மக்களைத் துன்பத்தில் ஆழ்த்தி உலக யுத்தங்கள்கூட நடத்த வேண்டி யிருக்கிறது.

ஜனநாயகத்திலும் வீர பக்தி இல்லாமலில்லை. ஆஞல் இங்கு அது அபாய மற்ற உருவத்தில் நிலவுகிறது. ஜல்லிக் கட்டு மாடு பிடிப்பவர்களோ, பந்தாட்ட வீரர்களோ, சினிமா நக்ஷத்திரங்களோதான் இங்கு வீரர்களாகப் போற்றப்படுகிருர்கள். சில சமயங்களில் இங்குகூட போர் வீரர்களும், சதா சர்வ காலமும் மற்றவர்களை தூஷித்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு ஒன்றும் செய்யாத வாய்ச் சொல் வீரர்களும் ஆதரிக்கப் படுவதுண்டு.

தற்காலத்தில் பாமரர் எழுச்சி, வீர பக்தி ஆகியவற்றுடன் வர்த்தகப் பிரபுக்களின் எழுச்சியும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. அரசியல், தொழிலாளர் இயக்கம், பொருளாதாரம் இந்தத் துறையில்

இவர்களுடைய அதிருஷ்ட காலம் மாறிவிட்டது. வர்த்தகம், கைத்தொழில், சர்க்கார் நிர்வாகம் எல்லாவற்றிலும் இவர்கள் தோன்றுகின்றனர். திறமை, மனோதிடம், விடா முயற்சி, விஷயங்களை மதிப்பிடும் கூரிய புத்தி முதலிய குணங்களினால் இவர்கள் வெற்றி பெற்று வருகின்றனர். இந்தக் குணங்கள் எல்லாக் காலங்களிலுமே இருந்து வந்திருக்கின்றன. ஆனால் நம் காலப் பிரச்னைகளின் அளவும் சிக்கல்களும்தான் இவர்கள் வெற்றிக்குச் சந்தர்ப்பமளிக்கின்றன. இந்த இரு காரணங்களினாலும், திறமைசாலிகளிடம் அதிகாரம் குவிய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. செய்ய வேண்டிய வேலை தங்கள் சக்திக்கு அப்பாற்பட்டது என்பதைச் சாதாரண மக்கள் உணர்கின்றனர். ஆகையால் அன்றாட நிர்வாக வேலைகளைத் தங்கள் தலைவர்களிடம் மகிழ்ச்சியுடன் விட்டுவிடுகின்றனர். ஜனநாயகத்தில் இறுதி அதிகாரம் மக்களிடம் இருக்கும் வரையில் இவ்விதம் விடுவதில் பெரும் சௌகரியங்கள் உண்டு; அபாயமில்லை. ஆனால் இறுதி அதிகாரம் தலைவர்களின் கைக்கு மாறிவிட்டால் இது பெரும் அபாயமாகி விடும். வீர பக்தியினால் இந்த அபாயம் இன்னமும் அதிகரிக்கும். தலைவர்கள் நிர்வாகத்தைத் திறமையாக நடத்துவதற்குப் போதுமான அதிகாரத்தை மட்டும் அவர்களுக்குக் கொடுத்து, அவர்களைக் கெடுக்கும் அளவுக்கு அதிக அதிகாரங்களைக் கொடுக்காமலிருப்பது ஜனநாயகத்தின் பெரிய பிரச்னைகளில் ஒன்றாகும்.

தலைவர்களின் வளர்ச்சியைப் பற்றிச் சொல்லும் பொழுது பொருளாதாரத்தை மாத்திரம் விதி விலக்காகக் குறிப்பிட்டோம். ஜே. பி. மார்கன், ஆண்ட்ரூ மெல்லன், ஐவர்க்ருகர் முதலியோர் பெருந் தொகை சேர்த்ததற்கான சந்தர்ப்பம் பல வருஷங்களாக மாறி வருகிறது. மேற்கத்தி சமூகத்தில் பல அம்சங்களிலும்

பணத்தின் முக்கியத்துவம் குறைந்து வருகிறது என்பதற்கு இது ஓர் அடையாளம். பணத்தை யாரும் நாடவில்லை யென்பதோ, பணத்தை வைத்துக் கொள்வது கஷ்டமாக இருக்கிறதென்பதோ, பணம் பல காரியங்களைச் சாதிக்க முடியாதென்பதோ இதற்கு அர்த்தமில்லை. சிறிது காலமாக, தனி நபர் மூலதனத்தின் சக்தி குறைந்து விட்டது என்பதை மறுக்க முடியாது.

தனிப்பட்டவர்களின் மூலதனம் எல்லா எல்லைகளையும் கடந்து உலகமெல்லாம் செல்வது அசாத்தியமாகி விட்டது; அல்லது கடுமையான சர்க்கார் கட்டுப்பாட்டிற்கு உள்ளாகி யிருக்கிறது. ஐம்பது வருஷங்களுக்கு முன் சர்வ தேச பாங்க் தொழிலின் முக்கிய நடவடிக்கையாக இருந்த அம்சம் நின்றுவிட்டது.

உள்நாட்டுப் பொருளாதாரத்திலும் தனிப்பட்டவர்களின் லேவா தேவி நடவடிக்கைகள் பல சர்க்கார்க்கட்டுப்பாடுகளுக்கு உள்ளாகி யிருக்கின்றன.

இந்த மாறுதல்களுக்கேற்ப தேசீயப் பொருளாதாரத்திலும், சர்வதேச பொருளாதாரத்திலும் சர்க்கார்களே அதிகப் பங்கெடுத்துக்கொள்ளத் தொடங்கி யிருக்கின்றன.

இந்தக் காரணங்களினுலும், வோட்டுரிமை விஸ்தரிக்கப்பட்டதாலும், ஜனநாயக நாடுகளில் நிலவும் பிரசாரத்தினுலும், பெரிய பணக்காரர்கள், முதல் உலக யுத்தத்திற்கு முன்னுல் செய்ததுபோல் லேவாதேவிகள் நடத்தி அதிகப் பணம் சம்பாதிக்க முடியாமல் போய்விட்டது. ஆட்சியின் மீது பணக்காரர்கள் செலுத்தும் செல்வாக்கும் இல்லாமற் போய்விட்டது. முதல் உலக யுத்தத்தின்போது சர்க்கார்கள் தனிப்பட்ட பாங்குகளிடம் கடன் கேட்டன. இரண்டாவது உலக யுத்தத்தின்போது ஒன்றுக்கொன்று கடன் கொடுத்து உதவிக்கொண்டன.

தவிர, வரிகளும் சென்ற நூற்றுண்டில் இருந்த

தைப் போல் பத்து அல்லது இருபது மடங்கு அதிக மாகி விட்டன. ஆகையால் பெரிய மூலதனங்களைத் திரட்டுவது கஷ்டமாகி விட்டது. பணப் பெருக்கத் திஞல் பணத்தின் மதிப்பு பெரிதும் குறைந்து விட்டது.

கடைசியாகப் பல மேற்கத்தி நாடுகளில் மூலப் பொருள்கள், உபயோகப் பொருள்கள், வீட்டு வசதி முதலியவற்றிற்குப் பஞ்சம் வந்துவிட்டது. இதஞல் வினியோகம் கட்டுப்படுத்தப்பட்டு,பணத்தின் மதிப்பும் குறைந்து விட்டது. ஒரு காலத்தில் ஆதிக்கம் செலுத் திய "தேவைக்கேற்ற சப்ளை" விதியின் சக்தி பெரும் பாலான மேற்கத்தி நாடுகளில் குறைந்து விட்டது. இவ்விதம், சர்வ தேச அடிப்படையில் லேவாதேவி நடத்தி வந்தவர்களின் செல்வாக்கை, சர்வதேச சுதந் திர வர்த்தக சகாப்தம் குறைத்து விட்டது.

இந்த மாறுதலை வரவேற்பதோ, இதற்காக வருந் துவதோ இந்த நூலின் நோக்கமல்ல. மேற்கத்தி சமூகம் நம் காலத்தில் எப்படிப் போய்க் கொண்டிருக் கிறது என்பதை அறியவே இது இங்கு விவரிக்கப்பட் டது. நாகரிகங்களின் கடைசி கட்டத்தைப் பற்றி ஸ்பெங்லர் கூறியதற்கு ஒத்ததாக இது இருக்கிறது. பழைய நாகரிகங்களில், பிரம்மாண்டமான உலக நக ரங்கள் வளர்வது, நாகரிகத்தின் அந்திய காலத்தின் ஓர் அடையாளம். நம் சமூகத்தில் இது பத்தொன்ப தாம் நூற்ருண்டில் ஏற்படத் தொடங்கி, இருபதாம் நூற்ருண்டில் இதன் வேகம் அதிகரித்தது. பின் வரு பவை சில முக்கிய உதாரணங்களாகும். 1870-ம் வரு ஷத்திலிருந்து 1950-ம் வருஷத்திற்குள் லண்டன் மா நகரத்தின் ஜனத் தொகை நாற்பது லக்ஷத்திலிருந்து தொண்ணூறு லக்ஷமாக உயர்ந்தது; நியூயார்க்கின் ஜனத்தொகை பத்து லக்ஷத்திலிருந்து எண்பது லக்ஷ மாக அதிகரித்தது. பெர்லினின் ஜனத் தொகை எட்டு

லக்ஷத்திலிருந்து நாற்பத்தைந்து லக்ஷமாகப் பெருகியது; மாஸ்கோவின் ஜனத் தொகை ஆறு லக்ஷத்திலிருந்து அறுபது லக்ஷமாக உயர்ந்தது. இரண்டு லக்ஷத்தி அறுபதினுயிரத்திற்கும் குறைவாக இருந்த ஜாகர்த்தாவின் ஜனத்தொகை இருபத்தெட்டு லக்ஷமாக வளர்ந்தது.

ஸ்பெங்லர் வர்ணிக்கும் ராக்ஷஸ நகரங்களுடன் இவற்றைச் சந்தேகமற ஒப்பிடலாம். இவற்றின் அழுக்கு லக்ஷக்கணக்கான மக்கள் பலியாவார்களென்று ஸ்பெங்லர் கூறுவதை ஏற்கெனவ கண்டோம். இரவில் நியூயார்க்கின் மத்திய பூங்காவின் ஏரிக் கரையில் நின்று, வானளாவும் கோபுரங்களில் ஜொலிக்கும் லக்ஷக் கணக்கான தீபங்கள் ஏரியில் பிரதிபலித்து இரட்டிப்பதையும், பாரிஸ் நகரின் தீபங்கள் நக்ஷத்திரங்கள் நிறைந்த வானத்துடன் போட்டி யிடுவதையும் கண்டவர்கள், அவருடைய வர்ணனையின் உருவம் இதுவே என்ற முடிவுக்கு வராமலிருக்க மாட்டார்கள். "புத்துயிர் பெற்ற பாபிலோனும், நினேவேயும், ரோமாபுரியும்" இதுதானே என்றே கருதுவர். இவற்றில் வசிக்கும் மக்களுக்கும் இது பொருந்தும். இவர்கள் நிலத்தைப் பற்றிய உணர்ச்சியையே இழந்து விட்டனர். ஒரு காலத்தில் மனிதனின் வாழ்க்கைக்குக் கோட்டையாக விளங்கிய குடும்பம் வெறும் சாப்பிடுமிடமாகவும் தூங்கும் இடமாகவும் ஆகிவிட்டது. (இதற்கு வாழ்க்கை என்ற பதம் பொருந்ாது.) இதுபோல் லக்ஷக்கணக்கில் உள்ள இடங்கள் நாளுக்கு நாள் அளவிலும் தன்மையிலும் சுருங்கிக் கொண்டே வருகின்றன. இவற்றில் ஜனங்கள் தற்காலிகமாகக் குடிபுகுந்து, இவற்றைவிட இன்னும் சிறிது வசதியான இடம் கிடைக்கும் வரை வசித்து பிறகு அவற்றிற்கு மாறிவிடுகின்றனர். அறிவாளியான நாடோடி உண்மையாகவே தோன்றி விடுகிறான்.

பழைய நாகரிகங்களுடன் நம் காலத்தை ஒப்பிடக் கூடிய மற்றோர் அம்சம் ஜனன விகிதக் குறைவு. உலகத்தின் எல்லா முக்கிய நாடுகளிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடை கால் பாகம் முதல் ஜனன விகிதம் வேகமாகக் குறைந்து வருவதாக என்ஸைக்ளோபீடியா பிரிட்டானிகா என்ற விஷயக் களஞ்சிய நூல் கூறுகிறது. ரஷியாவையும் சீனாவையும் பற்றி நம்பத் தக்க விவரங்கள் கிடைக்காதாகையால் அவற்றின் விஷயத்திலும் இது உண்மையா என்பதைச் சொல்ல முடியாது. பெரும்பாலான மேற்கத்தி நாடுகளில் இது உண்மை. இங்கிலாந்தில் **1850-1880**-ல் ஆயிரத்திற்கு முப்பத்தைந்தாக இருந்த ஜனன விகிதம் **1930-40**-ல் ஆயிரத்திற்குப் பதினைந்தாகக் குறைந்து விட்டது. ஜெர்மனியில் ஆயிரத்திற்கு முப்பத்தைந்திலிருந்து பதினேழு பதினெட்டாகக் குறைந்தது. பிரான்ஸில் இருபத்தாறிலிருந்து பதினைந்து ஆயிற்று. அமெரிக்காவில் **1915**-ம் வருஷத்தில் **25·1**-ஆக இருந்த ஜனன விகிதம், இரண்டாவது உலக யுத்தத்திற்குமுன் பதினேழாகக் குறைந்து விட்டது.

இந்த நாடுகள் எல்லாவற்றிலுமே யுத்தம் முடிந்தவுடன், முதல் உலக யுத்தத்திற்குப் பின் நேர்ந்தது போல, ஜனன விகிதம் அதிகரித்தது. இது தற்காலிகமான நிகழ்ச்சியே. ஆனால் ஒரு ரஸமான விஷயம் என்னவென்றால், முதல் உலக யுத்தத்திற்குப் பின் நிகழ்ந்தது போலல்லாமல், மேற்கத்தி நாடுகள் பலவற்றில் யுத்தத்திற்குமுன் இருந்ததைவிடச் சிறிது அதிக விகிதத்தில் நிலைத்து வருகிறது. **1950**-ம் வருஷம் முதல் இங்கிலாந்தில் இது ஒரே நிலையில் நிற்கிறது. அதாவது ஆயிரத்திற்குப் பதினாறில் உள்ளது. (யுத்தத்திற்குமுன் இது **14·9**-ஆக இருந்தது.) பிரான்சில் **19·5** (யுத்தத்திற்குமுன் **15**); அமெரிக்காவில் **24**. (யுத்தத்திற்குமுன் **17**); இந்த நிலைமை நிரந்தரமானதா

என்பதை அவ்வளவு சீக்கிரம் சொல்ல முடியாது.

## நம் காலத்தின் தன்மை

மேலே நடத்தப்பட்ட ஆராய்ச்சி பல சமயங்களில் ஆத்மீகத் துறையில் பிரவேசித்தது சமாதான வேட்கை, பாமர மக்களின் எழுச்சி, வீர பக்தி, ஜனன விகிதக் குறைவு முதலியவை. அரசியல், சமூக எல்லைக் குள் எவ்வளவு சேருமோ அவ்வளவு ஆத்மீக எல்லைக் குள்ளும் சேரும். நம் காலத்தின் மிக முக்கியமான ஆத்மீக அம்சங்கள் இனிதான் வகுக்கப்பட வேண்டும்.

சென்ற காலத்தில் முக்கியமான பல பெரியோர்கள் இந்தக் கடினமான வேலையை மேற்கொண்டனர். இந்த ஆராய்ச்சிகளின் தோல்விக்குக் காரணமான ஒரு தவ றைப் பற்றி ஆரம்பத்திலேயே எச்சரிக்கை கிடைத்து விடுகிறது. அதாவது ஆராய்ச்சியாளர்கள் குறிப்பா கச் சரித்திராசிரியர்கள் இந்த ஆராய்ச்சிகளை நடத்தும் பொழுது கடந்த காலத்தை அளவுக்குமேல் மதிப்பிட்டு விடுகின்றனர் என்பதே அந்த எச்சரிக்கை.

நமக்குள் கிடைக்கும் கடந்த காலத்தின் சித்திரம், சரித்திரத்தில் இடம்பெறத் தக்க மிக முக்கியமான விஷயங்களினுல் மட்டுமே ஆனது: பெரிய தலைவர் கள், அவர்களுடைய வார்த்தைகள், போராட்டங்கள், புரட்சிகள், சட்டங்கள் மக்களையும், சம்பவங்களையும் இயக்கிய கருத்துக்கள் முதலியவை மட்டுமே இதில் அடங்கியுள்ளன.

எந்த சமூகத்திலும் 9 சத விகிதம் உள்ள சாமானிய மான, மந்தமான வாழ்க்கை நடத்தும் எளிய மக்கள் சரித்திரத்தில் இடம் பெறுவதில்லை. ஆகவே சரித்திரக் கப்பல் செல்லும் பாதைக்கு இது முக்கியமில்லை. ஆனுல் இவர்களும் சரித்திர வளர்ச்சியில் இருந்திருக்கிறுர் கள். சரித்திரத்தின் முக்கிய போக்கை அறிவதில் மட்டுமே சரித்திராசிரியர்கள் முனைந்து விடுவதால் இவர்களை மறந்து விடுகின்றனர். ஆயினும் சரித்திரா

சிரியர்கள் தங்கள் காலத்தில் தங்களைச் சுற்றிச் சூழ்ந்துள்ள இந்த 99 சத விகிதம் மக்களை புறக்கணித்து விட முடியாது. ஏனெனில் இவர்கள் தாங்கள் இருப்பதை சரித்திராசிரியனுக்கு ஒவ்வொரு நாளும் வற்புறுத்திக்கொண் டிருப்பார்கள். ஆகையால் சரித்திராசிரியர் இன்றைய உலகத்தைச் சென்ற வருஷத்தின் நிலைமையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது இரு சமமான அளவுகளையே ஒப்பிடுவார்கள். அதாவது இன்றைய பிரத்யக்ஷ நிலைமையையும், சரித்திர புத்தகங்களில் உள்ள சென்ற காலத்தின் வடிகட்டிய சாரத்தையும் தான் ஒப்பிடுவார்கள். இது நியாயமற்ற ஒப்பீடாகும். இன்று கறந்த பால் நேற்றைய சுத்தமான பால்கோவாவைப்போல் அவ்வளவு ருசியாக இராது.

நம்முடைய "பாமர மக்கள் சகாப்தத்தில்" சுவை, அறிவு, பகுத்தறிவு எல்லாம் ஒரு சமப்படுத்தப்பட்டு விட்டதென்றும், இதனால் இவற்றின் தரம் குறைந்து, கலாசாரமும் இறங்கி விட்டதாகவும் சகஜமாகக் கூறப் படுகிறது. இந்தக் கருத்து சரியென்று நிரூபிக்கப்பட வில்லை. நுணுக்கமாக ஆராய்ந்தால் இது தவறென்றே ஏற்படும்.

மேற்கத்தி நாடுகளில் நம் நூற்றாண்டில், மேல் வகுப்பினரைவிடப் பாமர மக்களின் வாழ்க்கைத் தரம் அதிகம் உயர்ந்திருக்கிறதென்பதைப் புள்ளி விவரங் கள் நிரூபிக்கின்றன. இதனால் அவர்களுடைய சுவை யில் சிறிதாவது அபிவிருத்தி ஏற்பட்டிருக்குமென்றும், ஓய்வு நேரத்தைச் செலவழிப்பதில் முன்னேற்ற மடைந் திருப்பார்கள் என்றும் எண்ணுவது தர்க்க ரீதிக்கு ஒத்ததாக இருக்கும். ஆனால் எவ்வளவு அபிவிருத்தி ஏற்பட்டிருக்குமென்று கணக்கிடுவது கஷ்டம்.

ஹாலிவுட்டையும், குத்துச் சண்டைகளையும், ஜல் லிக்கட்டுகளையும், அழகுப் போட்டிகளையும் எதிர்த்து சரித்திர வேதாந்தி இடி முழக்கம் செய்யும் பொழுது,

பதினாலாவது லூயி, அல்லது கிரேட் பிரெடரிக் ஆகிய வர்களின் ஆஸ்தானத்தில் இருந்த கலையுடனும், ஷேக்ஸ்பியர் அல்லது கெதே, ஸெர்வாண்டிஸ் ஆகிய வர்களின் கலையுடனும் தங்களையும் அறியாமல் ஒப்பிடு கின்றனர்.

நிதானமான முறையில் ஒப்பிடுவதென்றால், தற் காலப் பொழுது போக்குகளை ரோமர் காலத்தில் கிறிஸ் தவர்கள் பகிரங்கமாகக் கொலைசெய்யப்பட்டதுடனும், சரித்திர முக்கியத்துவம் இல்லாததால் மறைந்துபோன கேளிக்கை, தமாஷ் நாடகங்களுடனும் ஒப்பிட வேண் டும். தற்காலத்தில் லக்ஷக் கணக்கான மக்களுக்காகத் தயாரிக்கப்படும் தினசரிப் பத்திரிகைகளைப் புராதன காலத்தின் மகத்தான இலக்கியக் கர்த்தாக்களின் சிருஷ்டிகளுடன் ஒப்பிடக் கூடாது; அக் காலத்தில் இதேபோல் ஏராளமான மக்கள் படித்த விஷயங்க ளுடன் தான் ஒப்பிட வேண்டும். இன்று சினிமாவுக் குப் போகும் சாதாரண மக்களின் சுவையை, பதினே ழாம் நூற்றாண்டில் நாடகம் பார்க்கச் சென்ற பிரமுகர் களின் சுவையுடன் ஒப்பிடக் கூடாது. உண்மையில் அக்காலத்தில் பகிரங்கமாக நிறைவேற்றப்பட்ட மரண தண்டனைகளையும், பகிரங்கமாக வைக்கப்பட்ட பைத் தியக்காரர்களையும் கண்டு சந்தோஷித்த மக்களின் சுவையுடன் தான் தற்கால மக்களின் சுவையை ஒப்பிட வேண்டும். இவ்விதம் நியாயமான முறையில் ஒப்பிட்டுப் பார்த்தால் பாமர மக்களின் சுவை தாழ்ந்து விடாமல் உயர்ந்தே இருக்கிறதென்பது விளங்கும்.

அவர்களுடைய பகுத்தறிவுக்கும் இதே வாதம் பொருந்தும். சூன்யக்காரர்களைக் கைது செய்வதும், கொளுத்துவதும், கருத்து வேற்றுமை உள்ளவர் களைக் கைது செய்வதும் சர்வ சாதாரணமாக இருந்த காலத்தில் விஷயங்களின் தராதரத்தை நிர்ணயிக்கும் தன்மை நம் காலத்தில் இருப்பதைவிட உயர்வாக

இருந்ததென்று நினைப்பது கஷ்டமாக இருக்கிறது. தற்காலத்தில் கூடச் சூன்யக்காரர் வேட்டை நவீன உருவங்களில் இருந்து வருகிறது. ஆனால் பெரும்பாலான மேற்கத்தி நாடுகளில் இது எதிர்க்கப்படுகிறது.

பலருடைய தரம் உயர்ந்திருக்கும் பொழுது சிலருடைய தரம் குறைந்திருப்பதாக வைத்துக் கொண்டால் கூட, நம்முடைய நாகரிகத்தின் தரம் குறைந்து விட்டதாக முடிவு செய்வதற்கு முன்னால் இந்த இரண்டையும் ஒத்திட்டுப் பார்க்க வேண்டியது அவசியம்.

உயர்ந்தவர்களின் தரம் குறைந்து விட்டதென்றும் நிச்சயமாகக் கூற முடியாது. இதை நிரூபிப்பதற்கு, புத்திசாலித்தனமாக, அதாவது சுயேச்சையான சிந்தனையின் மூலம் ராஜ்ய விவகாரங்களில் கலந்து கொள்வது, வர்த்தகத்தை நடத்துவது, புத்தகங்கள் படிப்பது, கோயில்கள், தியேட்டர்கள், கச்சேரிகள் முதலியவற்றிற்குப் போவது முதலியவற்றைச் செய்வோரின் சத விகிதம் குறைந்துவிட்டதா என்பதையும், இவற்றைச் செய்வதில் பழங் கால மக்களைவிடத் தற்கால மக்களின் அறிவோ சுவையோ குறைவாக இருக்கிறதா என்பதையும் கவனிக்க வேண்டும். இதை நிரூபிப்பது கஷ்டம். சமூகத்தின் முக்கியமான பிரிவுகளிலாவது இது உண்மையல்லவென்று நிச்சயமாகக் கூறலாம்.

இன்று சர்க்காரை நடத்துவது இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகளுக்குமுன் இருந்ததைவிட மிகவும் சிக்கலான விஷயமாகி விட்டது. ஆகையால் இப்பொழுது சர்க்காரை நடத்துபவர்களுக்கு அளிக்கப் பட வேண்டிய பயிற்சியின் தரம் மிகவும் அதிகமாக இருக்கவேண்டி யிருக்கிறது.

வர்த்தகத்தையும், பொதுவாகப் பொருளாதார விஷயங்களையும் நடத்துவதற்கும் இதுவே பொருந்தும். பொருளாதாரம் மாத்திரமின்றி வியாபார நிர்வாக

மும் ஒரு சாஸ்திரமாகிவிட்டது. சர்வ கலாசாலைகளில் இது போதிக்கப்படுவது சரியே.

ராணுவத்திற்கும் இது பொருந்தும். யுத்தத்தை எப்பொழுதுமே ஒரு கலை அல்லது சாஸ்திரம் என்று சொல்லலாம். இது இப்பொழுது அதிகச் சிக்கலாகி விட்டது. வாலென்ஸ்டீன் அல்லது நெப்போலியன் காலத்தில் இருந்ததைவிட இப்பொழுது தொழில் நுட்ப ஞானம் அதிகம் தேவை. இன்று மிகச் சாதாரண ஒரு சிப்பாய்க்குக்கூட நவீன் ஆயுதங்களைக் கையாள்வ தற்குக் குறைந்த பட்சம் ஓரளவு தொழில் நுட்ப ஞானம் தேவையாக இருக்கிறது. பழைய காலத்தில் பல ஜெனரல்களுக்கு இருந்ததைவிட இந்த ஞானம் மிகவும் உயர்ந்ததாகும். டுரென்னேயைப் போல் இருபத்து நாலாவது வயதில் ராணுவ காப்டனாகவோ, முப்பத்திரண்டாவது வயதில் பிரான்ஸின் மார்ஷலாகவோ அல்லது இளைய பிட்டைப்போல் இருபத்து நாலாவது வயதில் பிரதம மந்திரியாகவோ இன்று ஆக முடியாது. அவ்வளவு பெரிய அறிவாளிகள் இப் பொழுது உண்டாவதில்லையென்று அர்த்தமில்லை; ஆனால் மேதாவிகளுக்குக்கூட இன்று தேவைப்படும் பயிற்சி மிகவும் அதிகம்.

உத்தியோகத்தில் வெகு தூரம் முன்னேறியவர் கள்கூட மேற் பயிற்சிக்கு ஏற்பாடு செய்யப்பட் டிருப் பதிலிருந்து, மேலே குறிப்பிடப்பட்ட துறைகளில் எவ்வளவு உயர்ந்த அறிவு தேவை என்பது தெரியும். பல நாடுகளில் ஆட்சி முறை, வர்த்தகம் முதலியவற் றில் பயிற்சி அளிப்பதற்கு உயர்தரப் பள்ளிகளும், ராணுவப் பயிற்சிக்குப் பிரத்யேகக் கல்லூரிகளும் அவசியமாக உள்ளன.

அதிக அறிவின் அவசியத்தை உணர ஒருவர் சர்க்கார் அல்லது தனிப்பட்ட வர்த்தக ஸ்தாபனத்தில் மானேஜர் பதவிக்குக்கூட உயர வேண்டியதில்லை.

அன்றாட விவகாரங்களிலேயே இது தெளிவாகத் தெரியும். "அறிவுள்ள பிரஜை" என்பவன் எக்காலத்திலுமே ஒரு லக்ஷிய புருஷன்தான். மிகச் சிலரே இந்த நிலையை அடைகின்றனர். இந்தச் சிலருக்குத் தெரிந்திருக்க வேண்டிய விஷயங்கள் முன் எப்பொழுதும் இருந்ததைவிட மிகவும் அதிகமாகும். அறிவுள்ள பிரஜை காலப்போக்கை அறிவதற்கு ஒவ்வொரு நாளும் பத்திரிகை படிப்பதற்கு அரை மணி அல்லது ஒருமணி நேரம் செலவிட வேண்டியிருக்கிறது. இது தவிர, பிரத்யேகத் துறைகள் சம்பந்தமான ஏராளமான விஷயங்களையும், இலக்கியம் முதலியவற்றையும் அறிந்திருக்க வேண்டும்.

வழி காட்டும் சிறு பான்மையினரின் அறிவாற்றல் குறைந்துவிடவில்லை. உண்மையில் பெரிதும் உயர்ந்திருக்கிறது என்பதையே இவையெல்லாம் காட்டுகின்றன.

இவை தவிர, மற்றும் பல துறைகளிலும், சிருஷ்டி இயக்கம் குறைந்திருப்பதற்கான அறிகுறிகளை நாம் காணவில்லை.

இவ்விதம் நுணுக்க ஆராய்ச்சியுடன் பார்த்தால், நம் காலத்தில் அறிவாற்றல் குறைந்து விட்டதாகக் கூறப்படும் புகார் அடிபட்டுப் போகிறது. ஓர்ட்டேகா ஓய்காஸெட், ஹூய்ஸிங்கா முதலிய சிந்தனையாளர்கள் உள்படப் பலர், வழி காட்டும் சிறுபான்மையினரின் அறிவு, தேவைக்கேற்றபடி போதுமான அளவு உயராதது தற்காலத்தின் கோளாறுகளில் ஒன்றென்று கருதுகின்றனர். நம் சமூகத்தின் சிக்கல் பெரிதும் அதிகரித்து விட்டதால் இது உண்மையாக இருக்கலாம். தற்காலத்தின் தலைமை போதவில்லையென்ற புகாரின் காரணத்தை அறிய இது பெரிதும் உதவும். ஆனால் தலைவர்களின் அறிவு குறைந்துவிட்டதென்ற வாதத்தைச் சரியென்று இது நிரூபிக்க

வில்லை. கால வேகத்தின் தேவைக்கேற்றபடி இது வளரவில்லை. இதன் விளைவு சமூகத்திற்கு அதற்கேற்ற தலைமை போதவில்லை யென்பதுதான். ஆனால் அறிவு குறைந்து விடுவதைப் போன்ற அவ்வளவு அபாயகர மானதல்ல இது.

இருபது வருஷத்திற்கு முன்னால், ஹூய்ஸிங்கா என்ற டச்சுச் சரித்திராசிரியர், நம் காலத்தின் ஆத்மீக சங்கடங்களை ஆராய முற்பட்டார். தம்முடைய அற்புதமான நூலுக்கு "நாளைய நிழலில்" என்று பெயரிட்டார். நாளை இன்றாகி விட்டது. நிழலும் இன்னும் இருண்டுவிட்டது. தற்காலத்தின் அணு ஒளியில் அது இன்னும் அபாயகரமாகவும் தெளிவாகவும் தெரிகிறது.

நம் காலத்தின் முக்கிய அம்சம் என்னவென்றால், இதற்குமுன் என்றும் கண்டிராத அளவில் நமக்கு அறிவு நெருக்கடி ஏற்பட்டிருப்பதுதானென்று ஹூய்ஸிங்கா கூறுகிறார். இத்தகைய ஒரு நெருக்கடி இப்போது இருப்பதுபோல், இதற்குமுன் எப்பொழுதும் இருந்ததில்லை யென்று அவர் கருதுகிறார்.

*1935*-ம் வருஷ ஐரோப்பாவைப் பொருத்தவரையில் இது நிச்சயம் உண்மையாக இருந்தது. இன்று இது இன்னும் அதிக உண்மை. இந்த உணர்ச்சி இன்னும் ஆழ்ந்தும்,பரவியும் உள்ளது. முதல் உலக யுத்தத்தை விட இன்னும் பயங்கரமான மற்றொரு உலக யுத்தம், ஆசியாவில் ஐரோப்பா தன் அந்தஸ்தை இழந்தது. உலக அரங்கத்தில் பல ஆசிய நாடுகளின் உயர்வு, கம்யூனிஸ்ட் பலத்தின் மகத்தான பெருக்கம், அணு சக்தி விடுவிக்கப்பட்டது ஆகியவை இன்னும் அதிக நெருக்கடி உணர்ச்சியை ஏற்படுத்தி யிருக்கின்றன. இது ஐரோப்பாவோடு நிற்கவில்லை.

மகத்தான மாறுதல்கள் ஏற்பட்டபொழுதெல்லாம் இத்தகைய உணர்ச்சி நிலவி யிருக்கிறது. நம்முடைய நாகரிகம் நெருக்கடி காலத்தைக் கடந்துகொண் டிருக்

கிறது என்பதை இது காட்டினாலும், இது பலவீனத்தைக் காட்டவில்லை என்பதையும் உடனே கூறவேண்டும். ஏதோ கோளாறு இருக்கிறது என்ற உணர்ச்சியைவிட, ஆத்ம திருப்தியினால் அழிந்த நாகரிகங்கள் தான் அதிகம். சவால்களைச் சமாளிக்க நாகரிகத்திற்குச் சக்தி இருக்கிறதா என்பதைப் பொருத்தே எல்லாமிருக்கின்றன.

அரசியல், பொருளாதாரத் துறைகளைப் போலவே ஆத்மிகத் துறையிலும் நம் நாகரிகம் ஒரு திட்டப்படி வளர்ந்திருக்கிறது. இது இடை சகாப்தத்தில், மதமும் நிலப் பிரபுத்துவமும் ஆதிக்கம் செலுத்திய கலை, தத்துவம், அரசியல், பொருளாதார முறைகள் முதலியவற்றிலிருந்து பிறந்தது. பன்னிரண்டாம் நூற்றாண்டின் மறுமலர்ச்சியிலும் இவையெல்லாம் ஆதிக்கம் செலுத்தின. பதினாறும் நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் மதம் நிலப் பிரபுத்துவம் ஆகியவற்றின் பந்தங்களிலிருந்து மனித மனம் விடுபடத் தொடங்கி மகத்தான முயற்சிகளும் ஆக்க வேலைகளும் நிறைந்த சகாப்தத்தில் பிரவேசித்தது. சீர்திருத்தம், மறுமலர்ச்சி, படிப்புக்குப் புத்துயிர், மனிதத் தன்மை முதலியவற்றை இது உண்டாக்கியது. இருந்தாலும் கிறிஸ்தவ மதத்தின் அடிப்படை மதிப்பு ஆக்ஷேபிக்கப்படவில்லை.

மனித மனம் இன்னும் அதிக சுதந்திரமும் தைரியமும் பெற்ற பொழுது பதினெட்டாம் நூற்றாண்டில் இந்த நிலைமை மாறி, கிறிஸ்தவ மதம் பகிரங்கமாகத் தாக்கப் பட்டது.

இதற்கு முன்னால் இந்த மதம் காரணமாகக் கடும் சர்ச்சைகளும், ரத்தப் பெருக்கு நிறைந்த போராட்டங்களும் மூண்டன. இவை கொள்கை வேற்றுமைகளுக்குத்தான். ஆனால் இப்பொழுது கிறிஸ்துபிரான் உபதேசங்களின் மதிப்பே-கடவுள் இருக்கிறார் என்பதே—மறுக்கப்படுகிறது. மக்கள் மனத்தில் இந்தக் கருத்

தின் வித்தை வால்டேர் போன்ற வேதாந்திகள் ஊன்றினர். இதன் முதல் அறுவடை பிரெஞ்சுப் புரட்சியில் நடைபெற்றது. இதன் முழுப் பலனும் பத்தொன்பதாம் நூற்ருண்டில் கிடைத்தது. பகுத்தறிவு யுகம் ஆரம்பமாகிவிட்டது. கலைகள், சாஸ்திரங்கள் எல்லாவற்றையும் மதச் சார்பற்றதாகச் செய்யும் நாகரிகங்களின் மூன்ருவது கட்டத்துடன் இதை ஒப்பிடலாம்.

ஆனல் இதே காலத்தில் பகுத்தறிவின் அளவற்ற மதிப்பைப் பற்றிச் சந்தேகம் எழுகிறது. வழக்கம் போல் பெரிய சிந்தனையாளர்கள் வழிகாட்டி யிருக்கின்றனர். நீட்ஷே, பிராய்ட், பெர்க்ஸன், ஸொரெஸ் ஆகிய ஒவ்வொருவரும் பகுத்தறிவின் வல்லமையை எதிர்க்கின்றனர். அதற்குப் பதிலாக ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் 'உணர்ச்சி மதிப்புக்களை'ப் புகுத்துகின்றனர். இவர்களுடைய கருத்துக்கள் செல்வாக்குப் பெருமல் போகவில்லை. அறிவு, எல்லாக் கஷ்டங்களையும் போக்கக் கூடிய சர்வ ரோக நிவாரணி என்ற நம்பிக்கை இருபதாம் நூற்ருண்டின் முதல் பாதியிலேயே குறையத் தொடங்கிவிட்டது. மனிதன் நாற்பது வயதுக் காலத்தில் அனுபவிக்கும் அனுபவங்களையும், கற்கும் பாடங்களையும் மேற்கத்தி நாகரிகம் நானூறு வருஷங்களில் பெற்றது. முதலில் வெளிச் சக்திகளின் ஆதிக்கத்திலிருந்து கிடைத்த விடுதலை, உணர்ச்சியின் ஆதிக்கம் பெற்ற ஆத்மீக கலைச் சிருஷ்டிகளைத் தூண்டி விட்டது. பிறகு மனம் இன்னும் சக்தி வாய்ந்த முறையில் வளர்ச்சி யடைந்தது. அறிவும், தர்க்க ஞானமும், விஞ்ஞானமும் தொழில் நுட்ப அறிவும் அதிலிருந்து தோன்றின. ஒழுக்கமில்லாமல் இவை மாத்திரம் இருந்தால் பயனில்லை; மனித அறிவு கண்டு பிடித்த மகத்தான விஷயங்கள், எதிர் பார்க்கப்பட்ட சொர்க்க பூமியை ஏற்படுத்தி விடவில்லை என்பது இறுதியில்தான் தெரிந்தது. இதற்கு

மாருக இவை இன்னும் அதிகப் பிரச்னைகளையும், சிக்கல்களையும் போராட்டங்களையும்தான் ஏற்படுத்தி விட்டன. தொழில் புரட்சியினுல் தொழிலாளர் பிரச்னையும் வர்க்கப் போராட்டமும் ஏற்பட்டன. விஞ்ஞானம் எந்த விதமான தார்மீகக் கட்டுப் பாடுமில்லாமல் இயற்கைச் சக்திகளை கற்பனைக்கு எட்டாத அளவில் வசப்படுத்தியது. இதனுல் மனிதனின் க்ஷேமமும், சுகமும், ஆரோக்கியமும் அதிகரித்தன. ஆனுல் அதே சமயத்தில், ஒரே குண்டினுல் 78,000 பேரைக் கொல்லக்கூடிய பயங்கரமான சக்தியையும் அது சிருஷ்டித்தது. இதுவரை கண்டு பிடிக்கப்பட்டுள்ள ஆயுதங்களே நாகரிக வாழ்க்கையைப் பூண்டோடு அழித்துவிடக்கூடியவை.

அறிவின் பயனுக ஏற்பட்டுள்ள நம் காலத்தின் ஏமாற்றத்தைப் பூரணமாகப் புரிந்து கொள்ள இதைத் தனியாகக் கவனிக்க வேண்டும்.

இந்த நூற்ருண்டின் ஆரம்ப காலம் முதல் இதுவரை விஞ்ஞானம் பிரம்மாண்டமான அளவில் முன்னேறியுள்ளது. அன்ருட வாழ்க்கையை இது எத்தகைய புரட்சிகரமான மாறுதலுக்கு உள்ளாக்கியிருக்கிறது என்பது கூட, இந்த நூற்ருண்டின் மத்தியில் வாழும் மேற்கத்தியாருக்குத் தெரியாது. அறுபது வருஷங்களுக்கு முன்னுல்தான் முதல் மோட்டார் கார் மிகுந்த சிரமங்களுக்கிடையே முதல் முதல் ஓடத் தொடங்கியது. முதல் விமானம் தரையை விட்டுச் சில கஜ தூரம் பறந்து செல்ல ஆரம்பித்து இன்னும் அறுபது வருஷங்கள்கூட ஆகவில்லை.

கி. மு. 2000-ஆவது ஆண்டில் பாபிலோன் வீதிகளில் முதல் குதிரை தோன்றிய நாள்முதல் நீராவியின் சக்தியினுல் வண்டி ஓடத் தொடங்கியவரை, அதாவது சுமார் 4000 வருஷ காலம், குதிரையைவிட வேகமான போக்கு வரத்துச் சாதனம் மனிதனுக்குத் தெரியாது. பின்னர் நீராவி எஞ்சினுல் ஏற்பட்ட புரட்சிகரமான

மாறுதலுக்கு ஏற்றபடி தன் வாழ்க்கையை மாற்றிக் கொள்ள மனிதனுக்குச் சுமார் நூறு ஆண்டுகள் பிடித்தன. பிறகு ஐம்பது வருஷங்களுக்குச் சிறிது அதிகமான காலத்திற்குள் மோட்டார்கள், விமானம், ரேடியோ, டெலிவிஷன், ஜெட் விமானம், ராக்கெட் விமானம், கடைசியாக அணுசக்தி எல்லாவற்றையும் அடுத்தடுத்து மனிதன்மீது திணித்தது விஞ்ஞானம்.

மனிதன் உணர்ந்திருந்த பிரபஞ்சத்தில் அணுவே பிரிக்க முடியாத மிகச் சிறிய பொருளென்றும், நக்ஷத்திர மண்டலமே கண்ணுக்கெட்டிய வெளி எல்லையென்றும் பல நூற்றுண்டுகளாகக் கருதப்பட்டு வந்தது. ஆனால் இன்று விஞ்ஞானம் இந்த இரு எல்லைகளையும் தகர்த்து விட்டது. அணுவிலும் நக்ஷத்திர மண்டலத்தைப்போல் பல மிக நுண்ணிய பொருள்கள் சுற்றிக் கொண்டிருக்கின்றனவென்று பௌதிக சாஸ்திரம் நிரூபிக்கிறது. நம்முடைய நக்ஷத்திர மண்டலம் வானத்தில் உள்ள எண்ணற்ற எத்தனையோ பிரபஞ்சங்களில் ஒன்றேயென்று வான சாஸ்திரம் கூறுகிறது. ஆகையால் கற்பனைக் கெட்டாத பிரம்மாண்டத்தில் நம் பிரபஞ்சம் ஓர் அணுவேயாகும்.

இருபதாம் நூற்றுண்டு விஞ்ஞானம் எடுத்துக் காட்டியுள்ள இந்த பிரும்மாண்டத்தின் விளிம்பில் மேற்கத்தி மனிதன் தலை சுற்றி நிற்கிறான். அணுவைப் பிளந்தது இதற்குமுன் என்றும் கண்டிராத பிரமிப்பூட்டும் விஞ்ஞான சாதனை. அளவிட முடியாத சக்தியை இது கொடுத்திருக்கிறது. இதனால் ஏற்படக் கூடிய விளைவுகள் அனைத்தையும் முன்கூட்டிச் சொல்ல முடியாது.

ஆனால் இன்னும் பெரிய சாதனைகளுக்கு மனிதன் ஏற்கெனவே முயற்சி செய்து வருகிறான். பூமிக்கு மேலே செயற்கை முறையில் ஓர் உபக் கிரகத்தை மிதக்க விடுவது, மற்ற கிரகங்களுக்கு ராக்கெட்டு

களைச் செலுத்துவது, இந்த நூற்றுண்டின் ஆரம்ப காலத்திற்குப் பின் ஏற்கெனவே இரட்டிக்கப்பட்டுள்ள மனித ஆயுட் காலத்தை மேலும் இரட்டிப்பது, மனிதனின் அறிவையும், தார்மீக குணங்களையும் செயற்கை முறையால் மாற்றுவது, பெண்ணை ஆணுக, அல்லது ஆணைப் பெண்ணுக மாற்றுவது, ஆண் அல்லது பெண் எது வேண்டுமோ அந்தக் குழந்தை பிறக்கும் படிச் செய்வது முதலிய சாகஸங்களைச் செய்ய விஞ்ஞானம் ஏற்கெனவே முயன்று வருகிறது.

இதைப் போலவே வைத்தியம், ரசாயனம், உயிர் நூல், மனோ தத்துவம் முதலிய சாஸ்திரங்களிலும் பிரமிக்கத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. இவற்றில் அமெரிக்காவின் சாதனைகளும் ஐரோப்பாவின் சாதனைகளும் மிகவும் நெருக்கிப் பின்னப்பட்டிருப்பதால் இவற்றைத் தனியாகப் பிரிப்பது கஷ்டம். ஆனால் ஒரு விஷயத்தை மாத்திரம் சொல்லலாம். ஐரோப்பாவின் விஞ்ஞான நடவடிக்கைகள், வெறும் விஞ்ஞான ஆராய்ச்சியாக மட்டும் இருந்தது. அமெரிக்காவில் இதைப் பிரத்தியக்ஷ முறையில் பயன்படுத்துவதில் கவனம் செலுத்தப்பட்டது. விஞ்ஞான சாதனையில் நம் நூற்றுண்டு முதன்மை ஸ்தானம் வகிக்கிறதென்பதை இந்த இரண்டுமே நிரூபிக்கின்றன.

நியூயார்க் நகரில் உள்ள எம்பயர் ஸ்டேட் கட்டிடத்தின் மீதிருந்து எறும்புப் புற்றுபோல் தோன்றும் நகரை முதல் முறையாகப் பார்க்கும் ஓர் ஐரோப்பியனுக்கு எத்தகைய உணர்ச்சி ஏற்படுமோ அதே உணர்ச்சிதான் இந்த மாறுதல்களைப் பற்றி யோசிப்பவர்களுக்கும் ஏற்படும். மனிதன் தன் அளவை மீறி விடவில்லையா? அவனுடைய சிருஷ்டியே அவன் கைக்கு அடங்காமல் போய்விடவில்லையா? மனிதன் உண்டாக்கிய சக்திகளை அவன் இனியும்கட்டுப்படுத்த முடியுமா? என்ற கேள்விகள் எழுகின்றன.

சமீபத்தில் அமெரிக்கப் பேராசிரியர் ஒருவர், பௌதிக சாஸ்திரத்தினுல் ஏற்படக்கூடிய அளவற்ற விளைவுகளை விளக்கிக் கூறிவிட்டு, " நம் அனைவரையும் நீங்கள் கடவுள் போன்ற பிறவிகளின் ஆதிகர்த்தாவாக செய்துவிட முடியும்" என்று மாணுக்கர்களைப் பார்த்துக் கூறினுர்.

பிரபஞ்சத்தின் சக்திகளையெல்லாம் மனிதன் தன் வசமாக்கிக் கொண்டு கடவுளுக்குச் சமமாக ஆகப் பார்க்கிருனு? லூஸிபர்-ப்ரொமீதியஸின் மகத்தான நாடகம் திரும்ப நடிக்கப்படுகிறது. ஆனுல் இன்னும் அதிகமாகத் துன்புறுத்தும் வகையில் நடிக்கப்படுகிறது. நிலைமை இன்னமும் மோசமாக உள்ளது. நாகரிகம் தன்னைத்தானே அழித்துக் கொள்ளும் எல்லையில் விஞ்ஞானம் வட்டமிட்டுக் கொண்டிருக்கிறது.

1945 ஜுலை 16-ம் தேதியன்று நியூமெக்ஸிகோவில் முதல் அணுகுண்டு வெடித்து சூரியனைவிடப் பிரகாசமான ஒளியை வானில் வீசியது. இது, உண்மையிலேயே அளவில்லாத சக்திக் களஞ்சியத்தையும், அதேபோல் பிரம்மாண்டமான நாச சக்தியையும் மடை திறந்து விட்டது. இப்பொழுது அமெரிக்காவிடம் ஆயிரக்கணக்கான அணுகுண்டுகளும் ரஷியாவிடம் நூற்றுக்கணக்கான அணுகுண்டுகளும் இருப்பதாக மதிப்பிடப்படுகிறது.

ஆனுல் இதன் "முன்னேற்றம்" இதோடு நின்றுவிடவில்லை. 1952, நவம்பர் 1-ம் தேதி எனிவெட்டாக்கில் ஒரு தீவில் முதல் ஹைட்ரஜன் குண்டு (ஜல வாயு குண்டு) வெடிக்கப்பட்டது. அரை மைல் அகலமும் மூன்று மைல் நீளமும் இருந்த அந்தத் தீவு, குண்டு வெடித்த பின் இருந்த இடமே தெரியாமற் போய்விட்டது. அதற்குப் பதிலாக 1 மைல் அகலமும், 175 அடி ஆழமும் உள்ள ஒரு பள்ளம் அங்கு ஏற்பட்டிருந்தது.

1954-ம் வருஷ இலை யுதிர் காலத்தில் இதைவிட பிரம்மாண்டமான ஒரு குண்டு வெடிக்கப்பட்டது. இது சுமார் ஒண்ணரை கோடி டன் வெடி மருந்தை வெடித்ததற்குச் சமமாக இருந்தது. இது, ஹிரோஷிமாவில் வீசப்பட்ட அணுகுண்டைப்போல் ஆயிரம் மடங்கு அதிக சக்தி வாய்ந்ததாகும். இரண்டாவது உலக யுத்தத்தில் பிரிட்டிஷ் விமானப் படைகளும் அமெரிக்க விமானப் படைகளும் ஐரோப்பாவின்மீது வீசிய எல்லா குண்டுகளையும் சேர்த்தால்கூட இதற்குச் சமமாக ஆகாது. உலகத்தில் உள்ள எந்த மாநகரத்தையும் இத்தகைய ஒரே குண்டு அழித்துவிட முடியும்.

இருந்தாலும் விஞ்ஞானம் ஓய்வின்றி முன்னேறிக் கொண்டேயிருக்கிறது. ஏற்கெனவே சிருஷ்டித்தவை பற்றிக் கவலைப் படாமல் அது இன்னும் பயங்கரமான கோபால்ட் குண்டைக் கண்டு பிடிப்பதில் முனைந்திருக்கிறது. இந்த ஆயுதம் ஏற்படுத்தக்கூடிய விளைவுகளை அணு சக்தி விஞ்ஞானி ஒருவர் கீழ்க் கண்டவாறு விவரித்தார். "கலிபோர்னியாவிலிருந்து மேற்கே 1000 மைலில் ஹைட்ரஜன், கோபால்ட் குண்டுகள் வெடிக்கப்பட்டால் அதிலிருந்து எழும் கதிரியக்கத் தூள் சுமார் ஒரு நாளில் கலிபோர்னியா வந்து சேரும். 4 அல்லது 5 நாளில் நியூயார்க்கை அடையும். அது வரும் வழியில் உள்ள பெரும்பாலான உயிர்களை அது கொன்று கொண்டே வரும். இதேபோல் பிரேக் தீர்க்க ரேகைப் பகுதியில் பல குண்டுகள் வெடிக்கப்பட்டால் லெனின்கிராடிலிருந்து ஓடெஸ்ஸா வரை 1500 மைல் அகலமும், பிரேகிலிருந்து யூரல் மலை வரை 3000 மைல் நீளமும் உள்ள பிரதேசத்தில் வாழும் எல்லா உயிர்களும் அழிந்துவிடும்."

1950-ம் வருஷத்திலேயே ஐன்ஸ்டின் சொன்னதைக் கவனியுங்கள். "இது வெற்றி பெற்றால் காற்றில் கதிரியக்க விஷத்தைக் கலந்து எந்த உயிரை

யும் அழிப்பது அனுபவ சாத்தியமாகி விடும்" என்றார் அவர்.

ஆகையால் இதன் முடிவு இதுதான்: மூன்றாவது உலக யுத்தம் மூளும் பக்ஷத்தில், அதனால் ஏற்படும் நாசம், இரண்டாவது உலக யுத்தத்தை ஒரு குழந்தையின் விளையாட்டுப்போல் தோன்றும்படிச் செய்து விடும். முதல் ஹைட்ரஜன் குண்டு வெடிக்கப்பட்டவுடன் அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் கூறினார். "மனிதன் ஒரே அடியில் லக்ஷக்கணக்கான உயிர்களை அழிக்கக் கூடியதாக இருக்கும் அடுத்த யுத்தம். உலகத்தின் மாநகரங்களை அழித்து, கடந்த காலக் கலாசாரங்களை நாசமாக்கி, நூற்றுக் கணக்கான தலைமுறைகளாகக் கஷ்டப்பட்டு உருவாக்கியுள்ள நாகரிகத்தின் அமைப்பையே அழித்துவிட முடியும்" என்று அவர் சொன்னார்.

விஞ்ஞான முன்னேற்றத்தின் சாதனைகளால் நம் நாகரிகம் தன்னைத் தானே அழித்துக்கொள்ளுமென்பது இனி வெறும் ஏட்டுச் சுரைக்காய் வேதாந்தமன்று. இனி இது நம்முடனேயே இருக்கக் கூடிய பிரத்தியட்ச நிலை. இதை அழிக்க நாம் காலா காலத்தில் நடவடிக்கை எடுக்கவில்லையானால் அது நம்மை அழித்துவிடும்.

ஆகையால், அறிவின் தீவிர இயக்கத்தில் ஏற்பட்டுள்ள நிலைமை பற்றி இருபதாம் நூற்றாண்டில் மக்கள் திருப்தி அடையாமல் இருப்பதிலும், நம் காலப் பிரச்னைகளுக்கு அறிவு கூறும் பரிகாரங்களில் நம்பிக்கை இழந்து விட்டதிலும் என்ன ஆச்சரியம்? பகுத்தறிவு சகாப்தம் மறைந்து வருகிறது. நூறு வருஷத்திற்கு அதிகமாக பகுத்தறிவு ஆதிக்கம் செலுத்தியது. இக்காலத்தில் பெரிதும் முன்னேற்றம் ஏற்பட்டது. ஆனால் அதே அளவுக்குத் தீங்கும் ஏற்பட்டது. அதன் ஆட்சி அடியோடு முடிந்துவிடவில்லை; ஆனால் அது

இனிப் பூரண சுதந்திரத்துடன் இயங்க முடியாது.

இதனுல் நாகரிகத்திற்கு லாபமா நஷ்டமா என்பது, இதன் ஸ்தானத்திற்கு என்ன வருகிறது என்பதைப் பொறுத்திருக்கிறது.

வேறு விஷயங்களில் மதிப்புக் கொடுத்து அவற்றில் தஞ்சம் புக நினைக்கும் மக்கள், பகுத்தறிவு விஷயங்களிலிருந்து பகுத்தறிவுக்கு ஒவ்வாத விஷயங்களின் பக்கம் திரும்புகின்றனர். பொதுப்படையாகச் சொல்வதென்ருல் பகுத்தறிவிலிருந்து திரும்பும் இந்தப் போக்கை மதம், கலை, விஞ்ஞானம், அரசியல் முதலியவற்றில் காணலாம். இது பகுத்தறிவைவிட உயர்ந்த விஷயங்களின் மூலமோ, தாழ்ந்த விஷயங்களின் மூலமோ பிரச்னைகளுக்குப் பரிகாரம் தேட முயற்சிக்கிறது.

அது மேல் நோக்கிச் செல்லும் பொழுது மதம், வேதாந்தம், புராணம் முதலியவற்றில் பரிகாரம் தேடுகிறது. பல நாடுகளில் மத விஷயங்களில் மீண்டும் அக்கரை ஏற்படுவதைக் காண்கிருேம். அமெரிக்காவில் ஏதாவது ஒரு மாதா கோயிலுடன் இணைப்புக் கொண்டுள்ள ஜனத்தொகையின் சத விகிதம் சென்ற பத்து வருஷங்களில் 49-லிருந்து 60 ஆக உயர்ந்தது. மேற்கத்தி நாடுகள் பலவற்றில் ''ஆக்ஸ்போர்டு கோஷ்டி'' ''தார்மீக புனருத்தாரணம்'' முதலிய இயக்கங்களின் வெற்றி, பகுத்தறிவில் ஏற்பட்டுள்ள ஏமாற்றத்தையும் ஆத்மீக தாகத்தையுமே காட்டுகின்றன.

மதத்தில், நம் காலத்தில் ஏற்பட்டுள்ள முக்கிய மாறுதல், புது வைதிகமாகும். மனித வாழ்வுபற்றிய அடிப்படைப் பிரச்னைகளை நம்பிக்கையின் மூலம்தான் தீர்க்க முடியுமேயன்றி பகுத்தறிவினுல் தீர்க்க முடியாதென்று அது கூறுகிறது. இது ஐரோப்பாவில் கார்ல் பார்த்தினுலும் எமில் ப்ரின்னராலும் ஆரம்பிக்கப்பட்டு, இந்த நூற்ருண்டின் மத்தியப் பகுதியில் பிரிட்டனி

லும் அமெரிக்காவிலும் பலத்த ஆதரவு பெற்றுள்ளது. இது இன்னமும் அதிக பலம் பெற்று வருவதாகத் தோன்றுகிறது.

பகுத்தறிவிலிருந்து மனம் பிரிந்து செல்கிறது என்பதற்கு மற்றொரு உதாரணம், பொது ஜன ஆதர வுக்குப் போட்டி போடும் கொள்கைகளும் "இஸம்"களு மாகும்.

பகுத்தறிவுக்கு ஒவ்வாத விஷயங்களை ஆதரிக்கும் மனப்பான்மை "இரண்டாவது மத நம்பிக்கை"யிலோ, அல்லது "பொது மத"த்திலோ போய் முடிந்தால் ஆச்ச ரியப் படுவதற்கில்லை. பிராடஸ்டெண்ட் மாதா கோயில் களில் பல வருஷங்களாகவே விஸ்தரிப்பு இயக்கம் நடந்து வருகிறது. ரோமன் கத்தோலிக்கர்களுக்கும் பிராடஸ்டெண்டுகளுக்குமிடையில ஒரு காலத்தில் இருந்த கொடிய விரோதம் தணிந்து ஒத்துழைப்பு அதி கரித்து வருகிறது. டாய்ன்பி எடின்பரோவில் ஒரு கூட்டத்தில் பேசுகையில், "பத்தொன்பதாம் நூற்றாண் டில் மேற்கத்தி நாடுகளில் மதத்தின் ஸ்தானத்தைத் தொழில் நுட்பம் ஏற்றது; 21-ம் நூற்றாண்டில் இது தலைகீழாக மாறி, தொழில் நுட்பத்திலிருந்து மனித ஜாதி மதத்திற்கு திரும்பும்" என்று கூறினார்.

கலையில் பகுத்தறிவிலிருந்தும் பிரத்தியக்ஷ நிலை மையிலிருந்தும் மனம் பிரிந்து போகிறது என்பது முதல் உலக யுத்தத்திற்குப்பின் தோன்றியுள்ள விசித் திர பாணிகளிலிருந்து தெரியும்.

விஞ்ஞானத்திலும் இதே போக்குக் காணப்படு கிறது. ஒரு காலத்தில் மதத்தை எதிர்த்த விஞ்ஞானம் இப்பொழுது பிரபஞ்சத்திற்கும், மனிதனுக்கும் வேதாந்த விளக்கம் கொடுக்க முயற்சிக்கிறது. இதே போல் வைத்திய சாஸ்திரமும், நோய்களில் மூன்றில் இரண்டு பங்கு மனப் போராட்டங்களின் விளைவென் றும், உடலைப் பற்றிய நோய்களல்ல வென்றும் கூறு

கிறது.

ஒரு சமூகத்தை வெறும் பகுத்தறிவினுல் மட்டும் ஆளமுடியாதென்பது அரசியலில்கூட அதிகமாகத் தெரியத் தொடங்கியுள்ளது. இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பின் பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி முதலிய நாடுகளிலும் மற்றுமுள்ள ஐரோப்பிய நாடு களிலும் நடு நிலைமையில் உள்ள ஜனநாயக கிறிஸ்த வக் கட்சிகள் பதவிக்கு வந்திருப்பது இதற்கு ஓர் அத்தாட்சி.

கீழ் நோக்கிச் செல்லும் மற்ருெரு போக்கை, மனி தனைவிட எல்லா உயர்ந்த சக்திகளையும் மறுத்து, முற் றிலும் உலகாயதத் தன்மை வாய்ந்த விஷயங்களைப் போற்றுவதில் காணலாம். பிறகு இது வீர பக்தியாக ஆகக் கூடும். நாம் ஏற்கெனவே விவரித்தபடி சர்வாதி காரிகளும் ராணுவத் தலைவர்களும் கடவுள்போல் போற்றப்படுவார்கள். அரசியல் வெறியிலும் அரசாங்க பக்தியிலும்கூட இதைக் காணலாம். முதல் உலக யுத்தத்திற்குப்பின் இவை மேற்கத்தி உலகத்தில் ஆதிக்கம் செலுத்தின. இன்னமும் இவை மறைந்து விடவில்லை. சரித்திரீய உலகாயதம் போன்ற உலகா யதத்திலோ பிழைப்பே எல்லாவற்றையும் விட உயர்ந்த புருஷார்த்தமென்று கருதும் "வயிற்றுப் பிழைப்பு" சித்தாந்தத்திலோ இது முடிவடையலாம், அல்லது சௌக்கியம், அதிகாரம், உணர்ச்சிகளைத் திருப்திப் படுத்துவது என்ற மோட்டார் உலகாயதத் தத்துவ மாக உருவெடுக்கலாம்.

மேற்கத்தி நாகரிகத்தின் ஆத்மீக வளர்ச்சியுடன் சமூகத்தின் தார்மீக நிலையும் உயர்ந்தது. ஆத்மீக, சமூக வாழ்வில் மதம் ஆதிக்கம் செலுத்திய வரையில், தார்மீகக் கோட்பாடுகள் அதன் ஒரு பகுதியாக இருந் தன. இவை விவாதத்திற்கு உட்படாத, பூரணத்து வம் வாய்ந்த தெய்வீகக் கோட்பாடுகளாக விளங்கின.

மனித மனம் விடுதலை பெற்று, ஆத்மீக, சமூக வாழ்வு மதச் சார்பற்றதாக ஆன பின், தார்மீகக் கோட்பாடு கள் தவிர்க்க முடியாத வகையில் தெய்வீகத் தன் மையை இழந்து, சமூகத்தின் நலனுக்காக மனிதனுல் வகுக்கப்பட்ட வெறும் விதிகளாக ஆகிவிட்டன. கடையில் இவற்றின் மதிப்பைப் பற்றியே சந்தேகம் வந்து விட்டது.

சென்ற நூற்ருண்டின் மத்தியிலிருந்து இரு பலத்த சக்திகள் இதன் வளர்ச்சியைத் துரிதப்படுத் தின. ஒன்று சரித்திரீய உலகாயதம். சமூகத்தில் ஏற் பட்ட எல்லா மாறுதல்களுக்கும் பொருளாதாரமே காரணமென்று இது வற்புறுத்தியது; பொருளாதாரக் காரணங்களுக்காக அவை தார்மீகக் கோட்பாடுகளை இழந்து விட்டன. இதைப் போலவே இரண்டாவது பிராய்டிக் மனோ தத்துவ சாஸ்திரம், காம உணர்ச்சியே எல்லாவற்றிற்கும் அடிப்படை யானதென்று கூறி அதன் விளைவாக தார்மீகக் கோட்பாடுகளை இழந்தது.

முதல் உலக யுத்தம் மூண்ட காலத்தில் பரவி யிருந்த இந்தக் கருத்துக்களை உலக யுத்தங்களால் ஏற் பட்ட குழப்பம் அதுவரை இருந்து வந்த சமூகக் கோட் பாடுகளையும், குடும்ப பந்தத்தையும் தளர்த்திவிட்டது.

இவற்றின் விளைவாகப் பழைய கால சம்பிரதாயங் கள் தளர்ந்து அவற்றிற்குப்பதிலாக பயன் நோக்கமும், தனிப்பட்டவர் தீர்ப்பும் தளர்ச்சியாக முடிச்சுப் போடப் பட்ட சமூகம் ஏற்பட்டது. முன்பு சமூக விஷயத்தில் தனி நபருக்குக் கடுமையான கடமைகள் இருந்தன. பின்னர் இவை மறைந்து உரிமைகளும் கோரிக்கை களும் உருவெடுத்தன. பதின் பெரும் கோட்பாடுகளி லிருந்து மனித உரிமைப் பிரகடனமாக இது மாறுத லடைந்தது. கடமைகளிலிருந்து உரிமைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கும் இந்த மாறுதல் தற்செயலாக ஏற்பட்டதல்ல. வாழ்க்கையிலிருந்து எவ்வளவு பெற

முடியுமோ அவ்வளவையும் அனுபவிக்க வேண்டு மென்று தற்காலத்தில் தாண்டவமாடும் கருத்தின் இயற்கையான விளைவே இது.

ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு பாணி ஏற் படுவது ஜீவனுள்ள நாகரிகத்தின் அடையாளங்களில் ஒன்று. எல்லாக் கலை வடிவங்களிலும் இது ஊடுருவி நிற்கும். மேற்கத்தி நாகரிகத்தில் இத்தகைய பாணி கள் அடுத்தடுத்து வந்திருக்கின்றன. பதினெட்டாம் நூற்றுண்டில்தான் கடைசியாக ஒரு தனி பாணி ஏற் பட்டதாகவும், பத்தொன்பதாம் நூற்றுண்டில் அதன் சாயலே இருந்ததாகவும் பல பாணிகள் காப்பி அடிக் கப்பட்டதாகவும், பல பாணிகளின் கலப்படமே இருந்த தாகவும் ஹூய்ஸிங்கா கூறுகிருர். இது உண்மை யென்ருல் நம் நாகரிகம் தன் இறுதிக் கட்டத்தை அடைந்திருக்கிறது என்பதற்கு இது அடையாள மாகும். ஆனுல் இந்த முடிவு சரியா?

ஒவ்வொரு காலத்திலும் கட்டிடக் கலையே அந்தந் தக் காலத்தின் கலை வடிவங்களுக்கெல்லாம் பிரதி நிதித்துவம் வாய்ந்ததாகக் கருதப்பட்டு வந்திருக் கிறது. அன்ருட வாழ்க்கையுடன் நெருங்கிப் பிணைக் கப்பட்டது இந்தக் கலைதான். சங்கீதம், இலக்கியம், ஓவியம், சிற்பம் முதலிய கலைகள் ஒரு சமுதாயத்தின் வாழ்க்கையினுலும் போராட்டங்களினுலும் பாதிக்கப் படுகின்றனவேயன்றி அவை அன்ருட வாழ்க்கையின் ஒரு பகுதியல்ல. அவை வாழ்க்கையின் இன்றியமை யாத அம்சங்களைச் சேர்ந்தவையல்ல. இவை ஆடம் பர பொழுது போக்கு விஷயங்களாகும்; ஆகையால் சுயேச்சையாக வாழ்கின்றன. ஆனுல் கட்டிடக் கலை ஞன், அன்ருட வாழ்க்கைக்கும் வேலைக்கும் தேவை யான வீடுகள், தொழிற்சாலைகள், காரியாலயங்கள், பள்ளிக்கூடங்கள், மாதா கோயில்கள் முதலியவற் றைக் கட்டவேண்டி யிருக்கிறது. ஆகையால் கட்டி

டக் கலையே அந்தக் காலத்தின் கலாசாரத்தைப் பிரதி பலிக்கும் உண்மையான பிரதிநிதியாகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் இருபதாம் நூற்றாண்டிலும் ஆரம்பப் பகுதியிலும் கட்டிடக் கலையில் தனி பாணி இல்லையென்று பொதுவாகக் கூறப்படுகிறது. இந்தக் காலத்தின் வடு உலகத்தின் எல்லா நகரங்களிலும் காணப்படுகிறது. மேற்கத்தி நாகரிகத்தில் தோன்றிய மகா செளந்தரிய நகரமாகிய பாரிஸ் கூட பழைய பாணிகளைக் காப்பி யடிப்பதிலிருந்து தப்பவில்லை. ஆனால் பாணியற்ற இந்த நிலைமை பத்தொன்பதாம் நூற்றாண்டு அல்லது இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்திலேயே இருந்ததென்பதைக் கூறவேண்டும். நம் நூற்றாண்டில் கட்டிடக் கலையில் மிகவும் சக்தி வாய்ந்த ஒரு புதிய பாணி பிறந்ததென்பது பத்தாம் அத்தியாயத்திலிருந்து தெரியும். ஆகையால் நம் காலத்தின் கலைகளின் நிலைபற்றி ஸ்பெங்லரும் ஹூய்ஸிங்காவும் மற்றவர்களும் கூறும் கண்டனம் நியாயமற்றது.

அளவுக்கு மீறி முற்றி விட்டதாக ஸோரோகின் கூறும் வர்ணனை கலைகளின் மற்ற வடிவங்களில் அதிகம் காணப்படுகின்றன. "எதற்கும் நகல் எடுக்கக் கூடிய தொழில் திறமையைக் காண்கிறோம். ஆனால் அதில் ஜீவன் இல்லாததால் எல்லா பாணிகளையும் அது சேர்த்துக் குழப்புகிறது. லட்சியம் போய் புலன் உணர்ச்சி உயர்ந்துள்ளது. கலை மண்ணில் வீழ்ந்து விட்டது. வாழ்க்கையின் எதிர் மறை, அழகின்மை, அவலம், பயங்கரம் முதலியவற்றைக் காப்பி யடிக்கிறது. அமைதியும் நிர்மலமும் போய்விட்டன. பழங் காலக் கலைகளில் பெண்கள் குறைவாகத்தான் தோன்றுவார்கள். ஆனால் இந்தக் கட்டத்தில் பெண்கள் தான் அதிக ஸ்தானம் வகிக்கின்றனர். இவர்கள் 'பிரத்தியட்சமாக'ச் சித்திரிக்கப்படுகின்றனர். புலனு

ணர்ச்சியையே பிரதானமாகக் கொண்ட லௌகீகம் தெளிவாகத் தெரிகிறது'' என்கிறுர் ஸோரோகின்.

இந்தப் போக்கு கலைகளில் மாத்திரமின்றி,பெருத்த அளவு மக்களின் பெருவாரியான பொழுது போக்குக் கேளிக்கைகளிலும், வர்த்தக கலையிலும் காணப்படுகிறது. ஆண்-பெண் உறவு விஷயம் மனித குலம் தோன்றிய பழங்காலத்தில் இருந்ததைவிட இப்பொழுது அதிக முக்கிய ஸ்தானம் வகிக்கிறதென்று கூற முடியாது. ஆனுல், ஆண்-பெண்ணுறவு விஷயம் முன்னைக் காட்டிலும் இப்பொழுது பகிரங்கமாகச் சித்திரிக்கப்படுகிறது என்பதுதான் நம் காலத்தில் கவனிக்கத் தக்க விஷயம். பெரிய நகரங்களில் எந்தப் பத்திரிகைக் கடையைப் பார்த்தாலும், எந்தப் பத்திரிகையின் சினிமா விளம்பரப் பக்கத்தைக் கண்டாலும் இது விளங்கும்.

சில ஐரோப்பிய நாடுகளில் இலக்கியம், நாடகம், சினிமா முதலியவை, மனத்தைத் திரிப்பது, மனோ தத்துவப் பிரச்னைகள், அசாதாரணமான ஆண்-பெண் உறவு இவற்றைச் சித்திரிப்பதில் திளைக்கின்றன என்பது மறுக்க முடியாதது.சமூகத்தின் மேம்பாட்டுக்காக இது செய்யப்பட்டாலும், அல்லது ஆபாசம்கூட கலையின்மேதை திருஷ்டியுடன் தீட்டப்பட்டாலும் இதனுல் பயனுண்டு என்று கூறலாம். ஆனுல் இவற்றின் சிருஷ்டி கர்த்தாக்கள் அனுவசியமாகக் குப்பையில் விழுந்து புரள்கின்றனரென்றே தோன்றுகிறது. சமூகத்தின் மனோ தத்துவம், காமம் முதலிய மாயையான அம்சங்கள் நம் காலக் ''கலைஞர்''களுக்கு அதிகக் கவர்ச்சியுள்ளதாகத் தோன்றுகிறது.

நம் காலத்திய ''சீர் கெட்ட கலையை'' நாஸிஸமும் பாஸிஸமும் தாக்கின. கலைகளின் இந்த விசித்திரப் போக்குகளின் மீது பொதுவாக இருந்துவரும் வெறுப்பை இவை பிரதிபலிக்கவில்லையென்ருல் இங்

தத் தாக்குதல்களுக்கு அவ்வளவு ஆதரவு இருந்திராது. ஆனால் நாஸிஸமும் பாஸிஸமும் செய்த தவறு என்னவென்றால், சீர் கெட்ட கலை எது, நல்ல கலை எது என்பதை முடிவு செய்து, கலை எப்படி இருக்க வேண்டுமென்பதை நிர்ணயிக்கும் நீதிபதியாக சர்க்காரைப் பிரகடனம் செய்ததுதான். இதற்குப் பரிகாரம் சர்க்கார் உத்தரவுகளல்ல; சமூகம் நல்ல நிலையில் இருப்பதுதான் இதற்கு வழி. சர்வாதிகார சிகிச்சை நோயை விட மோசமானது. ஏனென்றால் எல்லாக் கலைகளுக்கும் வேர் போன்ற மனத்தின் சிருஷ்டி சக்தியையே இது அழித்து விடுகிறது.

தற்காலக் கலைகளில் காணப்படும் சித்தாந்தங்களில் ("இஸம்"களில்) பல பலவீனங்கள் காணப்படுகின்றன. கலைகள் உன்னத நிலையில் இருந்த காலங்களில், இது போன்ற சித்தாந்தங்கள் இல்லையென்கிறார் ஹூய்ஸிங்கா. இது மொத்தமாக அடித்துத் தள்ளும் பேச்சாகும். பிரெஞ்சு ஓவியங்களில் காணப்படும் நுட்பங்களுக்கு முக்கியத்துவமில்லாமல் மொத்தமான ஓர் உணர்ச்சியை ஏற்படுத்தும் முறைக்கு உண்மைக் கலையின் அடைமொழிகளை உபயோகிக்க யாரும் மறுக்க மாட்டார்கள். ஆனால் இந்த நூற்றாண்டில் காணப்படும் பல சித்தாந்தங்கள் தற்காலிகமானவையே என்பதை மறுப்பது கஷ்டம்.

இரண்டாவது உலக யுத்தத்திற்குப்பின் சில ஐரோப்பிய நாடுகளில் வயிற்றுப் பிழைப்பு வாதத்திற்குக் கிடைத்த வெற்றி ஆத்மீகத் துறையின் விசித்திர போக்குக்கு ஓர் உதாரணம். இந்தப் பெயருடன் கூடிய சித்தாந்தத்தை நாம் இங்குக் குறிப்பிடவில்லை; அப்பெயருடன் கூடிய வெறியைப் பற்றியே குறிப்பிடுகிறோம். இந்தக் கருத்தில் பிறந்த எந்த நாடகத்தையாவது பார்க்கும் பொழுது, ஆத்மா, அல்லது சமூகம் சாமர்த்தியமாக அறுத்து ஆராயப்படுவது பிரமிப்பூட்

டும். ஆனால் திரை விழுந்தபின், நாடகாசிரியன் என்ன சொல்ல முயன்றானென்பது விளங்காமல் நாடகம் பார்த்தவர்கள் ஆச்சரியப்படுகின்றனர். கடைசியில், ஒன்றுமே இல்லை என்ற முடிவுக்குத்தான் வரவேண்டி யிருக்கும். நாடகம் அல்லது இலக்கியம் மனத்தைத் தொட வேண்டுமென்று எதிர்பார்க்கும் நீங்கள் பத்தாம் பசலி "பூர்ஷ்வா" என்றுதான் நாடக ஆசிரியர் பரிதாப கரமாக புன்முறுவலுடன் வர்ணிப்பார்.

இவ்வளவு குழப்பமான "சித்தாந்தம்" தோன்றிய தைக் காட்டிலும் அதற்குக் கிடைத்த வெற்றிதான் அதிக கவலை யூட்டுகிறது.

ஐரோப்பியக் கலைகளின் போக்கை வழக்கமாக நிர்ணயிப்பது பிரான்ஸ்தான். ஆனால் குறிப்பாக அங்குதான் யுத்தப் பிற்கால இலக்கியத்தில், பாணி உள்பட எல்லா சம்பிரதாய மதிப்புக்களையும் மறுக்கும் கோஷ்டி ஒன்று ஓரளவு ஆதிக்கம் செலுத்துகிறது. உடன்பாடான எந்த லக்ஷியத்தையும் இந்த கோஷ்டி நம்ப மறுக்கிறது. சமூகத்தையும், இப்பொழுது உள்ள அமைப்பையும், உண்மையையும்கூட இது எதிர்க்கிறது. நம் காலத்தில் காணப்படும் மற்றொரு விஷயம் என்னவென்றால், புதிதாக ஏதாவது தேடுபவர் கள் வேதாந்த மதிப்புக்களுக்குத் திரும்புகின்றனர்.

பழைமையை எதிர்ப்பது எப்பொழுதுமே வாழ்க் கையின் ஆரோக்கியமான அறிகுறியாக இருந்து வந் திருக்கிறது. கலைகளில் ஒரு புதிய வழி அல்லது பாணி தோன்றுவதற்கு இது அவசியமாகும். ஆனால் நம் காலத்தில், எதையும் நம்ப மறுத்து, எல்லா சம்பிர தாயங்களையும் மறுப்பதே புதிய கலையைச் சிருஷ்டிப்ப தற்குச் சமமென்று கருதப்படுகிறது. பேடித்தனமான சூன்ய வாத அபாயம் இதில் அடங்கி யிருக்கிறது. ஒரு லக்ஷியத்தை அடைவதற்குப் புரட்சியை ஒரு சாதனமாகக் கருதும் வரையில், தற்காலத்திய எதிர்

மறைப் போக்குக்கூட ஒரு புதிய பாணிக்கு வழி காட்டக் கூடுமென்று நம்ப நியாயமுண்டு.

பாணியோ விஷயமோ இல்லாத பகுதிகளில் மாத்திரம் கவனம் செலுத்துவது நம் கலாசாரத்தை ஒரு தலைப் பட்சமான முறையில் திரித்துக் கூறுவதாகும். நம் காலத்தில் எவ்வளவோ விஷயங்கள் உள்ளன என்பதில் சந்தேகமில்லை. கட்டிடக் கலையில் ஏற்பட்டுள்ள பதிய பாணியைப் பற்றிச் சொன்னோம். இதர கலைகளிலும் முக்கியமான ஆக்க வேலை நடந்திருக்கிறது என்பது, நம் காலத்திய ஆக்க சக்தியை ஆராயும்பொழுது தெரியும்.

பாணியற்ற நம் காலத்துடன் நெருங்கிய தொடர்புள்ள மற்றோர் அடையாளம் மதிப்புக்களின் குறைவாகும். உள்சக்தி குறைந்து விட்டதையே இதுவும் காட்டுகிறது. வெளித் தோற்றத்தை மாத்திரம் பாதுகாக்க முயற்சிக்கப் படுகிறது.

பணத்தின் மதிப்பு குறைக்கப்பட்டது. இந்த நோயின் வெளிப்படையான சின்னங்களில் ஒன்று, பிராங்க், மார்க், ரூபுள், ஸ்டர்லிங் எல்லா நாணயங்களின் மதிப்பும் வெகுவாகக் குறைந்து விட்டது.

பணத்தின் மதிப்பு குறைந்தது போலவே நம் சமூகத்தின் மற்றும் பல அம்சங்களிலும் மதிப்புக் குறைந்திருக்கிறது. சர்க்கார் அந்தஸ்துக்களும் பட்டங்களும் இதற்கு ஓர் உதாரணம். சில வருஷங்களுக்கு முன்னால், நீண்ட காலம் கடுமையான சேவை செய்த ஒரு சிலருக்குத்தான் "கர்னல்" என்பது போன்ற பட்டங்கள் வழங்கப்படும். ஆனால் இக் காலத்தில் எவ்வித அனுபவமுமில்லாத நூற்றுக் கணக்கானவர்கள் இவற்றிற்கு உரிமை கொண்டாடுகின்றனர். எல்லா நாடுகளிலும் உள்ள ஏராளமான ஜெனரல்கள், ஸ்தானீகர்கள், மிக மிக உயர்ந்த அதிகாரிகள் முதலியவர்களின் கூட்டம் காரணமாக இந்தப் பதவிகளின்

மதிப்பு மங்கி விடுவதில் ஆச்சரியமில்லை.

சர்க்கார் வேலைகள் விரிவடைந்திருப்பதைக் கணக்கில் எடுத்துக் கொண்டால்கூட, பதவிகளும் பட்டங்களும் அளவுக்கு மீறி அதிகரித்துள்ளன என்பது வெளிப்படையாகத் தெரியும். நாணயப் பெருக்கத்துக்கு தேவையான அளவு நாட்டின் செல்வம் கரன்ஸி நோட்டை மாத்திரம் அதிகமாக அச்சடித்து வெளியிடுவது போன்றதுதான் இதுவும்.

இதைப் போலவே, நம் காலத்தில் வார்த்தைகளும் நடையுடை பாவனைகளும்கூட மதிப்பிழந்து விட்டன. எந்தப் பத்திரிகையிலாவது சினிமா விளம்பரம் வரும் பக்கத்தை எடுத்துப் பாருங்கள். மிகைச் சொற்கள் அள்ளி வீசப்பட்டிருப்பதைக் காண்பீர்கள். அரச பட்டங்களும் இவற்றிலிருந்து தப்புவதில்லை. ஜனநாயகத்தினால் பெரும்பாலான நாடுகளில் முடியாட்சி அகற்றப்பட்டு விட்டது. ஆனால், அரச பதவி இல்லாமல் மனித ஜாதி இருக்க முடியாதென்று தோன்றுகிறது. இது எல்லோரும் அடையக் கூடிய ஒன்றாக இருக்கிறது. இதனால்தான் நாம் தமாஷா ராணிகளையும், பாம்பாட்டி ராணிகளையும், தீயணைக்கும் எஞ்சின் ராணிகளையும், சிகரெட் பீடி ராணிகளையும் காண்கிறோம்.

அறிமுகமாகி இரண்டு நாள் ஆகாதவர்களைக் கூட, கையைப் பற்றி, முதுகில் தட்டிக் கொடுப்பது பல நாடுகளில் சர்வ சகஜமாகி விட்டது. முன்பெல்லாம் வெகுநாள் நெருங்கிப் பழகிய நண்பர்கள் மட்டுமே இப்படிச் செய்வார்கள். ஒரு காலத்தில் வெகு நுட்பமான உணர்ச்சிகளை வெளியிட அபூர்வமாக உபயோகிக்கப்பட்ட "அன்பே" "ஆருயிரே" என்பன போன்ற சொற்கள் அமெரிக்காவில் இப்பொழுது சல்லிக் காசுகளாகி விட்டன. அடக்கமாக பேசுவதற்கு இங்கிலாந்தில் மட்டும்தான் மதிப்பு இருப்பதாகத்

தோன்றுகிறது. எல்லாம் மிகைப் படுத்திப் பேசப் படும் காலத்தில் நாம் வாழ்கிறோம். உள் மதிப்புக் குறைவே இதற்கும் காரணம்.

மேற்கத்தி நாகரிகத்தின் நிலைமையை ஆராய்ந்ததில் கீழ்க்கண்ட அம்சங்களைக் காண்கிறோம். அவை தேசீய சுதந்திரத்தின் கட்டுப்பாடும்; ராஜ்யங்களின் பெருக்கமும்; மேற்கத்தி நாகரிகத்தின் எல்லைச் சுருக்கம்; மகா யுத்தங்களும் போராட்டங்களும்; வர்க்க, இன, லக்ஷிய வேற்றுமைகளினால் சமூகப் பிளவுகள்; சமாதான வேட்கை; பாமர மக்களின் ஆதிபத்தியம்; வீர பக்தி; வர்த்தகப் பிரமுகர்களின் உயர்வு; பணத்தின் மதிப்புக் குறைவு; உலக நகரங்களின் வளர்ச்சி; ஜனன விகிதக் குறைவு (இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பின் ஜனன விகிதம் அதிகரித்துள்ளது); என்றும் அனுபவித்திராத ஒருவித நெருக்கடி உணர்ச்சி; பகுத்தறிவு வாதத்திலிருந்து வாபஸ்; விஞ்ஞானத்தின் கொந்தளிப்பு; நாகரிகம் தன்னைத்தானே அழித்துக்கொள்ளும் எல்லையை நெருங்குதல்; பகுத்தறிவுக்கு ஒவ்வாத மதிப்புக்களை நோக்கிச் செல்லுதல்; தார்மீகத் தரங்களின் தளர்ச்சி; பாணி உணர்ச்சியின்மை; ஆனால் சில துறைகளில் புதுப் பாணிகள் உதயம்; மதிப்புக்கள் குறைவு ஆகியவையாகும்.

மற்ற நாகரிகங்களில் இவையெல்லாம் ஏதாவது ஒரு கட்டத்தில் நிகழ்ந்திருக்கின்றன என்பது முதல் பாகத்திலிருந்து தெரியும். மூன்றாவது கட்டமாகிய முதிர்ச்சி கட்டம் முடிவடைந்து விட்டது என்பதை இவை காட்டுகின்றன. ஆனால் நம் நாகரிகம் கடைசி கட்டத்தை அடையவில்லை யென்பதும் இவற்றிலிருந்து தெரிகிறது.

இதே சமயத்தில் நம் நாகரிகத்திற்கு ஏற்பட்டுள்ள நெருக்கடி, இதன் பல சவால்களில் வெளியாகிறது. இதன் முக்கியத்துவத்தை முன்னிட்டு இதைத் தனி

யாக அடுத்த அத்தியாயத்தில் ஆராய்வோம்.

நம் நாகரிகம் இப்பொழுது, டாய்ன்பி வர்ணிக்கும் "கஷ்ட காலம்" என்ற கட்டத்தில் இருப்பதாகக் கருதப் படக் கூடும். மேலே குறிப்பிட்டப்பட்ட அறிகுறிகள், இறுதி கட்டம் நெருங்குகிறது என்பதைக் காட்டுபவை யென்ருலும், நம் நாகரிகத்தின் அஸ்தமனம் தவிர்க்க முடியாததென்பதை இவை அறிவிக்கின்றனவென்று கொள்ளவேண்டிய அவசியமில்லை.

கடைசி கட்டத்தின் மார்க்கம், கால அளவு,மதிப்பு ஆகியவை முன் கூட்டி நிர்ணயிக்கப்படவில்லை யென்று வற்புறுத்திக் கூறமுடியாது. இவை ஒருபுறம் நாகரிகங்களுக்கு ஏற்படும் சவால்களின் பலத் தையும், மறுபுறம் இது வெளியிடும் ஆக்க சக்தி யையும் பொறுத்திருக்கின்றன. ஆகையால் இந்த இரண்டையும் மதிப்பிடுவது அவசியம்.

## 10

### முக்கிய சவால்கள்

மேற்கத்தி நாகரிகம் ஒரு கட்டத்திலிருந்து மற் ருெரு கட்டத்திற்கு மாறும் நிலையில் உள்ளது என் பதைக் காட்டக்கூடிய பல அம்சங்களைச் சென்ற அத் தியாயத்தில் எடுத்துக் காட்டினேம். நம் நாகரிகத் திற்கு அபாயம் விளைவிக்கக் கூடிய குறைபாடுகளும் பலவீனங்களும் இவற்றுள் சிலவற்றில் அடங்கி யிருக் கின்றன. இவை தவிர, இந்த நாகரிகத்திற்கு ஏற்பட் டுள்ள மற்றும் பல அடிப்படையான சவால்கள் நிலை மையை இன்னமும் நெருக்கடியாக்குகின்றன. இவற் றைச் சமாளிக்காவிட்டால் இவை ஒவ்வொன்றுமே நம் நாகரிகத்தை அழித்துவிடக் கூடும். மேற்கத்தி உல கத்தின் தற்போதைய நிலைமைக்கு "நெருக்கடி" என்ற வார்த்தையை உபயோகித்தால் மிகையாகாது.

மேற்கத்தி நாகரிகத்தை அழிக்கக்கூடிய நிலை யென்று முன் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டது. அதாவது, விஞ்ஞான சாதனைகளினால் தன்னைத் தானே அழித்துக் கொள்ளும் அபாயம். இதற்குமுன் என்றும் ஏற்பட்டிராத சவால் இது. ஒரு துறையில் மாத்திரம் அளவுக்கு மீறிய கவனம் செலுத்தி, மற்ற வற்றிற்குச் சக்தி இல்லாததால் இதற்கு முன் நாகரிகங் கள் அழிந்திருக்கின்றன. ஆனால் எந்த நாகரிகமும் தன் சாதனைகளின் மூலமே அடியோடு அழிந்ததில்லை.

இது தவிர மற்றும் மூன்று அடிப்படையான அபா யங்கள் உள்ளன. நம் நாகரிகம் கடைசி கட்டத்தை நெருங்குகிறது என்ற கருத்தை இவை ஊர்ஜிதம் செய்ய முயற்சிக்கின்றன.

முதல் அபாயம், கி. மு. 5-ம் நூற்றாண்டில் கிரீ ஸுக்கு ஏற்பட்டது போன்ற உள் பலவீனம். இதற்கு ஐரோப்பாவில் ஒற்றுமை இல்லாதது காரணம்.

இரண்டாவது வெளியிலிருந்து வரும் அபாயம். மேற்கத்தி நாகரிகத்தின் ஆதிக்கத்திலிருந்து விடு பட்ட வெளி நாடுகளின் விரோதத்தினால் ஏற்படக் கூடியது. முன்னர் அடிமைத் தனத்தில் இருந்த மக்கள் மேற்கு நாடுகளுக்கெதிராகக் கொள்ளும் விரோத மனப்பான்மையே இது.

மூன்றாவது அபாயம் நம் சமூகத்திலிருந்து தோன் றிய சக்தியிலிருந்தே வருகிறது. அகப் பாட்டாளி களுடன் இதை ஒப்பிடலாம். ஆனால் தற்சமயம் இந்த சக்தி மேற்கத்தி சமூகத்திற்குள் இருப்பதைவிட வெளியே அதிக பலமாக வேலை செய்கிறது. இது சோவியத் முறைகளுடனும் நலன்களுடனும் ஐக்கிய மாகி விட்டது. இதன் பெயர் கம்யூனிஸம்.

ரஷியக் கம்யூனிஸமும், மேற்கத்தி நாடுகளுக்கு விரோதமான தேசீய உணர்ச்சியும் மேலை நாடுகளுக்கு வெளியே இயங்கும் சக்திகளாகும். மேற்கத்தி நாடு

களின் உலக ஆதிக்கத்தையும் அவற்றின் தலைமையையும் இந்த சக்திகள் எதிர்க்கின்றன. டாய்ன்பியின் வாக்குப்படி இந்த இரண்டையுமே "புறப் பாட்டாளி" சக்திகள் என்று கூறலாம். தங்கள் முன்னேற்றத்தை மேற்கத்தி நாடுகள் தடுப்பதாக இவை கருதுகின்றன. தங்கள் நாடுகள் ஏழைகளென்றும், மேற்கத்தி நாடுகள் பணக்கார நாடுகளென்றும் இவை நினைக்கின்றன.

இந்த சக்திகளுக்கிடையே இதுவரைதான் ஒற்றுமை உள்ளது; இவற்றின் எதிர்மறையான லக்ஷியம் தான் ஒன்ருக உள்ளது. உலகத்தில் மேற்கத்தி நாடுகளின் ஆதிக்கத்தை ஒழிக்க வேண்டுமென்பது இவற்றின் நோக்கம். இந்த ஆதிக்கத்தை அவை ஏற்கெனவே ஒழித்துவிட்டன.

இந்த எதிர்மறை லக்ஷிய ஒற்றுமைகூடத் தோற்றமே தவிர உண்மையல்ல. இந்த சக்திகளின் நோக்கத்தை ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தால் இவற்றிற்கிடையே உள்ள அடிப்படையான வேற்றுமை வெளியாகும். உண்மையில் இவை வெவ்வேறு விஷயங்களை எதிர்த்துப் போராடுகின்றன. கம்யூனிஸம் ஜனநாயகத்தின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடுகிறது; கிழக்கத்தி நாடுகள் மேற்கத்தி நாடுகளின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடுகின்றன.

இதனுல் இச் சக்திகளின் உட்ன்பாடான லக்ஷியங்களில், முரண்பாடு ஏற்படுகிறது. உலகப் பாட்டாளிப் புரட்சியை ஏற்படுத்தி, உலகம் முழுவதிலும் கம்யூனிஸ்ட் ஆட்சியை ஏற்படுத்துவது கம்யூனிஸத்தின் நோக்கம்; ஆனுல் பூரண சுதந்திரம் பெற்று மேலான வாழ்க்கையை அடையவேண்டு மென்பது மாஜி அடிமை நாடுகளின் நோக்கம். "ஆசியா ஆசியருக்கே" என்பது இவற்றின் கருத்து. "ஆசியா கம்யூனிஸ்டுகளுக்கே" என்பது கம்யூனிஸத்தின் நோக்கம்.

இதன் விளைவாக, மேற்கத்தி நாகரிகத்திற்கு இந்தச் சக்திகளால் ஏற்படும் அபாயத்தில் அடிப்படையான வித்தியாசம் ஏற்படுகிறது. ஜனநாயக அரசியல் பொருளாதார முறைகளின் அடிப்படையையே கம்யூனிஸம் தாக்குகிறது. அடிப்படை மதிப்புக்களையே இது தகர்த்தது. அவற்றின் ஸ்தானத்தில் தன் சொந்த அரசியல், பொருளாதார சித்தாந்தங்களை நிலைநாட்டுகிறது.

ஆனால் மேலை நாடுகளுக்கெதிரான தேசீய உணர்ச்சி, மேற்கத்தி ஆதிக்கத்தை உதறித் தள்ளுவதிலேயே இது வரை கவனம் செலுத்தி வந்திருக்கிறது. முன்பு வர்க்கங்களுக்கிடையே நிகழ்ந்த நிகழ்ச்சி இப்பொழுது இனங்களுக் கிடையே திரும்ப நடக்கிறது. மக்கள் சுயேச்சையாக இருக்க விரும்புகின்றனர்; தங்கள்மீது ஆதிக்கம் செலுத்துவோரை எதிர்க்கின்றனர். ஆனால் அதே சமயத்தில் இந்த தேசீய உணர்ச்சி, கம்யூனிஸத்திற்குப் பலியாகாத வரையில், நவீன ஜனநாயக முறையின் அரசியல், பொருளாதார அம்சங்கள் பலவற்றைப் பாதுகாத்து வந்திருக்கிறது. ஆசிய சமூகங்களும் மேற்கத்தி நாடுகளைச் சேராத மற்ற சமூகங்களும் பலமான ஒடுக்கம் உடையனவாக இருக்கின்றன என்பது உண்மையே. கலாசாரத் துறையில் விசேஷமாக இதைக் காணலாம். ஆனால் ஜனநாயகத்துடனும் கம்யூனிஸத்துடனும் போட்டி போடக்கூடிய மாற்றுமுறை எதையும் இவை உண்டாக்கவில்லை. இந்த நிலைமை நீடிக்கும் வரையில் இந்த இரண்டுக்கு மிடையிலேயே போராட்டம் நடந்து கொண்டிருக்கும். காலப் போக்கில் இந்த இரண்டில் ஏதாவது ஒன்றை ஆசியாவும் ஆப்பிரிக்காவும் ஏற்க வேண்டியிருக்கும்.

இந்த இரண்டு முறைகளும் அளிக்கும் மதிப்புக்களில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது, இந்த இரு அரசியல்

முறைகளுள் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதைவிட இன்னும் அடிப்படையான விஷயமாகும். ஆசிய தேசீயத்திற்கும் கம்யூனிஸத்திற்குமிடையில் மேலுக்குத் தோன்றும் ஒற்றுமையை கம்யூனிஸம் சாதுரியமாகப் பயன்படுத்திக்கொண் டிருக்கிறது. "வெள்ளைக்காரன் எவ்வளவு பணக்காரனுக இருக்கிருன் என்பதையும் நீங்கள் எவ்வளவு ஏழைகளாக இருக்கிறீர்கள் என்பதையும் பாருங்கள். உங்களைக் கொள்ளை யடித்துச் சம்பாதித்த பணம்தான் அவனுடையது. அவனைக் கொன்று, அவன் பணத்தையும், வீட்டையும், காரையும் எடுத்துக் கொள்ளுங்கள்; சௌக்கியமாக இருக்கலாம்" என்று, அரைப் பட்டினி கிடக்கும் ஜனங்களின் காதில் விஷமத்தனமாக உபதேசிப்பதைவிடச் சுலபமான காரியம் வேறில்லை.

கம்யூனிஸம் மிகவும் சக்தி வாய்ந்த முறையில் அனுஷ்டிக்கும் தந்திரம் இதுதான். "பணக்காரர்களின்" உயர்ந்த வாழ்க்கைத் தரத்திற்குக் காரணம் அவர்களுடைய உற்பத்தி முறையும், தொழிலாளரின் உற்பத்தி சக்தியும்தானென்பது ஏழை ஜனங்களுக்குப் புரிவதில்லை. ஒளி வீசும் கார்களையும் நீல நிற நீச்சல் குளங்களையும்தான் அவர்கள் பார்க்கின்றனர். இவற்றை உண்டாக்குவதற்குப் பல தலைமுறை மக்கள் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உடலினுலும் அறிவினுலும் உழைத்த உழைப்பு இவர்களுக்குத் தெரிவதில்லை. முந்தியவற்றை இவர்கள் இப்பொழுதே அடைய விரும்புகின்றனர்; ஸ்தான மாறுதலினுல் இதை அடைந்துவிட முடியுமென்று நினைக்கின்றனர்.

விஷம உபதேசத்தின்படி நடந்த பிறகுதான், பணக்காரனைக் கொன்றபொழுது அவனுடன் சேர்த்து செல்வத்தின் ரகசியத்தையும் கொன்றுவிட்டோமென்பதை இவர்கள் உணர்கின்றனர். ஏழைகள் உயர்வதற்கு வழி பணம் படைத்தவர்களைக் கொல்வதல்ல;

அவர்களுடைய செல்வத்தின் ரகசியத்தை அறிந்து அதைத் தங்கள் நிலைமைக்கேற்றபடிப் பிரயோகித்துக் கொள்வதுதான். இந்தக் கருத்து மிக மிக நிதான மாகத்தான் மனத்தில் புகும். இதற்கு அளவற்ற பொறுமை வேண்டும். மேற்கத்தி நாடுகள் இந்த உண்மையைக் கிழக்கத்தி நாடுகளுக்கு உணர்த்தி, தங்கள் முறைகளைக் கிழக்கத்தி நாடுகள் கற்றுத் தேற உதவி செய்வதற்குத் தாங்கள் தயாராக இருக் கின்றன என்ற நம்பிக்கையை ஏற்படுத்திஞல்தான் கிழக்கத்தி நாடுகள் இந்த முறைகளை ஏற்கச் சந்தர்ப்ப மிருக்கிறது. இப்படிச் செய்தால், அபிவிருத்தியடை யாத நாடுகள், மேலை நாடுகளுக்கெதிரான தங்கள் தற்போதைய குரோத மனப்பான்மையை விடும். இதற்கு மேற்கத்தி நாகரிகம், மதத்தின் மதிப்பும் மனித சுதந்திரமும் மேலை நாடுகளுக்கும் கிழக்கத்தி நாடுகளுக்கும் சமமாகப் பொருந்துமென்பதை மேலும் நிரூபிக்க வேண்டும்.

மேற்கத்தி நாகரிகத்திற்கும், புதிய தேசங்களின் தேசீயத்திற்குமிடையில் தற்சமயம் காணப்படும் வேற் றுமை உணர்ச்சியிஞல் ஏற்பட்டதேயன்றி அடிப் படைத் தன்மை வாய்ந்ததல்ல. உண்மையில் இவற் றின் அடிப்படை மதிப்புக்களில் ஒற்றுமை இருக் கிறது. மனித சுதந்திரத்தில் ஆர்வம், கடவுள் நம் பிக்கை முதலியவை இதற்கு உதாரணங்களாகும். மற்ருேர் உதாரணமும் கவனிக்கத் தக்கது. இந்தோ னேஷியாவின் பஞ்ச சீல லட்சியங்களும் மேற்கத்தி ஜனநாயகத்தின் கடவுளின் சர்வ வல்லமை, மனிதத் தன்மை, தேசீயம், ஜனநாயகம், சமூக நீதி ஆகிய கருத்துக்களும் ஒன்றே. மேற்கத்தி நாடுகளில் கடந்த நூற்ருண்டில் இருந்த தேசீயத்தின் வேகம்தான் குறைந்து வருகிறது. அதைப்போலவே இந்த தேசீய உணர்ச்சியின் வேகம் புதிய நாடுகளில் இன்னமும்

இருந்து வருகிறது.

இந்த லட்சிய ஒற்றுமைகளினால் சேர்ந்துவாழ்வது சாத்தியமாவதுடன், பொது லட்சியத்தை அடைய அவசியமான ஒத்துழைப்பும் சாத்தியமாகிறது.

இதற்கு மாறாக, புதிதாகச் சுதந்திரம் பெற்ற தேசங்களின் லட்சியங்களுக்கும் கம்யூனிஸத்திற்கு மிடையில் அடிப்படையான வேற்றுமை இருக்கிறது. இவற்றின் எதிர்மறை லட்சியத்தில் காணப்படும் ஒற்றுமை வெறும் தோற்றமேயன்றி உண்மையான தல்ல என்பதை ஏற்கெனவே கண்டோம். உடன் பாடான முறையில் உள்ள இவற்றின் லட்சியங்கள் வெவ்வேறு என்பது மாத்திரமின்றி, ஒன்றுக்கொன்று நேர் விரோதமானவையுமாகும். புதிதாகச் சுதந்திரம் பெற்ற நாடுகள் லண்டனிலிருந்தோ, பாரிஸிலிருந்தோ, ஹேகிலிருந்தோ, வாஷிங்டனிலிருந்தோ ஆளப்பட விரும்பவில்லை. இதுவரை அவற்றிற்குக் கம்யூனிஸம் உதவியாக இருக்கிறது. ஆனால் அவை எந்த நாட்டின் ஆதிக்கத்தின் கீழும் இருக்க விரும்பவில்லை. இங்கு தான் கம்யூனிஸத்திற்கும் இந்த நாடுகளுக்குமிடை யில் வேற்றுமை ஏற்படுகிறது. பழைய ஏகாதிபத்திய நாடுகளின் பிடியைக் காட்டிலும் பலமான பிடியுடன் இந்த நாடுகளின்மீது மாஸ்கோ அல்லது பீகிங் ஆட் சியை நிலைநாட்ட கம்யூனிஸம் முற்பட்டிருக்கிறது. இவ்விதம் கம்யூனிஸம் பழைய ஏகாதிபத்தியத்திற்கு பதில் புது ஏகாதிபத்தியமாக அமைகிறது. ஆனால் பழைய ஏகாதிபத்தியத்தைவிட இது இன்னும் பயங் கரமானது.

புதிதாகச் சுதந்திரம் பெற்ற நாடுகள் இதை உண ராததற்கு ஒரே ஒரு காரணம்தான் சொல்லலாம். நாம் அனுபவிக்காத விஷயம் தெளிவாக விளங்குவதில்லை. மத நம்பிக்கையைச் சகியாத ஓர் ஆட்சியின்கீழ் வாழ் வது எப்படி இருக்கும் என்பதைப் புரிந்து கொள்வது

கஷ்டம்.

ஆகையால் அரசியல், பொருளாதார முறைகளில் மாத்திரமின்றி, எதிர்கால க்ஷேமத்திற்குக் கம்யூனிஸம் ஒன்றுதான் வழி என்ற நம்பிக்கையை ஏற்படுத்தும். இன்னும் அபாயகரமான முறையிலும் ஆசிய, ஆப்பிரிக்க மக்களைக் கம்யூனிஸம் தன் கட்சிக்கு இழுத்துக் கொள்ளக்கூடிய உண்மையான அபாயம் இருக்கிறது. இது, மேற்கத்தி நாகரிகத்திற்கு இதுவரை கண்டிராத பிரம்மாண்டமான அபாயமாகும். இந்த புறப் பாட்டாளிகள், கம்யூனிஸ்டுகளின் தலைமையில், மேற்கத்தி நாடுகளுக்குள்ளேயே உள்ள அகப் பாட்டாளிகளுடன் சேர்ந்து கொள்வார்கள். உலகத்தில் இதற்குமுன் வேறு எந்த நாகரிகத்திற்கும் உள்ளே இருந்தும் வெளியிலிருந்தும் இவ்வளவு பெரிய அபாயம் ஏற்பட்டதில்லை.

மேற்கத்தி நாகரிகத்தின் நெருக்கடி மேலே கூறப்பட்டதுபோல் வெளியிலிருந்து மாத்திரமின்றி, உள்ளிருந்தும் வருகிறது. அரசியல், பொருளாதார, ராணுவத் துறைகளில் ஐரோப்பிய நாடுகளின் முக்கியத்துவம் குறைந்திருப்பதற்குக் காரணம், இவற்றிற்கிடையே ஒற்றுமை யின்மை தான் என்பது ஆராய்ந்து பார்த்தால் விளங்கும். இந்த நூற்றாண்டின் ஆரம்ப முதல் ஐரோப்பிய நாடுகளுக்குள் நடந்த யுத்தங்கள், ஐரோப்பாவைத் தற்காலிகமாக பலமிழக்கச் செய்துவிட்டன. ஐரோப்பாவின் ராணுவ, பொருளாதார, அரசியல் முக்கியத்துவங்களை இந்த யுத்தங்கள் அடியோடு குறைத்து விடவில்லை யென்றாலும், ஐரோப்பாவைச் சுற்றிலும் பெரிய நாடுகள் உருவானதால், ஐரோப்பாவின் முக்கியத்துவம் குறையவே செய்துள்ளது.

ரஷியாவைத் தவிர, மற்ற ஐரோப்பிய நாடுகள் மிகவும் சிறுத்து விட்டன. முன்போல் வல்லரசுகளாக இருக்கமுடியாதவை யாகிவிட்டன. அரசியல் அல்லது

பொருளாதார சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ளக் கூட இவற்றினுல் முடியாது. விஸ்தீரணத்திலும், ஜனத் தொகையிலும் பெரிதான ரஷியா,சீனு,இந்தியா, அமெரிக்கா போன்ற நாடுகள் வெகு காலமாகவே இருந்திருக்கின்றன. ஆயினும், ஐரோப்பிய நாடுகளின் தலைமை இவற்றினுல் பாதிக்கப் படவில்லை யென்றும் வாதிக்கலாம். தற்கால தொழில் நுட்ப அபிவிருத்தி, போக்குவரத்து சாதனங்கள், பிரசாரம், ஜனநாயக ஆட்சி ஆகியவற்றினுல் இந்த நாடுகள் உண்மை யிலேயே ஒன்றுபட்டு, தங்கள் அளவுக்கேற்றபடி பொருளாதாரத்தையும் பலத்தையும் இப்போதுதான் அபிவிருத்தி செய்துக் கொண்டன என்பதே இதற்குப் பதிலாகும்.

ஐரோப்பாவின் முக்கியத்துவம் குறைகிறதென் பது இதர உலகத்திற்கு அதன் பொருள் உற்பத்தி சக்திக் குறைவில்தான் தெளிவாகத் தெரிகிறது. தற் கால உலகில் அரசியல், பொருளாதாரம், ராணுவம் முத லிய எல்லா பலங்களும் முக்கியமாகப் பொருள் உற் பத்தி சக்தியையே நம்பியிருக்கின்றன. ஐரோப்பா வில் பொருள் உற்பத்தி செய்யும் இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, பெல்ஜியம், ஸ்வீடன் ஆகிய ஆறு நாடுகளும் சேர்ந்து, 1870-ம் வருஷத்தில், உலகில் உற்பத்தியான பொருள்களில் 61 சதவிகிதம் உற்பத்தி செய்தன. இந்த நாடுகளின் உற்பத்தி அளவு மேலும் உயர்ந்ததென்ருலும் 1936-38-ல் உலகத் தின் மொத்த பொருள் உற்பத்தியோடு ஒப்பிடும் போது இந்த நாடுகளின் உற்பத்தி 30 சத விகிதத்திற் கும் குறைவாகவே இருந்தது. இதே காலத்தில் அமெ ரிக்காவின் பொருள் உற்பத்தி 23·3 சத விகிதத்திலி ருந்து 32·2 சத விகிதமாக உயர்ந்தது. 1950—52-ல் இது மேலும் உயர்ந்து 40 சத விகிதமாயிற்று. ரஷி யாவின் பொருள் உற்பத்தி 1913 வரை 5·5 சத விகித

மாகவே இருந்தது. இது 1938-ல் 18·5 சத விகிதமாக உயர்ந்தது. இப்பொழுது இது இன்னமும் அதிகரித்துள்ளது. ஐரோப்பாவின் ஒரு பகுதியை இரும்புத் திரை மறைப்பதற்கு முன்பே இதன் முக்கியத்துவம் பாதியாகக் குறைந்து விட்டது என்ற உண்மையை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

ஐரோப்பா அல்லது மற்ற நாடுகளின் முன்னேற்றத்தைப் பற்றிப் புரட்சிக்காரர்கள் வருந்துவார்கள். ஐரோப்பா தன் முக்கியத்துவத்தைத் திரும்பப் பெற இது ஐக்கியமாவது ஒன்றுதான் வழி.

அறிவும் ஆற்றலும், இயற்கை வளமும், தொழில் திறமையும் பெற்றுள்ள 30 கோடி சுதந்திர ஐரோப்பியர்கள் முன்னைக் காட்டிலும் அதிக உற்பத்தி சக்தியைப் பெற முடியாதென்பதற்கு இயற்கையான காரணம் எதுவும் இல்லை. வேற்றுமைகள்தான் இதற்குக் குறுக்கே நிற்கின்றன. வேற்றுமைகளினால் ஏற்படும் அசௌகரியங்களைச் சமாளிக்க ஐரோப்பாவினால் முடியுமாவென்பது, பிரச்னையைப் புரிந்து கொள்ளவும், இதைத் தீர்ப்பதற்கு வேண்டிய தலைமையையும் உறுதியையும் ஏற்படுத்துவது அதற்கு உள்ள சக்தியைப் பொறுத்திருக்கிறது. ஐரோப்பாவுக்கு இந்த சக்தி இருக்கிறதா என்பதை அடுத்த அத்தியாயத்தில் கவனிப்போம்.

* * * *

இந்த அத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட அபாயங்களும், முன் அத்தியாயத்தில் கூறப்பட்ட நிலைமைகளும் சேர்த்துப் பார்த்தால், டானிலெவ்ஸ்கி, ஸ்பெங்லர், டாய்ன்பி ஆகியவர்கள் கூறும் நாலாவது கட்டத்தை அதாவது அதன் ஜீவியப் போராட்டத்தை நம் நாகரிகம் அடைந்துவிட்டது என்று நினைக்கத் தோன்றும். இதைக் கொண்டு, நம் நாகரிகம் தொலைந்தது என்ற முடிவுக்கு வருவது அனாவசியமான தோல்வி

மனப்பான்மை கொள்வதாகும். முந்தின அத்தியா யங்களின் ஆதாரத்தைக் கொண்டு இதை நாம் ஒதுக் கித் தள்ள வேண்டும்.

நாகரிகங்களின் கடைசி கட்டம் நீடிக்கும் கால அளவு, கலாசார மதிப்பு முதலியவை ஒவ்வொரு நாகரி கத்திலும் பெரிதும் வேறுபடுகின்றன. அவை நம் மையே பொறுத்திருக்கின்றன.

இந்த கட்டத்தின் காலம் ரோமானிய நாகரிகத் தைப் போல் 400 அல்லது 500 வருஷத்திலிருந்து எகிப் திய நாகரிகத்தைப்போல் 2000 வருஷம் வரை நீடிக்க லாம். இதே போல் நாகரிகங்களின் வாழ்க்கைப் போக் கும் முன்கூட்டி நிர்ணயமாவதில்லை. முறிவு ஏற்பட்ட பின் நாகரிகம் வீழ்ச்சி யடைந்துதான் ஆகவேண்டு மென்பதில்லை யென்பதை ஏற்கெனவே கண்டோம்.

எந்த நாகரிகமும் பின் நோக்கி நகர முடியாது. மேல் நோக்கியோ கீழ் நோக்கியோ நகரக் கூடும். எந்த நாகரிகமும் பின்னுக்குச் சென்று தன் பழைய நிலையை அடைந்ததாகத் தெரியவில்லை. ஆனால் பல நாகரிகங்கள் மக்கள், ஆட்சியாளர்கள் ஆகியவர்க ளின் உறுதியினால் உயர்ந்தும், அத்தகைய உறுதி யின்மையால் வீழ்ந்து மிருக்கின்றன.

காலத்தைப் பின்னுக்குத் தள்ளி இடை சகாப்தத் தின் கிராமிய சமூகத்திற்கோ அல்லது மறுமலர்ச்சி யின் ஆரம்பகால நகர நாகரிகத்திற்கோ திரும்புவது நம்மால் சாத்தியமில்லை. ஆனால் நம் நாகரிகத்தின் கடைசி கட்டத்தை இதன் ஒளி வீசும் சிகரமாகச் செய்வது நம் சக்திக்கு உட்பட்ட விஷயமே. அது நம் கையில்தான் இருக்கிறது.

ஐரோப்பிய நாகரிக மண்டலத்திற்கு உள்ளும் வெளியிலும் உள்ள வசதிக் குறைவான மக்களின் விழிப்பினால் ஏற்பட்டுள்ள மகத்தான சவாலைச் சமா ளிக்க முடியாதென்பதற்குக் காரணமில்லை. வெற்றி

கிடைக்குமா என்பது உற்பத்தியின் உயர்வையோ, ஆயுதங்களின் மூலம் கிடைக்கும் வெற்றியையோ பொறுத்திராது. மேற்கத்தி நாகரிகத்தின் ஆக்கச் சக்தியையே பொறுத்திருக்கும்.

இதுவரை கூறப்பட்டவையெல்லாம் இந்த ஒரே முடிவில்தான் வந்துசேர்கின்றன. அதாவது நம் காலத்தில் ஏற்பட்டுள்ள அபாயத்தைச் சமாளிப்பதில் மேற்கத்தி நாகரிகம் காட்டும் திறமையைப் பொறுத்தே இருக்கும் இதன் எதிர்காலம். நாம் வேகமாக வீழ்ச்சி யடைந்து விடுவோமென்றோ, உலகமெல்லாம் வியாபிக்கும் இன்னும் உயர்ந்த கலாசார நிலையை அடைவோ மென்றோ சொல்ல முடியாது. நம் நாகரிகத்தின் போக்கு, நம்மிடம் உள்ள சக்தியையே பொறுத்திருக்கிறது. இதற்கு மேற்கத்தி நாகரிகத்தின் ஆக்க சக்தி எவ்வளவு பலமாக இருக்கிறது என்பதை அளவிடுவது அவசியம்.

உலகம் முழுவதிலும் பரவியுள்ள ஆக்க சக்தியைக் கணக்கெடுப்பது மிகவும் கடினமான வேலை. ஆனால் நம் பலத்தை அடிப்படையாகக்கொண்டு நம் எதிர்காலத்தை உருவாக்கிக் கொள்ள நாம் உறுதி கொண்டிருந்தால் இதற்கு ஒரு பதில் கண்டு பிடிக்க முயற்சித்தாக வேண்டும். நம் நாகரிகத்தின் ஜீவ சக்திகளை மொத்தமாகப் பார்க்கவேண்டும். இவ்விதம் பார்க்கும் பொழுது அந்தந்தத் துறையில் உள்ள நிபுணர்கள் தீட்டிய சித்திரங்களையும் ஆங்காங்கு சாத்தியமானவரை பொருத்திப் பார்க்க முயற்சிக்க வேண்டும்.

மேற்கத்தி உலகத்தை ஸ்தூலமாக, ஐரோப்பா, அமெரிக்கா ஐக்கிய நாடுகள் (யு. எஸ். எ.) காமன் வெல்த், தென்அமெரிக்கா என்று நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். எல்லாப் பிரிவினைகளையும் போல்இதுவும் தன்னிச்சையான முறையில் செய்யப்பட்ட பிரிவினையே. இதில் “இரண்டுங் கெட்டான்கள்” எல்

லத் தகராறுகள் எல்லாம் இருக்கத்தான் இருக்கும். உதாரணமாக 1914-ம் வருஷம்வரை ரஷ்யா மேற்கத்தி நாகரிகத்தைச் சேர்ந்த நாடென்று கருதப்பட்டது. இப்பொழுது ஒரு சிலரே அதை ஒப்புக்கொள்ளு வார்கள். ரஷ்யர்களோ இதை ஒப்புக்கொள்ளவே மாட்டார்கள். இங்கிலாந்து பல நூற்றுண்டுகளாக ஐரோப்பாவின் ஒரு பகுதியாகவும், காமன்வெல்த்தின் ஒரு பகுதியாகவும் இருந்து வந்திருக்கிறது. காமன் வெல்த்தில் உள்ள தென் ஆசிய நாடுகள் அரசியல் ரீதியில் மேற்கத்தி உலகத்துடன் தொடர்பு கொண்டி ருக்கின்றன. மேற்கத்தி உலகத்தின் அம்சங்கள் சில வற்றை இந்த நாடுகள் ஏற்றுக் கொண்டிருக்கின் றன. ஆனால் இவை மேற்கத்தி உலகத்தின் ஒரு பகுதி யாக இருக்க விரும்பவில்லை. தனி உலகமாக இவை இயங்குகின்றன.

இந்நூலின் ஆசிரியருக்கு முக்கியமான சில மேற் கத்தி நாடுகளில் வசிக்கவும், அவற்றின் நாடியைப் பிடித்துப் பார்க்கும் சந்தர்ப்பமும் கிடைத்தது. அந்த அனுபவம் இங்கு பயன்படுத்திக் கொள்ளப்படுகிறது. காமன்வெல்த்துடனும், தென் அமெரிக்காவுடனும் நேரடியான தொடர்பு இல்லாததால் அப் பிரதேசங்கள் பற்றிச் சொல்லாமல் விடவேண்டியிருக்கின்றன. இந்தப் பிரதேசங்கள் மேற்கத்தி நாகரிகத்தில் மிக முக்கியமான பங்கைப் பெற்றவை.

இனி வரும் அத்தியாயங்களில் கண்ணோட்ட மிடப் போகும் விமரிசனத்தில் நமது நாகரிகத்தின் சக்திகளைப் பற்றி நல்லது, கெட்டது, அழகு, ஆபாசம் முதலியவை பற்றி எவ்விதத் தீர்ப்பும் கூறப்படாது. விமரிசனம் செய்யப்படும் விஷயங்களின் காலத் திலேயே வாழும் ஒருவன் இவ்விதம் தீர்ப்புக் கூறுவது சாத்தியமில்லை. நம் நாகரிகத்தில் ஆக்க சக்திகள் எவ்வளவு பலமானவை என்பதை ஆராய்வதோடு

நிற்கவேண்டி யிருக்கும். நம் நாகரிகமாகிற மரத்திற்கு, பழம் கொடுக்கும் சக்தி எவ்வளவு இருக்கிறது என்பதுதான் ஆராயப்படுமே யன்றி, பழத்தின் ருசி என்ன என்பது பற்றி ஆராயக் கூடாது.

## 11

### ஐரோப்பாவின் ஆக்க சக்தி

ஒரு சமூகத்தின் ஆக்க சக்தி, புதிய சந்தர்ப்பங்களில் அதற்கு ஏற்படும் அபாயங்களைச் சமாளிப்பதிலிருந்து வெளியாகும். இந்த அபாயங்கள் சமூகத்தின் பல்வேறு அம்சங்களைப் பொறுத்தவையாக இருக்கலாம். இவற்றைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் பொருட்டு இந்த அம்சங்களைத் தனித்தனியே கவனிப்போம்.

நம் நூற்றுண்டில் வர்க்கப் போராட்டம் மிக முக்கிய ஸ்தானம் வகித்திருக்கிறது. பழைய நாகரிகங்களில் ஏற்பட்ட சமூகப் பிளவுடன் இதை ஒப்பிடலாம்.

இப் பிரச்னையைச் சமாளிப்பதில் பல ஐரோப்பிய நாடுகள் பெரிதும் முன்னேறி யிருக்கின்றன. மற்ற நாடுகளில் இது இன்னமும் அபாயமாகவே உள்ளது.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும், இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியிலும், சோஷலிஸமும், தொழிலாளர் இயக்கமும் வளர்ந்தன. இதனுல் தொழிலாளர் வர்க்கத்தின் நிலை உயர்ந்து, முதலாளி வர்க்கத்தின் நிலை தாழ்ந்தது. சென்ற அரை நூற்றுண்டில் அநேகமாக எல்லா மேற்கத்தி நாடுகளிலுமே வாழ்க்கைத் தரம் உயர்ந்து வந்திருக்கிறது. மார்க்ஸின் ஜோஸ்யத்திற்கு மாருக, இந்த அபிவிருத்தியினுல் தொழிலாளர் வர்க்கம் விசேஷமாகப் பயனடைந்திருக்கிறது. இதனுல், வர்க்கப் போராட்டத்

திற்குக் காரணமான வர்க்க வேற்றுமையின் கடுமை குறைந்துவிட்டது.

இத்துடன் நாளுக்கு நாள் சமூக, தொழிலாளர் சட்டங்கள் விரிவடைந்து தொழிலாளரின் பாதுகாப்பை அதிகரித்து, முதலாளிகளின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தியுள்ளன. அநேகமாக எல்லா மேற்கத்தி நாடுகளிலுமே க்ஷேம நல ஆட்சி ஸ்திரப்பட்டுவிட்டது.

தொழிலாளர்களின் க்ஷேமமும் பாதுகாப்பும் அதிகரித்ததோடு மட்டும் நிற்கவில்லை. உற்பத்தி வேலைகளிலும் தொழிலாளர்களின் செல்வாக்கும் நலனும் அதிகரித்துள்ளன. பிந்திய மாறுதல் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்ததாகும். பத்தொன்பதாம் நூற்ருண்டில் தொழிலாளர்கள் தங்கள் நலன்களை முதலாளியின் நலன்களுக்கும், நன்ருக நடைபெறும் உற்பத்திக்கும் விரோதமானவை யென்று கருதினர். பொருளாதார நடவடிக்கைகளுக்குப் புறம்பானவர்களாகத் தொழிலாளர்கள் தங்களைக் கருதினர். இப்பொழுது பெரும்பாலான நாடுகளில் அவர்கள் பொருளாதார நடவடிக்கைகளில் நேரடியான அக்கரை கொண்டிருக்கின்றனர். இன்னும் பரந்த நோக்கத்தில் பார்க்கும்பொழுது, தேசத்தின் நிர்வாகத்தில் பலத்த செல்வாக்குப் பெற்றிருக்கின்றனர்.

முதலாளிகள் விஷயத்தில் அவர்களுடைய அதிகாரம் குறைக்கப்பட்டதுடன், சொத்துக்கும் நிர்வாகத்திற்கும் மிடையில் சிறிது சிறிதாகப் பிளவும் ஏற்பட்டது. நிர்வாகம் சிறிது சிறிதாக முதலாளிகளல்லாத தொழில் நிபுணர்களின் கைக்கு மாறிவிட்டது.

அனேகமாக எல்லா ஐரோப்பிய, ஆங்கிலோ ஸாக்ஸன் நாடுகளிலும் வரிகள் படிப்படியாக உயர்ந்துள்ளன. இவற்றை யெல்லாம் ஒன்ருகச் சேர்த்துப் பார்த்தால், வர்க்க வேற்றுமை உணர்ச்சியளவில்

இருந்த போதிலும், இதன் பொருளாதாரக் காரணம் பெரிதும் அகன்று விட்டது.

வர்க்கப் போராட்டத்தை வெல்லும் இந்த நடவடிக்கை ஒவ்வொரு நாட்டில் ஒவ்வோர் அளவில் உள்ளது. ஹாலந்தில் தொழிலாளருக்கும் முதலாளிகளுக்குமிடையில் ஏற்பட்டுள்ள அளவு ஒத்துழைப்பு வேறு எந்த நாட்டிலும் ஏற்படவில்லை. இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பின் அங்கு வேலை நிறுத்தமே நடைபெறவில்லை. ஸ்காண்டினேவிய நாடுகள், ஸ்விட்ஸர்லாந்து, ஜெர்மனி, இங்கிலாந்து முதலிய நாடுகளில் யுத்தத்திற்குப் பின் வர்க்கப் போராட்டத்தின் அபாயகரமான கட்டம் அகன்றுவிட்டது என்று கூறலாம். மற்ற நாடுகளில் இது இன்னமும் அபாயகரமான நிலையிலேயே உள்ளது. இந்த நாடுகளில் கம்யூனிஸத்திற்குப் பலத்த ஆதரவு இருப்பது தற்செயலாக ஏற்பட்ட விஷயமல்ல.

அமெரிக்காவில் இதர டொமினியன் நாடுகளைப் போல் உண்மையான வர்க்கப் பிரச்னை இல்லை; ஐரோப்பாவில் இருப்பது போன்ற தொழிலாளர் வர்க்கம் என்ற ஒன்று அங்கு இல்லை. ஆகவே அங்கு வர்க்கப் போராட்டமும் இல்லை. ஒவ்வொரு தொழிலாளியும் சொந்தமாக மோட்டார் வைத்திருக்கும் ஒரு நாட்டில், "போர்டு" கார் வைத்திருப்பவர்களுக்கும், "காடிலாக்" கார் வைத்திருப்பவர்களுக்குமிடையில் உள்ள வித்தியாசம்தான் இருக்க முடியும். கார் வைத்திருப்பவர்களுக்கும், சைகிள் வைத்திருப்பவர்களுக்குமிடையே உள்ள வேற்றுமையை விட இது குறைந்த வித்தியாசம்தான். இதனால் அவ்வளவு பொறுமை ஏற்படாது. அமெரிக்காவில் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்குமிடையில் தகராறே இல்லையென்று இதற்கு அர்த்தமில்லை. சில சமயங்களில் அங்கு மிகவும் கடுமையான போராட்டம்கூட நடக்கிறது.

ஆகையால் அங்கு நடைபெறும் போராட்டம் ஏறக் குறைய சம பலமுள்ள இரு பொருளாதார சக்திகளுக் கிடையே நடக்கும் போராட்டமாகவே கருதப்படு கிறதேயன்றி, இரு வர்க்கங்களுக்கிடையே நடக்கும் போராட்டமாகக் கருதப்படுவதில்லை.

மேற்கத்தி உலகத்தில் வர்க்கப் போராட்டம் ஐரோப்பாவில் தோன்றியது. அமெரிக்காவிலும் சில டொமினியன்களிலும் இது இல்லாமலிருப்பது ஒரு பல மாகும். மற்ற மேற்கு நாடுகளில் இது இருப்பது ஒரு பெரும் அபாயம்தான். ஆனால் பல ஐரோப்பிய நாடு களில் இது தோற்கடிக்கப்பட்டு விட்டதிலிருந்தும், எதிர்த்துப் போராடப்படுவதிலிருந்தும் ஐரோப்பிய நாடுகளின் ஜீவ சக்தி வெளியாகும்.

இவ்விதமாக இருபதாம் நூற்றுண்டு, ஆரம்பத்தில் தோன்றிய ஒரு முக்கிய சமூக அபாயத்தைச் சமாளிக்க ஐரோப்பா முயற்சித்துக்கொண்டிருக்கையில், உள் ளுக்குள்ளிருந்து ஒரு புதிய அபாயம் ஏற்பட்டிருக் கிறது. ஐரோப்பாவின் பிளவுகளே இந்த அபாயம். வர்க்க வேற்றுமைகளைவிட இந்தப் பிளவுகள் அதிக அபாயமாகும். இதைச் சமாளிப்பதற்குப் போதிய சக்தியை ஐரோப்பிய நாகரிகத்தின் தொட்டில் ஊட்டுமா?

இப் பழைய கண்டத்தில் இந்த ஆக்க சக்தியை உண்டாக்கும் அற்புதம் நிகழ்ந்துவருவதாகத்தோன்று வது ஆச்சரியப்படத் தக்க விஷயமாகும். நியாயமான முறையில் இதை அளப்பதற்கு இரு அளவு கோல்களை உபயோகிக்க வேண்டும். ஒன்று தற்போதைய நிலை மையை ஏற்படுத்தியுள்ள பல நூற்றுண்டுகளைக் கொண்ட வெகு நீண்ட அளவுகோல். இதற்கு, சென்ற ஆயிரம் வருஷ காலத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற் றத்தை மதிப்பிட வேண்டும். இதோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது இரண்டாவது உலக யுத்தத்திற்

குப் பின் உள்ள குறுகிய காலத்தில் ஏற்பட்டிருக்கும் முன்னேற்றம் பிரமிக்கத் தக்கதாகும். ஐரோப்பாவின் ஐக்கியத்திற்கு வெளிப்படையான அடையாளங்களைக் காணவில்லையேயென்று கவலைப்படுவோருக்கு இவ் விதம் சொல்வதே ஆச்சரியமூட்டும். ஆனால் நிகழ்ச்சி களை ஆராய்ந்தால் இது விளங்கும்.

ஐரோப்பாவை ஐக்கியப்படுத்துவதற்கு முதலில் அஸ்திவாரம் போட்ட பெருமை, இரண்டாவது உலக யுத்தத்தின்போது லண்டனில் தஞ்சம் புகுந்திருந்த ஹாலந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க் ஆகிய சர்க்கார் களைச் சேர்ந்ததாகும். ''பெனெலக்ஸ்'' பொருளாதார ஐக்கியத்திற்கு இவை முயற்சி செய்தன. இதை அடை வதில் பல இடையூறுகள் ஏற்பட்டன. சில இடையூறு களை இன்னமும் அகற்றமுடியவில்லை. சுமார் 350 வரு ஷங்களாகத் தனித்தனியே வாழ்ந்து வந்த இரு நாடு களை அரசியல், பொருளாதார ரீதிகளில் ஒன்றுபடுத்து வதில், 2-வது உலக யுத்தத்திற்குப் பின் ஏற்பட்ட உருப்படியான சாதனையாக இது விளங்குகிறது.

பிரான்ஸ், பிரிட்டன், பெனெலக்ஸ் ஆகிய நாடு களுக்கிடையே 1945-ல் செய்துகொள்ளப்பட்ட மேற் கத்தி ஐக்கியம் இத்தகைய மற்றொரு முயற்சியாகும். இதன் பலன் பிரமிக்கத் தக்கதாக இல்லை. மேற்கத்தி நாடுகளின் பொதுவான பாதுகாப்பு முயற்சியில் பெருந் தோல்வியே அடைந்திருக்கிறது. ஆயினும் அதுவே வடக்கு அட்லாண்டிக் நாடுகளின் சமூகத்தை உருவாக்கும் முயற்சிக்கு முதல் படி என்று கூறவேண் டும். ஆகவே மேற்கத்தி நாடுகளின் ஐக்கிய இணைப் பில் இது பெரும் வெற்றியாகும்.

அடுத்த நடவடிக்கையாகிய ஐரோப்பியக் கவுன் சில் ஏற்பட்டது இதைவிடப் பெரிய விஷயமாகும். ஐக்கிய முயற்சியில் வெளிப்படையாகத் தெரியும். இதன் பலன் இன்றுவரை குறைவானதே. ஆனால்,

ஒன்றுபட வேண்டுமென்ற பலத்த உணர்ச்சியினுல் உந்தப்பட்டு இக் கவுன்சில் ஏற்பட்டதால், மற்றெல்லா முயற்சிகளையும் விட இது அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஆலோசனை அசெம்பிளி மிகவும் சக்தி வாய்ந்த ஸ்தாபனமாகும். ஐக்கியத்தை நோக்கி ஐரோப்பிய நாடுகள் துரிதமாக முன்னேற இது தன் முழு சக்தியையும் உபயோகித்து வந்திருக்கிறது.

ஐரோப்பிய பாதுகாப்பு ஸ்தாபனம் மிகுந்த கஷ்டத்தின்பேரில் ஜனித்துள்ளது. தைரியமான தீர்க்க திருஷ்டியும், சுதந்திர ஜெர்மனியை மீண்டும் ஆயுத பாணி யாக்குவது பற்றிய பயமும் கலந்த சூழ்நிலையில் இது தோன்றியிருப்பதால் இது பற்றி ஐரோப்பாவுக்குள்ளேயும் வெளியிலும் பலர் சந்தேகப்படுவதில் ஆச்சரியமில்லை. மேற்கு ஐரோப்பாவின் பாதுகாப்புப் பிரச்னை எவ்வளவு பெரியதோ அந்த அளவுக்கு ஐரோப்பிய ராஜ தந்திரிகள் துணிவு காட்டியதுதான் இதில் நம்பிக்கை யூட்டும் அம்சம்.

ஐரோப்பியப் பாதுகாப்பு ஒப்பந்தம் அமுலுக்கு வருவதற்கு முன்பே, ஐரோப்பிய ஒற்றுமைக்குச் சிகரம் வைத்தது போன்ற மற்ருெரு நடவடிக்கையை எடுக்க ஐரோப்பா முன் வந்துள்ளது. நாடுகளுக்கு மேற்பட்ட அரசியல் ஸ்தாபனம் ஒன்றை அமைப்பதற்கான விரிவான திட்டங்கள் வகுக்கப்பட்டு வருகின்றன. இது பலனளிப்பதற்கு இன்னும் சிறிது காலம் பிடிக்கும். ஆனுல் இருபது வருஷங்களுக்கு முன்னுல் இதை யாரும் கனவில்கூடக் கண்டிருக்க மாட்டார்கள்.

ஐரோப்பிய ஐக்கிய இயக்கம் தீவிரப் பட்டதற்குக் காரணம், ஒருபுறம் கம்யூனிஸ்ட் ஆதிக்கத்தையும், மறுபுறம் அமெரிக்கத் தலையீட்டையும் பற்றிய பயமே என்பதை மறுப்பது யதார்த்த நிலைக்கு மாறுபட்டதாகும்; ஆனுல் இவைதான் அடிப்படையான காரணம் என்று கூறுவதும் சரியாகாது. சர்ச்சில், ஸ்பாக்,

ஷூமான், மொனெட், அடினுர் முதலிய ஐரோப்பிய ராஜ தந்திரிகளின் நீண்ட கால முயற்சியின் விளேவே இந்தச் சாதனைகள். இதைவிட முக்கியமானது என்னவென்ருல், யுத்தப் பிற்கால ஐரோப்பாவில் ஏற்பட்ட பலமான ஒற்றுமை ஆர்வமே இதற்குக் காரணம்.

புதிய ஐரோப்பா ஜனிக்க விருக்கிறது. தற்போதைய ஐரோப்பாவின் சக்தியிலிருந்து இது தெளிவாகத் தெரிகிறது. தனக்கு ஏற்பட்டுள்ள அபாயத்தைப் புதிய ஐரோப்பா வெற்றிகரமாகச் சமாளிக்கும் என்பதற்கான அறிகுறிகள் காணப்படுகின்றன.

ஐரோப்பிய ஒற்றுமைக்கான முன்னேற்றத்தை அளக்கும் இரண்டாவது அளவுகோல், தற்போதைய பிரச்னேகளேச் சமாளிக்க ஐரோப்பாவுக்கு உள்ள சக்தியாகும்.

இந்த அளவுகோலேக் கொண்டு அளக்கும் பொழுது ஐரோப்பாவின் முன்னேற்றம் போதாதென்றே கூறவேண்டும். தற்போதைய வேகத்தில் முன்னேறினுல் ஐரோப்பாவுக்கு ஐக்கியப் பாதுகாப்பு ஏற்படுவதற்கு இன்னும் சில வருஷங்கள் பிடிக்கும். வர்த்தக ரீதியில், அமெரிக்கா, இந்தியா, ரஷியா, சீனு போன்ற பெரிய மார்க்கெட்டுகளேக் கைப்பற்ற முயற்சிக்கும் நாடுகளுடன் வெற்றிகரமாகப் போட்டியிட இன்னும் அதிக காலம் பிடிக்கும். மற்ருெரு யுத்தத்திஞல் சீர்குலேயாமல் தவிர்க்க ஐரோப்பா காலா காலத்தில் போதிய அளவு ஒன்றுபடாவிட்டால் கிரீஸுக்கு நேர்ந்த கதிதான் இதற்கும் நேரும்.

இரண்டாவது உலக யுத்தம் 1945 மே மாதத்தில் ஐரோப்பாவில் முடிவடைந்த பொழுது, மார்ஷல் திட்ட நாடுகளில் பொருள் உற்பத்தி யுத்தத்திற்குமுன் இருந்த அளவில் பாதிதான் இருந்தது; ஆனுல் பிறகு ஒன்பது வருஷங்களுக்குள் யுத்தத்திற்குமுன் இருந்ததைவிட 150 சத விகிதம் அதிகரித்தது. மிகவும்

துரிதமாக முன்னேறிய ஆஸ்ட்ரியா, கிரீஸ், இத்தாலி, மேற்கு ஜெர்மனி, ஹாலந்து முதலிய நாடுகளில் 1954-க்குள் பொருள் உற்பத்தி 170 சத விகிதத்தைக்கூட எட்டி விட்டது. ஐரோப்பாவின் பொருளாதார வாழ்வில் எவ்வளவு பலம் இருக்கிறது என்ற கேள்விக்கு இந்தப் புள்ளி விவரங்களே தக்க பதில் அளிக்கும்.

இதேபோல், பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளில் விவசாயப் பொருள் உற்பத்தியும், யுத்தத்திற்குமுன் இருந்ததைவிட 120 சத விகிதம் உயர்ந்தது. டென்மார்க், பின்லாந்து, ஹாலந்து, பிரிட்டன் முதலிய நாடுகளில் 130 சத விகிதமும், அமெரிக்காவில் 138 சத விகிதமும் அதிகரித்தது.

தற்போதைய நிலைமையை யுத்தத்திற்குமுன் இருந்த நிலைமையுடன் ஒப்பிடாமல் 1948-ம் வருஷ நிலைமையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நம்பிக்கை இன்னமும் அதிகரிக்கும். மேற்கு ஜெர்மனி, கிரீஸ், ஆஸ்ட்ரியா ஆகிய நாடுகள் 1948-ல் உற்பத்தி செய்ததைப் போல் இருமடங்கு பொருள்களை 1954-ல் உற்பத்தி செய்தன. 6 வருஷங்களுக்குமுன் இருந்ததைவிட, இத்தாலி 70 சத விகிதமும், ஹாலந்து 45 சத விகிதமும், பிரான்ஸ் 30 முதல் 35 சத விகிதமும் அதிகமாகப் பொருள் உற்பத்தி செய்தன. "தற்போதைய மேற்கு ஐரோப்பா, இதற்குமுன் சரித்திரத்தில் என்றும் கண்டிராத அளவு வளமாக இருக்கிறது" என்று, ஐரோப்பியரல்லாத பார்வையாளரான கிரேன் பிரிண்டன் கூறியது உண்மை என்பதை இந்தப் புள்ளி விவரங்கள் நிரூபிக்கின்றன. மார்ஷல் திட்ட உதவியும் மக்களின் மகத்தான உழைப்பும் இல்லாமலிருந்திருந்தால் இந்த அளவு பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டிருக்க முடியாது.

இவற்றைக்கொண்டு, மிதமிஞ்சிய நம்பிக்கை கொண்டு விடாமல் ஜாக்கிரதையாக இருக்க வேண்

டும். பொருளாதாரப் புது வாழ்வு பெறுவதில் ஐரோப்பா மகத்தான சக்தியை வெளியிட்டிருக்கிற தென்று மேற்கண்ட புள்ளி விவரங்களிலிருந்து தெரியும். ஆனால் பல ஐரோப்பிய நாடுகள் யுத்தத்தின் விளைவுகளிலிருந்து 1948-ல் தலையெடுக்கத் தொடங்கவே யில்லை. மொத்த உலக நிலையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் ஐரோப்பா பின் தங்கிவிட்டதென்றே கூற வேண்டும். யுத்தத்திற்குமுன் இருந்ததைவிட 240 சதவிகிதம் அதிகப் பொருள்கள் உற்பத்தி செய்யும் அமெரிக்காவுடனும், 250 சதவிகிதம் அதிகப் பொருள் உற்பத்தி செய்யும் ரஷியாவுடனும் மேற்கு ஐரோப்பா முன்னேறவில்லை.

ஐரோப்பாவின் பிரச்னைகளை உற்பத்திப் பெருக்கம் மாத்திரம் தீர்த்துவிடாது. உற்பத்தியாகும் பொருள்களுக்கு ஒரே மார்க்கெட் ஏற்படவேண்டும். குறைந்த பக்ஷம் மேற்கு ஐரோப்பாவாவது மார்க்கெட்டாக ஆகி, அதற்கு வேண்டிய பொருள்கள் பெருத்த அளவில் உற்பத்தி செய்தால்தான் மற்ற பகுதிகளுடன் ஐரோப்பா வெற்றிகரமாகப் போட்டியிட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியும்.

பல துறைகளில் ஐரோப்பியப் பொருளாதார ஐக்கியத்திற்கான முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. இவை நாம் விரும்பும் அளவுக்குப் புரட்சிகரமானவையாக நமக்குத் தோன்றாவிட்டாலும், மகத்தான முயற்சிகளாகும். பல நூற்றாண்டுகளாக வளர்ந்துள்ள விஷயங்களைச் சில வருஷங்களுக்குள் இவை மாற்றிவிடும்.

இவற்றில் இரு முயற்சிகள் போதிய அளவு வெற்றி பெற்றிருக்கின்றன; பணம் செலுத்தும் ஐரோப்பிய யூனியன் ஒன்று; ஷூமான் திட்டம் இரண்டாவது. பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, ஹாலந்து. பெல்ஜியம், லக்ஸம்பர்க் ஆகிய நாடுகளின் நிலக்கரி, இரும்புத்

தொழில்களை ஒன்ருகப் பிணைக்கும் ஷூமான் திட்டத்தை 2-வது உலகயுத்தத்திற்குமுன் யாரும் கற்பனை கூடச் செய்திருக்க முடியாது. இது அவ்வளவு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நடவடிக்கையாகும். இதில் பல கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டியிருந்தது. இருந்தாலும்இறுதியில் ஐரோப்பாவின் ஆக்க உணர்ச்சி வெற்றி பெற்றது. ஐரோப்பாவுக்குள் வர்த்தகக் கட்டுப்பாடுகளைக் குறைக்கும் அடுத்த நடவடிக்கையை ஐரோப்பா ஏற்கெனவே கவனிக்கத் தொடங்கி விட்டது.

மற்ற கண்டங்களுக்குச் சரியாக ஐரோப்பா முன்னேற விரும்பிஞல் அதன் பொருளாதாரச் சிந்தனையிலும், செயலிலும் உண்மையான புரட்சி ஏற்பட வேண்டும். யுத்தத்திற்கு முன் இருந்ததைப்போல் 170 சத விகிதம் பொருள் உற்பத்தி அதிகரித்து விட்டதுபற்றி மகிழ்ந்துகொண்டிருந்தால் போதாது. 250 சத விகிதம் அல்லது 300 சதவிகிதம் உற்பத்தி பற்றி யோசிக்க வேண்டும். அதாவது நம்முடைய தற்போதைய உற்பத்தி அளவை இரட்டிக்க வேண்டும்.

இது புரட்சிகரமாகத் தோன்றலாம். ஆனுல் இது தான் உண்மை நிலை. உண்மையை உணர்ந்து, அதற்குத் தேவையான சக்தியை உண்டாக்கிய நாகரிகங்கள்தான் நெருக்கடிகளிலிருந்து தப்பி இருக்கின்றன.

இருபதாம் நூற்ருண்டில் ஐரோப்பாவின் ஆக்க சக்தி கலையில்தான் மிகவும் பலமாக வெளியாகி யுள்ளது. எல்லாக் கலைகளிலும் இது வெளியாகவில்லை. ஆனுல் சக்தியை நிரூபிப்பதற்கு இது அவசியமில்லை. கலையின் சில துறைகளில் நிரந்தரமான உன்னத பாணிகளைச் சிருஷ்டிக்கத் தன்னுல் முடியுமென்பதை ஐரோப்பா நிரூபித்திருக்கிறது. கட்டிடக் கலை, சினிமா, சங்கீதம் ஆகிய மூன்று துறைகளிலும் இது தெளிவாகத் தெரிகிறது.

மறுமலர்ச்சிக் காலத்தில் வட இத்தாலிய நகரங்களில் நம் நாகரிகத்தின் உயர்வுக்கு அடையாளமாக ஓவியத் துறையில் ஒரு புதிய பாணி தோன்றியது. பின்னர் இதற்குச் சமமான பாணிகள் தோன்றினவே தவிர, இவற்றை மிஞ்சக்கூடியவை தோன்றவில்லை. இந்த நகரங்களின் அளவை, கவனித்தால் மிகக் குறுகிய காலத்தில், குறைந்த இடத்தில் இவை சிருஷ்டித்த மேதைகளின் தொகை பிரமிக்கத் தக்கதாக உள்ளது. படைப்புச் சக்தி இப்படி வெடித்தெழுவதுதான் ஒரு நாகரிகத்தின் ஜீவனுக்கு அடையாளம்.

இதேபோல் இந்த நூற்ருண்டின் ஆரம்பத்தில், ஐரோப்பாவில் கட்டிடக் கலையிலும் முற்றும் புதிய பாணி ஒன்று தோன்றியது. டோரிக், கோதிக் பாணிகளைப் போலவே இதுவும் ஜீவ சக்தியைக்காட்டுகிறது. பொது மக்களுக்காகவும், சர்க்கார் காரியாலயங்களுக்காகவும், தொழிலாளர்களுக்காகவும் கட்டப்பட்டுள்ள எல்லாக் கட்டிடங்களிலும் இந்த பாணி வியாபித்து நிற்கிறது.

கலை என்ற ரீதியில் சினிமா, மற்றக் கலைகளிலிருந்து இரண்டு விதத்தில் மாறுபடுகிறது. இது முற்றிலும் கலையல்ல. கலையும் தொழிலும் சேர்ந்தது. இரண்டாவதாக, மற்றக் கலைகளைவிட இது அற்ப ஆயுளே உள்ளது.

இருந்தாலும் நம் கலாசார சக்தியைச் சோதிப்பதற்கு இது ஒரு சிறந்த சாதனம். நம் காலத்தில் பாமர மக்கள் ரஸிக்கும் கலை வடிவம் இதுவே.

சினிமாவைப்போல் வேறு எந்தக் கலைக்கும் மூலதனத்தையும் மற்ற சாதனங்களையும் ஒரே இடத்தில் குவிக்க வேண்டிய அவசியமில்லை. இந்த இரண்டு அம்சங்களிலுமே ஹாலிவுட் ஸ்டுடியோக்களைவிட ஐரோப்பிய ஸ்டுடியோக்கள் அதிக அசௌகரியமான நிலையில் உள்ளன. இருப்பினும் இவை மிகவும்

உயர்ந்த படங்களை வெளியிட்டிருக்கின்றன.

பேசாத மௌனப் படங்களின் காலத்திலேயே இது ஆரம்பமாகிவிட்டது. "நிபெலுங்கன்" என்ற மகத்தான படத்தை ஜெர்மனி தயாரித்தது. ஜெர்மன் சினிமாத் தொழில் நாஜிகளின் பிடியில் சிக்கும்வரை பல மகத்தான படங்களைச் சிருஷ்டித்திருக்கிறது. இப்பொழுது அது மறுபடியும் தன் பழைய நிலைக்கு வரத் தொடங்கி யிருக்கிறது.

பிரிட்டிஷ் சினிமாத் தொழில், கலை அம்சத்தில் உயர்ந்த தரத்தில் உள்ள படங்களை உறுதியுடன் தயாரித்து வந்திருக்கிறது. யுத்தத்தின் போதும் யுத்தத்திற்குப் பிறகும் இத் தொழில் படங்களின் தரத்தை மேலும் உயர்த்தி, அமெரிக்க ஜனங்களின் ஆதரவைக் கூடப் பெறுவதில் வெற்றி பெற்றது ஓர் அற்புத சாதனையாகும். நோல்கவார்ட், ஸோமர் ஸெட் மாம், படங்கள் போன்ற, ரஸிகர்களுக்கான ரத்தினங்கள் மாத்திரமின்றி, ஏராளமான பணம் வசூலாகும் "பாக்ஸ் ஆபீஸ்" படங்களையும் உற்பத்தி செய்தது. இத்தாலிய, பிரெஞ்சு சினிமாத் தொழில்களிலும் இதே போல் மகத்தான படங்கள் உற்பத்தியாகி இருக்கின்றன.

யுத்தத்திற்குப் பின் வெளிவந்த பிரெஞ்சு இத்தாலியப் படங்களில் ஆரோக்கியமான நாகரிகத்திற்கு அறிகுறியல்லாத நம்பிக்கை யின்மையும் சோகமும் காணப்படுகின்றன. ஆனால் ஹாலிவுட்டுக்கு உள்ள வசதிகள் இல்லாமலே ஐரோப்பிய சினிமாத் தொழில் இணையற்ற படங்களை உற்பத்தி செய்திருக்கிறது என்ற நிலை இதனால் மாறிவிடவில்லை. கலைத்துறையில் ஐரோப்பாவுக்கு உள்ள சக்திக்கு இது ஓர் அத்தாட்சி.

சங்கீதத்தில் ஐரோப்பாவின் சாதனைகளையும் அமெரிக்காவின் சாதனைகளையும் வேறுபடுத்திப் பார்ப்பது கஷ்டம். சர்வ தேச சக்திகளினால் அதிகம் பாதிக்கப்பட் டிருப்பது சங்கீதம். சங்கீத சிருஷ்டி கர்த்தாக்

களும் வித்வான்களும் இந்த இரு கண்டங்களுக்கு மிடையில் அதிகம் பிரயாணம் செய்திருக்கின்றனர். இருப்பினும் இவற்றை வேறுபடுத்திப் பார்ப்பது, மேற் கத்தி நாகரிகத்தின் இரு அங்கங்களாகிய இந்த இரு கண்டங்களின் கலாசாரச் செழுமையும் சோதிப்பதற் காகத்தான்.

முதல் உலக யுத்தத்திற்குப் பின் ஐரோப்பிய சங் கீதம் பழைய சாஸ்திரீய வடிவத்தைப் பெற்றது. சென்ற சில வருஷங்களில் ஐரோப்பாவில் பல வாக் கேயகாரர்கள் தோன்றினர். பிரான்ஸில் மில்ஹாட், போலெங்க், ஸ்விட்ஸர்லாந்தில் ஹானெக்கர், பின்லாந் தில் ஸிபெல்லியஸ், இத்தாலியில் மாலி பீரோ, பிஸ் ஸாட்டி, இங்கிலாந்தில் வாகன் வில்லியம்ஸ் பிரிட் டென் முதலியோர் பிரபலமானவர்கள். பால் ஹிண் டெனித், எர்ன்ஸ்ட் க்ரெனச், ஐகர் ஸ்ட்ராவின்ஸ்கி, காலஞ் சென்ற ஆர்னூல்ட் ஷோன்பர்க், பேலா பார் டோக் முதலியோர் ஐரோப்பாவில் பிறந்து கல்வி கற்று அமெரிக்காவுக்குச் சென்று சேவை செய்தனர். இவர்களுடைய கலையின் நிரந்தர மதிப்பை இவ்வளவு சீக்கிரம் கணக்கிட முடியாது. ஐரோப்பிய சங்கீதத் துறையின் சுறுசுறுப்பை இந்தப் பெயர்கள் காட்டும் என்பதற்காகவே இவை இங்குக் குறிப்பிடப்பட்டன. கச்சேரி நடத்துவதிலும் ஐரோப்பா முன் நிற்கிறது. தனியாக வாத்தியம் வாசிப்பதிலும், கச்சேரி நடத்துவ திலும் மகத்தான வித்வான்கள் ஐரோப்பாவில் தோன்றியிருக்கின்றனர்.

அமெரிக்காவில் சங்கீதம் செழிக்கவில்லையென் பது இதற்கு அர்த்தமில்லை. நம் காலத்திய சங்கீத மேதைகளில் பெரும்பாலானவர்கள் ஐரோப்பாவில் தோன்றியவர்கள் என்பதை இது காட்டுகிறது. ஐரோப்பாவின் கலாசாரச்செழிப்புக்கு இது அத்தாட்சி.

# 12

## அமெரிக்காவின் ஆக்க சக்தி

அமெரிக்காவைப் பற்றி அறிந்தவர்களுக்கு அமெரிக்க மக்களின் சக்தியை நிரூபிக்க வேண்டியது அனுவசியமாகும். அதன் வேகம், மக்களின் உற்சாகம், உணர்ச்சி வேகம், தனிப்பட்ட வாழ்விலும் பொது வாழ்விலும் அதன் தலைவர்களின் மகத்தான வாழ்வு, பொருளாதார நடவடிக்கைகளின் பிரம்மாண்ட வளர்ச்சி இவையெல்லாம் மேம்போக்காகப் பார்ப்பவர்களுக்குக்கூட வெளிப்படையாகத் தெரியும்.

செயல் புரிய வேண்டுமென்ற இந்த ஆர்வத்தை அநேகமாக ஒவ்வோர் அமெரிக்கனிடத்திலும் காணலாம். இதன் விளைவுகளை வானளாவும் கட்டிடங்களிலும், பாழ் வெளிகளிலும் தோன்றும் நகரங்களிலும், கோடிக்கணக்கான காலன் தண்ணீரைத் தேக்கி வைத்திருக்கும் அணைக்கட்டுகளிலும், நியூயார்க்கையும் ஸான்பிரான்ஸிஸ்கோவையும் சுற்றியுள்ள கம்பீரமான பண்ணைகளிலும் காணலாம்.

ஆனால் நம் வேலைக்கு இந்த வெளித்தோற்றங்கள் போதாது. இவை ஏமாற்றிவிடக் கூடும். ஆகையால் அமெரிக்கனுக்கு உண்மையான ஆக்க சக்தியை படைக்கும் மனம் உண்டு என்பதைக் காட்டும் துறைகளைக் கவனிப்போம்.

நீராவி எஞ்சின் பிறந்த அதே காலத்தில் சுதந்திர நாடாகத் தோன்றியது அமெரிக்கா. அது முதல் நீராவி எஞ்சினைப் போலவே அமெரிக்காவின் வாழ்க்கையும் வளர்ந்து வந்திருக்கிறது. இறுதிவரை ஆராய்ந்து பார்த்தால் இதன் பெரும் பலமும் செல்வமும் எஞ்சினையே பொருத்திருக்கின்றன என்பது விளங்கும். உலகம் முழுவதிலும் இதன் செல்வாக்கு

இயந்திர சக்கரத்தின் மூலமே பரவுகிறது. அமெரிக்கா தன் படைப்பு மேதையை மற்றத் துறைகளைவிட இந்தத் துறையில்தான் அதிகமாக வெளிக்காட்டி யிருக்கிறது.

"ஒரு துறையில்தான் அமெரிக்கா முதிர்ச்சி அடைந்திருக்கிறதென்று ஜேம்ஸ்பர்ண்ணிம் என்ற அமெரிக்க ஆசிரியர் கூறுகிறார்." "பொருள் உற்பத்தி முறையில் அவர்கள் இணையற்ற ஸ்தானத்தை அடைந்திருக்கின்றனர்.இதை அமெரிக்கர்களே உணர வில்லை. இது இயந்திரங்களில் மாத்திரமில்லை. இங்கி லாந்து, ஜெர்மனி, ஸ்வீடன், ஸ்விட்ஸர்லாந்து முதலிய நாடுகள் இயந்திர உற்பத்தியில் இன்னும் உயர்வாகக் கூட இருக்கலாம். பெருத்த அளவில் பொருள்களை உற்பத்தி செய்யும் திறமையில்தான் அமெரிக்காவின் பெருமை உள்ளது. இது அமெரிக்காவின் தேசீய குணமாகவே ஆகிவிட்டது" என்கிறார் அவர்.

அணுகுண்டு உற்பத்தியில்கூட அடிப்படையான ஆராய்ச்சிகளை அமெரிக்கர் நடத்தவில்லையென்பதை யும், அதன் உற்பத்திக்கான பிரம்மாண்டமான நிர் மாண வேலைகளைத்தான் அது செய்ததென்பதையும் அவர் எடுத்துக் காட்டுகிறார்.

இந்த சாதனைகள் நாகரிக வளர்ச்சியைக் காட்ட வில்லையென்று சிலர் கூறுகின்றனர். நாகரிகத்தைத் தொழில் நுட்பம் கொன்றுவிடுவதாக அவர்கள் கருது கின்றனர். இந்த வாதம், காரண காரியங்களைப் போட்டுக் குழப்புவதாகும். அளவுக்கு மீறி வளரும் தொழில் நுட்பம் மனித மனத்தை எப்படிப் பாதித்த போதிலும், அந்த மனத்தின் ஆக்கக் கிளர்ச்சியினு லேயே இந்த நுட்பங்கள் தோன்றின என்பதை யாரும் மறுக்க முடியாது. நாகரிகத்திற்கு பிதாகரஸின் முக் கோணம் எவ்வளவு உதவி செய்ததோ, அதே அள வுக்கு நவீன தொழில் நுட்பங்களும் உதவி செய்திருக்

கின்றன.

ஆனால் சிலர் கூறுவதுபோல் உலகப் பிரச்னைகள் எல்லாவற்றிற்கும் தொழில் நுட்ப அபிவிருத்திதான் பரிகாரம் என்பது இதற்கு அர்த்தமில்லை. சுற்றுப் புறங்களை வசப்படுத்துவது மாத்திரம் நாகரிகத்தின் வளர்ச்சிக்கு அறிகுறியல்லவென்பதை டாய்ன்பி சுட்டிக் காட்டி யிருக்கிறார். இதனால் மனிதன் தான் கண்டு பிடித்த முறைகளுக்கு எஜமானனாவதற்குப் பதிலாக அடிமையாகிவிடக்கூடும். ஆனால் இங்கு நாம் கவனிக்க வேண்டிய விஷயம், அமெரிக்கா கண்டுபிடித்துள்ள இவ்வளவு விஷயங்களும், ஏற்படுத்தியுள்ள இத்தனை ஸ்தாபனங்களும், அமெரிக்காவின் ஆக்க சக்திக்கு அறிகுறியா இல்லையா என்பதுதான். அமெரிக்க உலகாயதத்தின்மீது வெறுப்புக்கொள்ளாத யாரும் இந்தக் கேள்விக்கு 'ஆம்' என்றுதான் பதில் அளிப்பார்கள்.

உலக ஜனத் தொகையில் 7 சத விகிதமே உள்ள ஒரு தேசம், உலகத்தின் பொருள்களில் 40 சத விகிதம் உற்பத்தி செய்து, மற்றும் டஜன் கணக்கான நாடுகளுக்கு உதவி அளித்தும் ஆதரித்தும்வருகிறதென்றால், இது மனித ஆக்க சக்தியின் மகத்தான சாதனை யென்பதையும், நாகரிகத்திற்கு ஒரு சேவை என்பதையும் குறைத்து மதிப்பிட முடியாது.

அமெரிக்க அரசியலின் சாதனைகள்பற்றி ஆராய முற்படுவதற்கு முன்னால், ஒரு விஷயத்தைத் தெளிவு படுத்துவது அவசியம். ஜனநாயகம் என்பது அமெரிக்கர் கண்டுபிடித்த விஷயமென்று சாதாரண அமெரிக்கர்கள் நினைக்கின்றனர். இது உண்மையல்ல. கட்டுப்பாடான சமூகம் தோன்றிய நாள் முதலே ஜனநாயக ஆட்சிமுறை இருந்து வருகிறது. ஆனால் மேற்கத்தி நாகரிகத்தில், அமெரிக்கப் புரட்சிக்கு முன்னாலிருந்தே இது இருந்து வருகிறது.

அமெரிக்கா தன்னுடையதென்று ஓர் ஆட்சிக் கலையை வகுத்திருப்பதாகவும் சொல்ல முடியாது. இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஏனென்றால் வெகுகாலம் வரை தன் எல்லைகளைப் பாதுகாப்பதிலும், இயற்கை வளங்களைப் பயன்படுத்திக் கொள்வதிலுமே அமெரிக்கா கவனம் செலுத்தி வந்தது. 1930-ம் வருஷம்வரை "சர்க்கார்" என்பது "அவசியமான ஒரு தீமை" யாகவே கருதப்பட்டு வந்தது. மாபெரும் பொருளாதார மந்தம் ஏற்பட்ட பொழுது தான் அமெரிக்காவில் சர்க்கார் தனக்குரிய கடமையைச் செய்யத் தொடங்கியது. ஆனால் இதைக் கொண்டு, அரசாட்சிக் கலையில் அமெரிக்கருக்கு ஆக்க சக்தி இல்லையென்று நினைப்பது குறுகிய மனப்பான்மை யாகும். சமஷ்டி முறையையும், ஜனநாயக முறையையும், புதிய நிலைமையில், இதற்குமுன் என்றும் கண்டிராத அளவில் வெற்றிகரமாக அமுலுக்குக் கொண்டு வந்தது ஒரு பெரிய சாதனையாகும்.

சமஷ்டி அரசாட்சி முறை இதற்கு முன்பே ஐரோப்பாவில் பல நாடுகளில் அமுலில் இருந்ததென்றாலும், காலத்திலும் இடத்திலும் சிறிய அளவிலேயே இது பிரயோகிக்கப்பட்டது. அமெரிக்காவில் இந்த அரசாட்சி முறை 160 வருஷங்களுக்கதிகமாக ஒரு கண்டத்திற்குச் சமமான அளவுள்ள பிரதேசத்தில் இந்த முறை அமுலில் உள்ளது. சமஷ்டி ஆட்சியின் அதிகாரம் குறிப்பிடத் தக்க அளவு அதிகரித்திருந்த போதிலும் இந்த முறை அமெரிக்க சம்பிரதாயத்தில் எப்பொழுதும் போல் பலமாகவே பதிந்துள்ளது.

இந்த முறையினால் அமெரிக்காவுக்குப் பல நன்மைகள் ஏற்பட்டிருக்கின்றன. மூவாயிரம் மைல் அகலம் உள்ள நாட்டில் திறமையான நிர்வாகத்தைச் சாத்தியமாக்கி யிருக்கிறது இது. எந்த ராஜ்யத்தின் மீதும்

மற்ெருரு ராஜ்யமோ சர்க்காரோ ஆதிக்கம் செலுத்த முடியாதபடி தடுத்திருக்கிறது. ஒற்றுமையில் வேற்றுமை அனுஷ்டிப்பதை இது சாத்தியமாக்கி யிருக்கிறது.

மேற்கத்தி நாடுகள் ஜீவிப்பதற்கு ஐரோப்பாவிலும் வட அட்லாண்டிக் ஸ்தாபனத்திலும் ஒத்துழைப்பு அவசியமென்று கருதப்படும் நம் காலத்தில் சமஷ்டி ஆட்சி முறையின் இந்த நன்மைகள் புதிய முக்கியத்துவம் பெறுகின்றன. இந்த முறை அமெரிக்காவில் பிரயோகிக்கப்படுவது போன்ற முறையிலேயே மற்ற இடங்களிலும் பிரயோகிக்கப் படவேண்டு மென்ற அவசியமில்லை.

அமெரிக்க ஜனநாயகத்திற்கும் பழைய மேற்கு ஐரோப்பிய ஜனநாயகங்களுக்குமிடையில் வித்தியாசமிருக்கிற தென்பது மறுக்கமுடியாதது. இந்த வித்தியாசம் இன்னதென்பதை அறுதியிட்டுக் கூறமுடியாது. ஜனநாயகத்திற்கு அமெரிக்காவின் உபயம் இந்த வேற்றுமைதான் பொதுஜன ஆட்சியின் தேவைகளுக்கேற்ப ஜனநாயகத்தை அமெரிக்கா மாற்றி அமைத்துக் கொண்டிருக்கிறதென்று இதை விவரிக்கலாம்.

அமெரிக்கப் புரட்சியும் பிரெஞ்சுப் புரட்சியும் ஒரே லக்ஷியத்தை அடிப்படையாகக் கொண்டவையென்ருலும், இவை பாமர மக்களின் புரட்சியோ, அல்லது சாதாரண மனிதனின் புரட்சியோ அல்ல. இவை பணம் படைத்த மத்தியதர வகுப்பினரால் எதேச்சாதிகார ஆட்சியை எதிர்த்து நடத்தப்பட்ட புரட்சிகளாகும். பத்தொன்பதாம் நூற்ருண்டின் மத்தியப் பகுதியிலிருந்துதான் அரசியல் பொருளாதார அதிகாரங்கள் பாமர மக்களின் கைக்குச் சிறிது சிறிதாக மாறின. ஜனநாயகத்திற்கு அமெரிக்கா செய்துள்ள உபயம் இந்த மாறுதலில்தான் அடங்கியுள்ளது. அமெ

ரிக்கா, அமைதியான பரிணாமத்தின் மூலம் யாராலும் கவனிக்கப்படாமலே மத்தியதர வகுப்பு (பூர்ஷ்வா) ஜனநாயகத்தை பாமர ஜனநாயகமாக மாற்றும் புரட்சியைச் செய்து விட்டது. இதையே கம்யூனிஸம், மத்தியதர வகுப்பை ஒழிப்பதன் மூலம் சாதிக்க முயன்றும் பலனில்லை. புதிய முறை, பழைய முறையைவிட நல்லதா கெட்டதா என்பது இந்நூலில் ஆராய எடுத்துக் கொண்ட விஷயத்திற்கு முக்கியமில்லை. ஓர் ஆட்சி முறை, அதன் பெயரும் அடிப்படை தத்துவங்களும் மாருமல், புதிய நிலைமைக்கும் தேவைகளுக்கும் ஏற்ப மாறி விட்டது என்பதுதான் இங்கு முக்கியம். புதிய நிலைமைகளின் சவால் சமாளிக்கப்பட்டு விட்டது.

பொது விவகாரங்களில் சாதாரண அமெரிக்கப் பிரஜைகளுக்கு அக்கரை ஏற்படுவதற்கு, ஒருபுறம் இதற்கென ஏற்பட்ட கல்வி முறை அனுஷ்டிக்கப்படுகிறது. மறுபுறம் எங்கும் கண்டிராத அளவில் பொது மக்களுக்குச் செய்திகளும் கருத்துக்களும் வினியோகிக்கப்படுகின்றன. செய்திகளை விவாதிப்பதற்கு அமெரிக்காவில் இருப்பது போன்ற வசதி வேறு எங்குமில்லை. அமெரிக்க மக்களுக்குச் சரியான செய்தி கிடைப்பதில்லை யென்று அமெரிக்க மக்களிடையே இருந்துவரும் கருத்து -ஆதாரமற்றது. ஐரோப்பாவில் கிடைப்பவற்றைக் காட்டிலும் அமெரிக்காவில் கிடைக்கும் செய்திகளில் விவரம் குறைவாக இருக்கலாம். ஆனுல் முக்கியமான பொதுவிவகாரங்களில் அமெரிக்க மக்கள் இழுக்கப்படுவதுபோல் வேறு எங்கும் இழுக்கப்படுவதில்லை. இப்பிரச்னைகள் அமெரிக்காவில் விவாதிக்கப்படுவதுபோல் விரிவாகவும் தீவிரமாகவும் வேறு எங்கும் விவாதிக்கப்படுவதில்லை.

பத்திரிகை விமரிசகர்களை ஏற்படுத்தியது அமெரிக்காவின் குறிப்பிடத் தக்க உபயமாகும். பத்திரிகைகளின் கொள்கை எதுவாக இருந்தாலும் பிரச்னைகளை

இவர்கள் சுயேச்சையாக விவாதிக்கின்றனர். ரேடியோ விலும் இதே போன்ற விமரிசனங்கள் நடைபெறுகின் றன. ஆகையால் விவாதத்திற்கு வரும் பிரச்னைகளின் பல்வேறு அம்சங்களும் பொது மக்களுக்குக்கிடைத்து விடுகின்றன. இறுதியில் இவை, இவற்றின் மதிப்புக் கேற்றபடி முடிவாகின்றன.

அயல் நாட்டுக் கொள்கையிலும் அமெரிக்கா தன் சக்தியை நிரூபித்திருக்கிறது. ஒரு நாகரிகம் ஜீவனுள் ளதா சாக்காடு கண்டதா என்பதை நிர்ணயிப்பதற்கு அதில் தீவிரமும், நிலைமைக் கேற்றபடி வளைந்து கொடுக்கும் தன்மையும் இருக்கின்றனவா என்பதை கவனிக்க வேண்டு மென்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். அமெரிக்கா ஒதுங்கி நிற்கும் கொள்கையை 1930-40-ல் கைவிட்டு உலக அரசியலில் ஈடுபடத் தொடங்கியதுமுதல் இந்த அம்சங்கள் அதன் அயல் நாட்டுக் கொள்கையில் உள்ளன என்பதை, அதைக் கடுமையாகக் குறை கூறுபவர்கள்கூட ஒப்புக் கொள்வார்கள்.

சுமார் பதினைந்து வருஷங்களுக்குமுன், அயல் நாட்டு விவகாரங்களில் சிக்கிக் கொள்ளக் கூடா தென்று பெரும்பாலான அமெரிக்க மக்கள் தீவிரமாகக் கருதியதை நினைத்துப் பார்த்தால் நிலைமையின் தேவைக் கேற்ப மாறும் அமெரிக்கர் கொள்கையின் தன்மை விளங்கும். இப்பொழுது அமெரிக்க சிப்பாய் கள் ஐரோப்பாவிலும், பிலிப்பைனிலும், ஜப்பானிலும், கொரியாவிலும் இருக்கின்றனர். அமெரிக்க மனப் பான்மையில் ஏற்பட்டுள்ள மாறுதலுக்கு இதைவிடச் சிறந்த உதாரணம் வேறு இருக்க முடியாது. ஐரோப் பாவுக்கு மார்ஷல் திட்ட உதவிபற்றி பல ஐரோப்பிய நாடுகளிலும் இறுதியில் அமெரிக்காவிலும்கூட குறை கூறப்பட்டன. இருந்தாலும், இதற்கு முன்னால் வேறு எந்த நாடும் இவ்வளவு பொருள்களையும், பணத்தை

யும் மற்ற நாடுகளுக்குக் கொண்டு போய்க் கொடுத்த தில்லை யென்பதை இந்தக் குறை கூற்றுக்கள் மறைத்துவிட முடியாது. இது நீண்ட கால தன்னலம்தான். ஆனால் இவ்வளவு தீர்க்க திருஷ்டியுடன் கூடிய தன்னலத்தைச் சரித்திரத்தில் வேறு எங்கும் காண முடியாது.

யுத்தப் பிற்கால அமெரிக்க அயல் நாட்டுக் கொள்கையிலும் இதேபோல்தான் முடிவுகள் செய்யப்பட்டன. கிரீஸ், துருக்கி இவற்றிற்கான ட்ரூமன் சித்தாந்தம், பெர்லினுக்கு விமான மூலம் பொருள்கள் சப்ளை, நாலம்ச திட்டமும் பிற்பட்ட நாடுகளுக்குத் தொழில் நுட்ப உதவியும், கம்யூனிஸ்ட்டுகளால் தாக்கப்பட்ட தென் கொரியாவுக்கு உதவி செய்வதென்று திடீரெனச் செய்யப்பட்ட முடிவு, மேற்கு ஐரோப்பியப் பாதுகாப்பில் ஜெர்மனியையும் சேர்ப்பதெனச் செய்யப்பட்ட முடிவு, ஐரோப்பிய ஐக்கிய இயக்கத்திற்கு அளிக்கப்பட்ட ஆதரவு இவையெல்லாம் அமெரிக்காவின் முன் நடவடிக்கை எடுக்கும் சக்தியையும், தைரியத்தையும் தீர்க்க திருஷ்டியையும் காட்டுகின்றன.

கம்யூனிஸம் பரவுவதைத் தடுப்பதில் அமெரிக்கா காட்டும் உறுதியையும், **1930-40**-ல் நாஜி ஜெர்மனியை ஒடுக்குவதில் காட்டப்பட்ட தயக்கத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். இதேபோல் கொரியாவில் ஆக்கிரமிப்பைத் தடுக்க அமெரிக்கா செய்த முடிவை, **1931**-ல் மஞ்சூரியாவிலும், **1935**-ல் எதியோப்பியாவிலும் ஆக்கிரமிப்பு நடந்தபொழுது மேற்கத்தி நாடுகள் செயலற்றிருந்த நிலையுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

கணக்குப் புத்தகத்தில் நஷ்டக் கணக்கும் இருக்கிற தென்பது உண்மைதான். சீனு கம்யூனிஸ்ட் நாடாக ஆனது நமது நடவடிக்கையில் தீர்க்க திருஷ்டி யில்லாததனுல் தான். நமது செயல்களில் இது மோசமான அம்சமாகும். ஆனுல் ஆயுதம் தாங்கி யுத்

தத்திற்குப் போவதைத் தவிர வேறு மாற்று யோசனை கூறியவர்கள் யாருமில்லை யென்பதையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆசிய விவகாரங்களையும், ஆசிய மக்களின் மனத்தையும் புரிந்து கொள்ளாதது அமெரிக்க அயல் நாட்டுக் கொள்கையின் ஒரு பலவீன மாகவே இருந்து வந்திருக்கிறது.

அமெரிக்க அயல் நாட்டுக் கொள்கையில் வேறு சில குறைபாடுகளையும் சுட்டிக் காட்டலாம். ஆனால் இங்கு அது முக்கியமில்லை. உலக அரசியலில் அமெ ரிக்கா முக்கிய பங்கு கொள்ளத் தொடங்கியது முதல் இதன் கொள்கையில் இளமையின் வேகம் நிறைந்திருக் கிறது என்பதுதான் முக்கியம்.

இவ்விதம் மகத்தான பிரச்னைகளைச் சமாளிக்கும் சக்தி தனக்கு உண்டு என்பதை அமெரிக்கா நிரூபித்து விட்டது. பெரிய தேசங்களும் நாகரிகங்களும் உன் னத நிலையில் இருந்த பொழுதுதான் அவற்றினிடம் இந்தச் சக்தி இருந்தது.

சமீப காலம் வரை அமெரிக்காவின் சக்தி உல காயதப் பிரச்னைகளிலேயே செலவாகிக்கொண் டிருந் தது. இதனால் ஆத்மீக நடவடிக்கைகளுக்கும், குறிப் பாக - மதத்திற்கும், கலைகளுக்கும் செலவிடப்பட்ட சக்தி குறைவே. அமெரிக்க மனோபாவமும், வாழ்க் கையின் வேகமும், மத நிஷ்டைக்கோ, கலைச் சிருஷ் டிக்கோ உகந்தவையல்ல.

இருப்பினும் சென்ற சில வருஷங்களில் கலை ஆர்வ மும், சாதாரணமாக உண்டாக்கப்பட்ட கலைகளின் தரமும் அதிகரித்து வந்திருக்கின்றன.

"சென்ற கால் நூற்றாண்டில் இலக்கியத் துறை யில் அமெரிக்காவுக்குச் சமமாகச் சிருஷ்டித்திருப்பதாக வேறு எந்த நாடும் பெருமைப்பட முடியாது" என்று, பேராசிரியர் பி. கே. போமன் என்ற ஐரோப்பிய கலா சார விமரிசகர் கூறுகிறார்.

நாடகத் துறையில் ஐரோப்பிய நாடக மேடையை அமெரிக்கா தன் நாடகங்களின் தரத்தினுல் பாதித்துள்ளது. கதை இலக்கியத்தில் ஸிங்க்ளேர் லூயி, ஜான் மர்க்கண்ட், எர்னெஸ்ட் ஹெமிங்வே, ஜான் ஸ்டீன்பெக், வில்லியம் பாங்க்னர் முதலியவர்களின் எழுத்துக்கள் சாக்காட்டைக் காட்டவில்லை. தற்கால அமெரிக்க சமூகத்தின் பிரத்யேக அந்தஸ்தைப் பிரதி பலிக்கும் இலக்கியத்தையே எழுதுகின்றனர்.

அமெரிக்க சங்கீதம் வேறு எங்கும் இருப்பதற்குச் சமமான நிலையை அடைந்துள்ளது. அமெரிக்காவில் உள்ள சங்கீத வித்வான்களில் பெரும்பாலானவர்கள் ஐரோப்பாவிலிருந்து வந்தவர்கள் தான். ஆனால் இவர்களுடைய சாதனை, சங்கீதச் சூழ்நிலை நன்ருக உள்ள இடத்தில்தான் சாத்தியம்.

இன்னும் முக்கியமான சாதனைகளை அமெரிக்கா சாதித்திருப்பதாக நாம் கருதும் இரு துறைகள் சினிமாவும் கட்டிடக் கலையுமாகும். மட்ட ரகமான சினிமாக்களை நாம் இங்குக் குறிப்பிடவில்லை. இவற்றைப் பார்க்கும் வெளி நாட்டு மக்கள், இவை அமெரிக்க வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாகத் தவருக நினைக்கின்றனர்.

நம் காலத்தின் போக்கையும், பிரச்னைகளையும் பிரதிபலிக்கும் உன்னதமான கலைச் சிருஷ்டிகளைச் செய்ய முயற்சிக்கும் சில படத் தயாரிப்பாளர்களையே நாம் இங்குக் குறிப்பிடுகிறேம். தவிர, கார்ட்டூன் படங்கள் உண்மையான அமெரிக்கக் கலையாகும். ஒரு புதிய கலை வடிவம் தோன்றுவது அந்த நாகரிகத்தின் ஆக்க சக்தியைக் காட்டுகிறது.

புதிய பாணிகளை உண்டாக்கும் சக்தியைப் பிரதி பலிக்கும் மற்றொரு கலை, கட்டிடக் கலையாகும். இந்தத் துறையில் பிராங்க் லாய்ட் ரைட்டின் பெயர் தான் நமக்கு முதலில் ஞாபகம் வருகிறது. இந்த நூற்றாண்

டின் ஆரம்பத்திலேயே அவர் கட்டிடக் கலையில் ஒரு புதிய பாணியைச் சிருஷ்டித்தார். இவருடைய கலை அமெரிக்காவைவிட ஐரோப்பாவில் அதிகம் பாராட்டப் பட்டது. அமெரிக்காவில் இப்பொழுது கட்டிடக் கலைஞரைப் பயன்படுத்திக் கொள்வது ஓர் ஆடம்பர விஷயமாகவே கருதப்படுகிறது.

இந்தக் குறைபாடுகள் இருந்தும், கட்டிடக் கலையில் கோதிக் அல்லது ரோமனிக் பாணியுடன் ஒப்பிடக் கூடிய ஒரு புதிய பாணியைக் கண்டுபிடித்த கலைஞர் ஒருவரை அமெரிக்கா பெற்றெடுத்தது.

ராக் பெல்லர் ஸெண்டர், லீவர் பிரதர்ஸ் மாளிகை முதலிய கட்டிடங்களைப் பற்றிப் பெருமைப் படும் ஒரு நாட்டில் கலைத் திறமை நசித்து விடும் என்ற அபாய மில்லை.

# எதிர்கால அமைப்பு

## 13

### ஒரே உலகம்

இந்த நூலின் முதல் இரு பாகங்களில் நாகரிகங்களின் போக்கு பற்றிய சில சித்தாந்தங்களை ஆராய்ந்து அவற்றின் முக்கியமான தன்மைகளைக் கண்டோம். இந்த அடிப்படையில் மேற்கத்தி நாகரிகத்தின் தற்போதைய நிலை என்ன என்பதை நிர்ணயித்து, இதன் ஆக்க சக்தியை அளவிட 2-ம் பாகத்தில் முயன்றோம். ஸ்பெங்லர் கூறும் உலக சமாதான கட்டத்திற்கும் முன்னுள்ள நிலையில் நம் சமூகம் இருக்கிறதென்ற முடிவுக்கு வந்தோம்.

இந்தக் கருத்தை டாய்ன்பி, 1952 அக்டோபரில் எடின்பரோவில் நிகழ்த்திய பிரசங்கத்தில் ஊர்ஜிதம் செய்தார். "இன்னும் அரை நூற்றுண்டுக்குள் உலகம் முழுவதும் அரசியல் ரீதியாக ஒன்றுபட்டு, எதிர்க்க முடியாத ராணுவ பலம் ஒருவர் கைக்குப் போய்ச் சேரும்" என்று அவர் சொன்னார். மற்றொரு உலக யுத்தத்தின் மூலம் இந்த ஒற்றுமை ஏற்படுமா அல்லது அது இல்லாமலே ஏற்படுமா என்பதை அவரால் சொல்ல முடியவில்லை. .

ஆனால் இதே முடிவுக்கு வருவதற்குச் சிக்கலான

சரித்திர தத்துவங்களை ஆராய வேண்டிய அவசியமே யில்லை. தகவல் போக்குவரத்தின் வேகத்தைக் கொண்டு பார்க்கும் பொழுது உலகம் வேகமாகச் சுருங்கி வருகிறது என்பது தெரியும். தற்காலத்தில் உலகத்தை எட்டே நாளில் சுற்றி வந்துவிட முடியும். கூடிய சீக்கிரம் ஒலியைவிட வேகமாகப் பிரயாணம் செய்து 8 மணி நேரத்தில் உலகத்தைச் சுற்றி வந்து விடக் கூடிய சாதனங்கள் கண்டு பிடிக்கப்படும்.

இவ்விதம் அடிப்படையான மாறுதல்கள் மேற்கத்தி சமூகத்தின் அமைப்பையும் உண்மையில் உலக சமூகத்தின் அமைப்பையும் பாதித்து வருகிறது. உலகம் தன் வலது கையை இடது கையினால் வெட்டிக் கொள்ள முடியாத நிலைமை ஏற்பட்டு வருகிறது. தற்காலத்தில் இருப்பது போன்ற விரிவான அளவில் யுத்தம் நடத்துவது, ஒரு பறவை தன் இருதயத்தைத் தன் மூக்கினாலேயே குத்தி எடுப்பதற்கு ஒப்பாகும்.

தற்கால யுத்தத்தின் அளவும் சிக்கலும் தேசீய சக்தியை அளவிட முடியாதபடி விழுங்கி விடுவதால், எந்த நாடும் விபரீத விளைவுகளில்லாமல் யுத்தத்தை அதிக காலம் ஆதரிக்க முடியாது. பிரம்மாண்டமான நாச சக்தி மனிதனுக்குக் கிடைத்துள்ளது. நாகரிகம் தன்னைத்தானே அழித்துக் கொள்ளாமல் யுத்தத்தின் இந்த சக்தியை அளவின்றி உபயோகிக்க முடியாது. யுத்தத்திற்கான முஸ்தீபுகளைச் செய்வதற்கே பிரும்மாண்டமான பணமும் சக்தியும் செலவாகிறது. எந்தப் பொருளாதாரமும் இதை அதிக நாள் நீடிக்கச் செய்ய முடியாது. தற்காலிக நெருக்கடி காலங்கள் தவிர மற்ற காலங்களில் எந்த நாடும் தங்கள் பட்ஜெட்டில் பாதியைப் பாதுகாப்புக்காக ஒதுக்க முடியாது. யுத்தத்தில் தோற்றுப் போன நாடுகளைப் புனருத்தாரணம் செய்வதற்கு வெற்றி பெற்ற நாடுகளும் தோல்வியடைந்த நாடுகளும் அசாதாரணமான முயற்சி செய்ய

வேண்டி யிருக்கிறதென்பது இரண்டு உலக யுத்தங்களின் அனுபவங்களிலிருந்து தெரிகிறது. ஏனெனில் உலகத்தில் ஒரு நாட்டை மற்ருெரு நாடு நம்பி யிருக்க வேண்டிய அவசியம் மிகவும் அதிகரித்து விட்டதால் தோற்ற நாடு மண்ணைக் கௌவிக் கொண்டிருக்கும் படி வெற்றி பெற்ற நாடு விட்டு வைக்க முடியாது.

பழைய நாகரிகங்கள் சிலவற்றை அழித்த அதே அபாயம் நம் நாகரிகத்தையும் பயமுறுத்துகிறது. அதாவது இதன் சக்தியில் பெரும் பகுதி பயனற்ற காரியங்களுக்காக எடுத்துக் கொள்ளப்பட்டு விடுகிறது. இந்தச் சக்தி பிரமிட் கட்டுவதற்குப் பயன்படுகிறதா அல்லது அணு குண்டும் ஹைட்ரஜன் குண்டும் தயாரிப்பதற்குப் பயன்படுகிறதா என்பது முக்கியமல்ல. அணு சக்தியை ஆக்க வேலைகளுக்கும் பயன்படுத்த சாத்தியமிருக்கிறது என்பது ஒன்றுதான் வித்தியாசம். புதிய ஆக்க வேலைகளுக்குப் பயன்படுத்தக் கூடிய ஒரு மகத்தான சக்தியைக் கண்டு பிடித்திருப்பது மேற்கத்தி நாகரிகத்தின் மற்ருெரு பிரும்மாண்ட சாதனையாகும்.

அணுசக்தி வெளியிடப்பட்டதிலிருந்து இந்த நிலைமைகள் ஏற்பட்டிருக்கின்றன. எதிரி நாட்டை அடியோடு அழிக்கக்கூடிய ஒரு சக்தியை மேற்கத்தி விஞ்ஞானம் சரித்திரத்திலேயே முதல் முறையாகக் கண்டு பிடித்திருக்கிறது. நாகரிகத்தையேகூட இது அழித்துவிடக்கூடும். இத்தகைய சக்தி என்றென்றும் ஒன்றுக்கொன்று விரோதமான இரு கோஷ்டிகளிடம் இருந்து கொண்டிருக்க முடியாது. சரித்திரமும் பகுத்தறிவும் இதை அறிவுறுத்துகின்றன. யுத்தத்தின் சர்வ நாசத்தின் மூலமோ அல்லது இந்தப் பயங்கர ஆயுதங்களை உபயோகிப்பதில்லை யென்ற ஒப்பந்தத்தின் மூலமோ தான் இந்த அபாயம் ஒரு முடிவுக்கு வரும். யுத்தம் மூண்டால் அதில் மேற்கத்தி நாடுகளே

வெற்றிபெறும். இதற்கான காரணங்கள் பின்னர் விளக்கப்படும்.

தற்கால யுத்தங்களின் விளைவுகள் ஒருபுறமிருக்க, நாடுகள் ஒன்றையொன்று நம்பியிருக்க வேண்டிய அவசியம் தெளிவாகத் தெரிகிறது. கிழக்கு ஜெர்மனி இல்லாமல் மேற்கு ஜெர்மனி வாழமுடியாது. அதே போல், விவசாய மயமான கீழ்த்திசை நாடுகள் இல்லாமல் தொழில் மயமான ஐரோப்பாவும் வாழமுடியாது. மேற்கத்தித் தொழில் நுட்ப உதவியில்லாமல் ஆசியா தன் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ள முடியாது. தென் அமெரிக்காவின் பொருள்களில்லாமல் வட அமெரிக்கா வாழமுடியாது. அமெரிக்காவில் மஹத்தான அளவில் உற்பத்தியாகும் பொருள்கள் இல்லாமல் உலகத்தில் நாகரிகமான பகுதி எதுவும் தன் வழக்கமான வாழ்க்கையை வாழமுடியாது.

இந்த சந்தர்ப்பங்களினால் உலக சமாதானமும் ஏதாவது ஒருவிதமான உலக அமைப்பும் வெறும் ஆசையாக மட்டும் இல்லாமல் உயிர் வாழ்வதற்கான அவசியமாகவும் ஆகும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது. "ஒரே உலகம்" இன்னும் ஏற்படவில்லை. ஆனால் இப்பொழுதோ இன்னும் சிறிது காலம் கழித்தோ இது ஏற்படுவது தவிர்க்க முடியாதது.

எந்த கச்சிதமான திட்டம் அல்லது சாஸனம் அல்லது அரசியல் திட்டத்தையும் அமுல் நடத்துவதன் மூலம் ஐக்கிய உலகத்தை ஏற்படுத்த முடியாது. பிரத்தியக்ஷ சம்பவங்களினாலும், அரசியல், பொருளாதார அவசியங்களினாலும் இது உருவாகி வருகிறது. அமைதியான முறையிலோ அல்லது பலாத்காரத்தின் மூலமோ இது வந்தே தீரும்.

கருத்தளவில் ஒரு மூன்றாவது சாத்தியமும் உண்டு. கம்யூனிஸ்ட் நாடுகளுக்கும் ஜனநாயக நாடுகளுக்குமிடையே நடைபெறும் கெடுபிடிப் போர் கால

வரையறை யில்லாமல் நீடிக்கக் கூடும். இடையிடையே கொரியாவிலும் இந்தோ சீனுவிலும் ஏற்பட்டது போன்ற எல்லைத் தாக்குதல்கள் நடைபெறலாம். இப்படி நடக்குமா ?

தற்போதைய நெருக்கடி எவ்வளவு காலம் நீடிக்குமென்று ஒருவராலும் ஜோஸ்யம் சொல்ல முடியாது. ஆனால் இது வெகு காலம் நீடிக்குமென்று இந்நூலின் ஆசிரியருக்குத் தோன்றவில்லை. தற்போதைய நிலைமை, பழங்கால நிலைமையிலிருந்து அடிப்படையில் இரண்டு விதத்தில வித்தியாசப் படுகிறது. பூரண யுத்தத்தின் அளவு ஒன்று; எல்லா நாடுகளும் ஒன்றையொன்று நம்பியிருக்க வேண்டியிருப்பது இரண்டாவது.

பழைய காலத்தில் எல்லையோரத்தில் போர் நடந்து கொண்டிருந்தாலும் நாட்டில் வாழ்க்கை கிட்ட தட்ட சாதாரண அளவில் நடைபெறமுடியும். ஆனால் தற்காலத்தில் எல்லையோரத்தில் மூளும் போர் பூரண யுத்தமாக மாறிவிடும்.

இரண்டாவது வித்தியாசத்தின்படி சிறிதுகாலம் யுத்தமில்லாமலிருந்தால் ஒத்துழைப்பினாலும் பரஸ்பர செல்வாக்கினாலும் ஓரளவு ஐக்கியம் ஏற்பட்டே தீரும். ஆகையால் தற்போதைய கெடுபிடியான நிலைமை நிரந்தரமாக நீடிக்குமென்று தோன்றவில்லை. பல வருஷங்கள் நீடிக்கலாம்; நூற்றாண்டுக் கணக்கில் நீடிக்க முடியாது. சமாதான முறையிலோ பலாத்கார முறையிலோ இது முடிவடைந்தே தீரும்.

## 14

### சமாதான வழி : கிழக்கு மேற்கு ஒற்றுமை

புராண காலத்தில் போர்த் தலைவர்கள் தங்கள் சேனைகளை அணிவகுத்து நிறுத்திவிட்டு, யுத்தத்தை

தொடங்குவதற்குமுன்ஞல் எதிரியை அழைத்து ரத்தப பெருக்கில்லாமல் பிரச்ஜனயைத் தீர்த்துக்கொள்ளச் சொல்வதுண்டென்று ஹோமர் தமது காவியங்களில் கூறுகிஞர். இப்பொழுதும் அப்படிச் செய்யலாம். நியாய புத்தியை உபயோகிக்கக் கோருவதற்கு இன்னமும் அவகாசம் இருக்கிறது. கம்யூனிஸ்ட் நாடுகளும் ஜனநாயக நாடுகளும் ஒன்று சேர்ந்து வாழக் கூடாது என்பதற்குக் காரணமில்லே. மற்றவரை ஒழிக்காமல் இரு தரப்பினரும் சந்தோஷமாகவும் க்ஷேமமாகவும் ஏன் இருக்கமுடியாது? உலகம் முழுவதிலும் கம்யூனிஸம் ஆதிக்கம் செலுத்த வேண்டுமென்ற மார்க்ஸ்-லெனின் உலகப் புரட்சிக்கொள்கை மட்டும் இந்த ஆனந்தமான நிலேமையில் குறுக்கிடாமல் இருக்க வேண்டும். லக்ஷியக் கூச்சல்களில் இந்த உண்மை மறைந்து விடாமலிருக்கவேண்டு மென்பதற்காக இதைக் கூறுகிறேம்.

"சோவியத் குடியரசும், ஏகாதிபத்திய நாடுகளும் சேர்ந்தாற்போல் வெகுகாலம் இருந்து வருவதென்பது நினைக்கக்கூட முடியாத விஷயம். இவற்றில் ஏதாவது ஒன்று இறுதியில் வெற்றிபெற வேண்டும். இந்த முடிவு வருவதற்கு முன் சோவியத் குடியரசுக்கும் மற்ற பூர்ஷ்வா நாடுகளுக்கு மிடை-யில் பல பயங்கரமான போராட்டங்கள் தவிர்க்க முடியாதவை" என்று லெனின் 1919-ல் கம்யூனிஸ்ட் கட்சியின் எட்டாவது மகாநாட்டிற்கு மத்தியக் கமிட்டியின் அறிக்கையில் எழுதிஞர். "உலக புரட்சியை வளர்ப்பதே ரஷியப் புரட்சியின் மகத்தான பிரச்ஜன" என்று ஸ்டாலின் சிறிது காலத்திற்குப்பின் அறிவித்தார். கம்யூனிஸ்ட் அகிலத்தின் வேலேத் திட்டத்திலும் இதே கருத்து காணப்படுகிறது. "கம்யூனிஸ்ட் அகிலத்தின் இறுதி லட்சியம் உலகக் கம்யூனிஸமே" என்கிறது அது. இந்த லட்சியம் நீடிக்கும்வரை அரசியல் முறைகள்

சேர்ந்து வாழ்வதற்கு, தவிர்க்கமுடியாத பெரும் இடையூருகவே இது இருந்துவரும். ஏனெனில் மற்றெல்லா முறைகளையும் அழிப்பதே கம்யூனிஸத்தின் லட்சியம்.

உலக கம்யூனிஸத் தலைவர்கள் தற்காலிகத் தந்திரமாக இந்த நோக்கத்தை நிறுத்திவைக்கத் தயாராக இருக்கிருர்களே தவிர, இதை அடியோடு கைவிடுவதற்கான அறிகுறியைக் காணவில்லை. இருப்பினும், இப்படி நேரக்கூடுமென்ற சாத்தியத்திற்குத் தயாராக நாம் எப்பொழுதும் இருந்துவரவேண்டும். ஸ்டாலின் மரணத்திற்குப்பின் ரஷியாவில் ஏற்பட்டுள்ள அரசியல், பொருளாதார தலைமை மாறுதல்களினுல் வெளி உலகத்திற்குக் கம்யூனிஸ அபாயம் சிறிது காலம்வரை இல்லாமலிருக்கலாம். சர்வாதிகார நாடுகளில் பொருளாதார நெருக்கடி, உள்நாட்டு பூசல்கள், தலைமை மாறுதல்கள், அதிகாரப் போட்டிகள், இவையெல்லாம் நிகழாதவையல்ல. இன்னும் வெகுகாலம்வரை யுத்தம் நடத்துவது உசிதமல்லவென்று கம்யூனிஸத் தலைவர்கள் நினைக்கும் அளவுக்கு சுதந்திர நாடுகள் தங்கள் பலத்தை அதிகரித்து வருகின்றன. அவ்விதம் நிகழ்ந்தால், அமைதியாகச் சேர்ந்து வாழ்வதற்கு சுதந்திர உலகம் நிச்சயமாக எவ்விதம் இடையூறும் ஏற்படுத்தாது. மேற்கத்திராஜதந்திரிகளின் பேச்சுகளும் செயல்களும் பலமுறை இதை நிரூபித்திருக்கின்றன.

உண்மையான அமைதியுடனும், சுதந்திரமான போக்குவரத்துடனும் கூடிய காலம் வருமாஞல் இந்த இருதரப்பு நாடுகளும் ஒன்றின் வாழ்க்கையை மற்ருென்று பாதித்து கருத்துக்களையும் மாற்றத்தொடங்கும். இரு முறைகளிலும் உள்ள நல்ல அம்சங்கள் ஒன்றையொன்று பாதித்து, இரண்டுக்குமிடையே உள்ள இடைவெளியைக் குறைத்து இவை ஒன்றையொன்று விரோதமாக பாவிக்காத நிலைமை ஏற்படும்.

ஐரோப்பாவில் பல நாடுகள் மார்க்ஸீய, ஜனநாயக

லட்சியங்களின் அம்சங்களை வெற்றிகரமாக ஒன்று சேர்த்திருக்கின்றன. டென்மார்க், ஸ்வீடன், நார்வே ஆகிய மூன்று நாடுகளும் வெகுகாலமாக மார்க்ஸீய சோஷலிஸத்தின் அம்சங்களையும், பொருளாதார, தனிநபர் சுதந்திரத்தின் அம்சங்களையும் பிரயோகிக்கும் சர்க்கார்களால் ஆளப்பட்டு வருகின்றன. இருப்பினும் பல ஆண்டுகளாக இந்த நாடுகளில் வாழ்க்கைத்தரம் உயர்வாகவும், செழிப்பு நிரந்தரமாகவும், வசதிகள் மக்களிடையே கூடியவரை சமமாகப் பகிர்ந்து கொடுக்கப்பட்டும் இருக்கின்றன. பெல்ஜியத்தில் இதே போன்ற ஆட்சியில் மிக உயர்ந்த வாழ்க்கைத்தரம் இருந்து வருகிறது. ஹாலந்தில் சோஷலிஸ்ட், கிறிஸ்தவ, சுதந்திர முயற்சித் தத்துவங்களின் பிரதிநிதிகள் அடங்கிய சர்க்கார்கள் நடந்து வந்திருக்கின்றன. அந் நாடு அற்புதமான முறையில் மீட்சி பெற்றிருக்கிறது. இந்த நாடுகளில் வேறு அரசியல் பொருளாதார முறைகளை அனுஷ்டித்திருந்தால் இன்னும் நல்ல பலன் கிடைத்திருக்குமென்று இந்த நாடுகளுக்குள்ளும் வெளியிலும் உள்ள விமரிசகர்கள் கூறலாம். ஆனால் அது சரியாவென்று விவாதிப்பது இங்கு நோக்கமல்ல. இரு முறைகளையும் ஒன்று சேர்ப்பது சாத்தியமா என்பதுதான் இங்கு ஆராயப்படும் விஷயம். இந்த இரு கேள்விகளுக்கும் "முடியும்" என்றே, மேலே கண்ட விவாதத்திலும் மற்ற அனுபவங்களிலும் பதில் அளிக்கப்பட்டிருக்கிறது.

இந்த இருமுறைகளையும் ஆதரிப்பவர்கள் விரும்பியோ விரும்பாமலோ, தெரிந்தோ தெரியாமலோ தங்களுக்கு எதிரான தத்துவத்தின் அம்சத்தைக் கலக்காமலில்லை.

அரசியலில் ஜனநாயகங்கள், எல்லா அதிகாரமும் பார்லிமெண்ட் மூலம் மக்களிடமிருந்தே வருகிறதென்ற தத்துவத்தைப் பாதுகாத்தபோதிலும் பல

வருஷங்களாக இவற்றில் மத்திய சர்க்காரின் அதிகாரம் அதிகரித்து வந்திருக்கிறது.

பொருளாதாரத்தில், எல்லா ஜனநாயகங்களிலும் சுதந்திரமான போட்டி பலதரப்பட்ட அளவுகளில் இருந்து வருகிறது. ஆனால் இதற்கு தேசீய வேலி போடப்பட்டிருக்கிறது. யுத்த காலங்களில் இது சர்வாதிகாரத் தன்மை பெறக்கூடும். அமெரிக்காவில் கூட, புதிய ஏற்பாட்டுக்குப் பின் வழி காட்டும் பொருளாதாரக்கொள்கை அடியோடு மறைந்துவிடவில்லை.

ஜனநாயக நாடுகளில் வர்த்தகமும் கைத்தொழில்களும் தனி நபர்களிடமே உள்ளன. ஆனால் ஜேம்ஸ் பர்ன்ஹாம் கூறியதுபோல, தனிப்பட்டவர்கள் நடத்தும் தொழில்களில்கூட, உண்மையான அதிகாரம் பங்குதாரர்களிடமிருந்து மானேஜர்களின் கைக்கு மாறிவிட்டது. எல்லா அதிகாரமும் உற்பத்தி சாதனங்களும் இறுதியில் சர்க்காரின் கைக்கு மாறவேண்டுமென்ற முடிவுக்கு வராமலே நாம் இந்தப் போக்கை உணரலாம். அதிகாரம் சர்க்காருக்கும் மானேஜர்களுக்கும், நிர்வாக அதிகாரிகளுக்கும் தொழிலாளர் தலைவர்களுக்கும் மாறும் போக்கே இருந்து வந்திருக்கிறது. இது இன்னமும் நீடிக்கிறது. சர்வாதிகார ஆட்சியின்கீழ் உள்ள சமூகங்களுக்கும் இதற்குமிடையில் உள்ள அடிப்படை வித்தியாசம் என்னவென்றால், இங்கு அதிகாரம் பிறரால் திணிக்கப்படுவதில்லை. மக்களிடமிருந்து அதாவது வாக்காளர்கள், பங்குதாரர்கள், தொழிலாளர்கள் முதலியவர்களிடமிருந்து வருகிறது.

தவிர, ஜனநாயக சமூகங்களில், அதிக வருமானம் உள்ளவர்களுக்கு மேன்மேலும் அதிக வரிகள் விதிப்பதன் மூலமும், சமூக சட்டங்களின் மூலமும் வர்க்கங்களுக்கிடையே உள்ள வித்தியாசம் குறைக்கப்பட்டு வருகிறது. ஆகையால் ஒரு காலத்தில் மார்க்ஸிஸ்ட்

லக்ஷியமாக இருந்த சமூக சமத்துவத்திற்கு அதிக சமீபத்தில் ஜனநாயக சமூகங்கள் உள்ளன.

ஆனால் கம்யூனிஸ்ட் சமூகத்தில் இதற்கு நேர் விரோதமான போக்கைக் காண்கிறோம். முதலாளித் துவமுறை அல்லது பூர்ஷ்வா சமூகத்திற்கே உரிய வையான சிற்சில அம்சங்களை மீண்டும் ஏற்படுத்த அது முயற்சிக்கிறது. ''அதிகார வர்க்கமும் நிரந்தர ராணுவமும் பூர்ஷ்வா ஆட்சியின் சின்னங்கள்'' என்று லெனின் கூறியிருக்கிறார். இன்று உலகத்திலேயே மிகப் பெரிய அதிகார வர்க்கமும், மிகப்பெரிய ராணு வமும் ரஷியாவில்தான் உள்ளன. 1921-ம் வருஷத் திய புதிய பொருளாதாரக் கொள்கைக்குப்பின் சுதந் திரப் பொருளாதார முயற்சியின் சில அம்சங்களை ரஷியா அமலுக்குக் கொண்டுவர வேண்டிய நிர்ப் பந்தம் ஏற்பட்டது. பலமான குடும்ப பந்தம், அதிகக் குழந்தைகள் பெறுவது, குறைப் பிரசவத்தைத் தடுப் பது (சோவியத் யூனியன் இதை முன்னால் ஆதரித்து வந்தது.) மத விஷயத்தில் சகிப்புத் தன்மை, வருமான வரி, உபசார அதிகாரிகளை மீண்டும் நியமித்தல், சம யோசித உடைகள், இங்கிதங்கள் முதலிய பூர்ஷ்வா விஷயங்களை அது மறுபடியும் அமலுக்குக் கொண்டு வந்திருக்கிறது.

வேலை காரணமாக ரஷியாவில் இரண்டு வருஷம் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு 1951-ல் மாஸ்கோவி லிருந்து திரும்பிவந்த ஸர் டேவிட் கெல்லி நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையில் எழுதியுள்ள கட்டுரையில், ''ரஷியாவில் எதிர்ப் புரட்சி'' பற்றிக் குறிப்பிட்டிருக் கிறார். ஆரம்ப கால புரட்சிக்காரர்கள் சர்வதேசியம், தேச பக்தி, விவாகம், குடும்பம், கல்வி, மதம், பாட் டாளியின் அதிகாரம், இலக்கியத்திலும் கலைகளிலும் புதுமை மோகம் முதலியவற்றில் மேற்கத்திய சோஷ லிஸத்தைச் சேர்ந்த கருத்துக்களையே கடைப்பிடித்து

வந்தனர். இவை ஒவ்வொன்றிலும் சம்பிரதாயமான சோஷலிஸ்டு கருத்துக்களுக்கு நேர் விரோதமான அடிப்படையில் புதிய சோவியத் ஆட்சி நிறுவப்படுகிறது. இந்த நிலையை "எதிர்ப் புரட்சி' என்று தாராளமாக அழைக்கலாம்.

"தார்மீகக் கொள்கைகள், குடும்பம் முதலியவற்றில் எனக்குத் தெரிந்தவரை ரஷியா நிச்சயமாக மிகவும் பிற்போக்காகவும், 'வைதீக'மாகவும் ஆகிவிட்டது.

"எதிர்பாராத அடிப்படையான மாறுதல் என்னவென்றால், சமூக சமத்துவ லட்சியத்துடன் கூடிய பாட்டாளி வர்க்கம் நடை முறையில் கைவிடப்பட்டுவிட்டதுதான். சமூக சமத்துவத்தை நோக்கி மேற்கத்தி நாடுகள் எவ்வளவுக்கெவ்வளவு வேகமாக முன்னேறுகின்றனவோ அவ்வளவு வேகமாக அதிலிருந்து ரஷியா விலகிச் சென்று கொண்டிருக்கிறது" என்கிறார் ஸர். டேவிட் கெல்லி.

இரும்புத் திரையைச் சிறிது உயர்த்தினால்கூட நல்ல காற்று உள்ளே வீசி ரஷியாவின் வாழ்க்கையை இந்தப் பக்கம், புதிய காற்று வீசும் பக்கம் வளரச் செய்யக் கூடும். மற்ற நாகரிகங்களுக்கிடையில் ஏற்பட்ட தொடர்பைப் போலவே இவற்றிற்கிடையிலும் போராட்டம் நடைபெறும். இதன் முடிவு, இரு கருத்துக்களின் பலத்தையும் பொறுத்ததாக இருக்கும்.

இத்தகைய போராட்டத்தைப் பற்றி மேற்கத்தி நாகரிகம் பயப்பட வேண்டியதில்லை. உண்மையில் அதை வரவேற்க வேண்டும். இதன் பலவீனமான இடங்களைத் தாக்குவதென்றால், அதற்குப் போதிய கருத்துக்கள் தான் தோன்ற வேண்டும்.

மேற்கத்தி நாகரிகம் ஆரோக்கியமாகவும் பலமாகவும் இருக்கிறதென்றால் கருத்துப் போராட்டத்தைப் பற்றி அது பயப்பட வேண்டியதில்லை. உலகா

யதத் துறையில் மேற்கத்தி நாடுகள் தங்கள் தொழில் நுட்ப வளர்ச்சியின் மூலம் இன்னும் உயர்ந்த வாழ்க்கைத் தரத்தை அளிக்க முடியும். லக்ஷியத் துறையில் கீழ்க் கண்ட கருத்துக்களின் வசதி அதற்கு இருக்கிறது. அதாவது, "சர்க்காருக்காக மனிதன் சிருஷ்டிக்கப்படவில்லை; மனிதனுக்காகத்தான் சர்க்கார் ஏற்பட்டிருக்கிறது; ஆட்சியாளர்களுக்குச் சேவை செய்வதற்காக மக்கள் ஏற்படவில்லை; மக்களுக்கு சேவை செய்வதற்காகவே ஆட்சியாளர்கள் ஏற்பட்டிருக்கின்றனர். மனிதன் தன் சிருஷ்டி கர்த்தாவின் லட்சியத்திற்குச் சேவை செய்வதற்காகத்தான் பிறந்திருக்கிறான்; சர்க்காரின் காரியங்களைச் செய்வதற்காகச் சிருஷ்டி கர்த்தா இருக்கவில்லை" என்ற கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டது மேற்கத்தி நாகரிகம்.

கடந்த காலத்தில் கருத்துப் போராட்டங்களை மேற்கத்தி நாடுகள் தட்டிக் கழித்ததில்லை. எதிர் காலத்திலும் தட்டிக் கழிக்கப் போவதில்லை. சமாதானப் பாதை எப்பொழுதும் திறந்திருக்கிறது.

## 15

### பலாத்கார வழி: யுத்தம் வந்தால், மேல் நாடுகள் வெல்லுமென்பது ஏன்?

யுத்தமா, சமாதானமா என்பது ரஷியாவையே பொறுத்திருக்கிறது. நாம் நியாயமான அளவு ஒத்துழைப்பு அளிப்போம். பலாத்காரத்தைத் தடுக்கும் அளவுக்கு நம் பலத்தை வைத்துக்கொள்ள முயற்சிப்போம். ஆனால் இதுதியாக முடிவு செய்வது நம் கையில் இல்லை. சமாதான வாதிகளின் கதியே இதுதான். ஆனால் துரதிருஷ்ட வசமாக, எதிர்த் தாக்குதலில்லாமல் தன் செல்வாக்கை விஸ்தரிக்கச் சந்தர்ப்பம்

கிடைக்கும் போதெல்லாம் விஸ்தரிப்பதிலேயே கம்யூனிஸம் குறியாக இருக்கிறது. 1939-ம் வருஷம் முதல் 1949-ம் வருஷம் வரை உள்ள பத்து வருஷங்களுக்குள் கம்யூனிஸத்தின் ஆதிக்கம் 17 கோடி மக்களிலிருந்து 77 கோடி மக்கள்மீது பரவி விட்டதென்பது போதிய அளவு உணரப்பட்டதாகத் தெரியவில்லை.

ஆகையால் சரித்திரத்தில் ஏற்கெனவே நடந்திருப்பதுபோல் யுத்தத்தின் மூலம் இரு உலகங்கள் ஒன்றுபடுவதற்கான சாத்தியமும் உண்டென்று கருத வேண்டியிருக்கிறது.

இந்த யுத்தம் வந்தால், மேற்கத்தி நாகரிகத்திற்கு இதுவே கடைசி யுத்தமாக இருக்கும். இது, மனித ஜாதியின் சரித்திரத்திலேயே, நிகழ்ந்திராத அளவு பயங்கரமானதாகவும் கொடியதாகவும் இருக்கும். இதற்கு முன் என்றும் கண்டிராத பயங்கரமான ஆயுதங்கள் உபயோகிக்கப்படும். மூன்ருவது உலக யுத்தம் வந்தால் அதில் ஈடுபடக் கூடிய மக்களின் தொகையைக் கவனித்தால் சென்ற கால சரித்திர யுத்தங்களில் ஈடுபட்ட மக்களின் தொகை அற்பமாகவே இருக்கும். ஒவ்வொரு தரப்பிலும் ஆண்களும் பெண்களும் சுமார் ஒரு கோடி பேருக்குமேல் ராணுவத்தில் சேர்ந்து போராடுவார்கள். மற்றும் கோடிக்கணக்கான சிவிலியன்கள் தங்களுக்கென ஒதுக்கப்பட்ட வேலைகளைச் செய்து வருவார்கள். பெரிய நகரங்களும், நாடுகளின் பெரும் பகுதிகளும் அழிந்து பாழாகும். பாழடைந்த பெர்லினையும், வார்ஸாவையும்போல் இன்னும் பல பாழ் நகரங்கள் தோன்றும். இதைவிட மோசமானது என்னவென்ருல், கொடுமைக்கு மக்கள் பணிய நேரும்.

ஆகையால் மேற்கத்தி நாகரிகம் கம்யூனிஸத்தினுல் அடியோடு அழிவதைத் தடுக்க யுத்தம் தவிர்க்க முடியாததென்ருல் அந்த பயங்கர அபாயத்தை ஏற்

றுக் கொண்டு தான் ஆகவேண்டும். இதனுல் ஏற் படும் பொருள் நஷ்டம், சர்வாதிகார ஆட்சிக்குப் பணி யும் மனித மனத்தைவிடப் பெரியதல்ல. சுதந்திரத்திற் காகப் போராடிய்வர்கள் தவிர்க்க முடியாத நிலே ஏற் படும்பொழுது சரணடைவதைவிட அழிவையே விரும்பி யிருக்கின்றனர். ஒரு நாடு அல்லது நாகரிகம் வேறு விதமாகத் தீர்மானித்தால் அது அழியும்.

ஆனுல் இவற்றில் ஏதாவது ஒருவிதமாகத் தீர்மா னிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டே தீரும். மேற் கத்தி உலகம் போராட வேண்டிய அவசியம் ஏற்பட்ட தென்ருல், அதைத் தவிர்க்க நாம் எதையும் விட்டு விட்டோமென்ருே, அதை வருவிப்பதற்கான எதையும் செய்தோமென்ருே இருக்கக் கூடாது.

தவிர, பொறுப்பு வாய்ந்தவர்களென்ற முறையில் விளேவுகளேப் பற்றியும் நாம் யோசிக்க வேண்டும். யுத்தம் நம்மீது திணிக்கப்பட்டால் மேற்கத்தி உலகம் வெற்றி பெறுமா ?

நிச்சயமாக வெற்றி பெறும். இதில் சந்தேகத் திற்கே இடமில்லே. முழு அளவில் நடைபெறும் யுத் தத்தில் இறுதியில் மேற்கத்தி உலகமே வெற்றி பெறும். இதற்கு நான்கு முக்கிய காரணங்கங் உண்டு. இரண்டு காரணங்கள் உலகாயதம் சம்பந்தமானவை. மற்ற இரண்டும் ஆத்மீகக் காரணங்கள்.

தொழில் சக்தி : முதலில் மேற்கத்தி நாடுகளிடம் அதிகத் தொழில் சக்தி உள்ளது. மூன்ருவது உலக யுத்தம் வந்தால் அது உற்பத்தி தொழில் நுட்ப விஞ் ஞானப் போராட்டமாகவே இருக்கும். அணுகுண்டு உற்பத்தியில் ஏகபோக நிலேமை போய்விட்ட போதி லும் தொழிற் போர்ச் சக்தியிலும் தொழில் நுட்ப முன் னேற்றத்திலும் கம்யூனிஸ்ட் உலகத்தைவிட மேற் கத்தி உலகம் அதிகம் முன்னேறி யிருக்கிறது. உற் பத்தித் துறையில் மேற்கத்தி உலகத்தின் உயர்வைக்

காட்டச் சில புள்ளி விவரங்கள் போதும்.

ரஷியாவிலும் அதன் ஆதிக்கத்தில் உள்ள ஐரோப்பிய நாடுகளிலும் 1953-இல் கச்சா எஃகு உற்பத்தி மொத்தம் 5 கோடி மெட்ரிக் டன்தான். ஆனால் அமெரிக்காவில் 112 கோடி டன் (முழு உற்பத்தி சக்தி); சுதந்திர ஐரோப்பாவில் 6·3 கோடி டன். அதே வருஷத்தில் ரஷியாவிலும் அதன் ஆதிக்கத்தில் உள்ள நாடுகளிலும் நிலக்கரி உற்பத்தி மொத்தம் 32 கோடி மெட்ரிக் டன்; அமெரிக்காவில் 55 கோடி டன்; மேற்கு ஐரோப்பாவில் 48 கோடியே 70 லட்சம் டன். ரஷியாவிலும் அதைச் சேர்ந்த நாடுகளிலும் மின்சார உற்பத்தி 133 கோடி கிலோவாட்; அமெரிக்காவில் 500 கோடி கிலோவாட்; மேற்கு ஐரோப்பாவில் 487 கோடி கிலோவாட்; ரஷ்யகோஷ்டி நாடுகளில் பேட்ரோல் உற்பத்தி உலக உற்பத்தியில் 8 சத விகிதம் தானென்று மதிப்பிடப்படுகிறது; ஆனால் உலக உற்பத்தியில் 50 சத விகிதம் அமெரிக்காவிலும், மேற்குக் கோளத்தில் 70 சத விகிதமும் மத்திய கிழக்கில் 16 சத விகிதமும் உள்ளது.

இந்தப் புள்ளி விவரங்களை அவற்றின் உண்மையான பரிமாணங்களில் புரிந்து கொண்டு, இவற்றை மிகைப்படுத்தி மதிப்பிடாமலிருக்கும் பொருட்டு பல விஷயங்களை ஞாபகத்தில் கொள்வது அவசியம். முதலாவதாக, கம்யூனிஸ்ட் நாடுகளில் உற்பத்தி யாகும் பொருள்களில் மிகச் சிறிய பகுதியே சிவிலியன் உபயோகத்திற்குப் போகிறது. ஆகையால் மொத்த உற்பத்தி அளவுகளை மாத்திரம் அடிப்படையாகக் கொண்டு உற்பத்தி சக்தியை மதிப்பிடுவது தவறான வழியில் கொண்டு போகக் கூடும்.

தவிர, ரஷியாவில் ஒரு குறிப்பிட்ட அளவு மூலப் பொருள்களைக் கொண்டு உற்பத்தி செய்யப்படும் ஆயுதங்களின் அளவு, அமெரிக்காவில் உற்பத்தி

செய்யப்படுவதைவிட அதிகமென்று நிபுணர்கள் கருதுகின்றனர்.

மூன்ருவது அம்சம் மிகவும் முக்கியமானதாகவும், தற்போதைய உற்பத்தி அளவை மாத்திரம் கவனியாமல், உற்பத்தி அதிகரிப்பு வேகத்தையும் கவனித்தால் இவ்வளவு சாதகமான நிலைமை இருப்பதாகத் தோன்றவில்லை. இந்த விஷயம் போதிய அளவு உணரப்பட்டிருப்பதாகத் தோன்றவில்லை. சென்ற சில வருஷங்களில் ரஷியாவில் மூலப் பொருள் உற்பத்தி கணிசமான அளவில் அதிகரித்து வந்திருக்கிறது. சில பொருள்களின் உற்பத்தி வேகம், அமெரிக்காவின் உற்பத்தி வேகத்தைவிட அதிகமாகக்கூட இருக்கிறது. மேற்கத்தி நாடுகள் இதைப் போதிய அளவு கவனிக்கவில்லை. உதாரணமாக ரஷியாவில் தேனிரும்பு, எஃகு, நிலக்கரி முதலியவற்றின் உற்பத்தி 1940-லிருந்து 1954-க்குள் இரட்டிப்பாக அதிகரித்துள்ளது; மின்சார உற்பத்தி மும்மடங்காகி யிருக்கிறது.

1953-ல் ரஷியாவின் மொத்த பொருள் உற்பத்தி யுத்தத்திற்கு முன்ஞல் இருந்ததைப்போல் 250 சத விகிதம் அதிகமாக இருந்தது. இது 1953 வரை அமெரிக்காவுக்குச் சமமான விகிதத்தில் உற்பத்தி அதிகரித்து வந்திருக்கிறது என்பதைக் காட்டுகிறது. ஆஞல் பெரும்பாலான மேற்கு ஐரோப்பிய நாடுகளின் உற்பத்தியைவிட இது அதிகமாகும்.

ரஷியாவில், 1927-ல் முதல் ஐந்தாண்டுத் திட்டம் அமுலுக்கு வந்தபோது இருந்ததைப்போல் 10 மடங்கு அதிக தேனிரும்பு, கச்சா எஃகு, நிலக்கரி ஆகிய பொருள்கள் இப்பொழுது உற்பத்தி யாகின்றன. ஆகையால், "தற்போதைய உற்பத்திப் பெருக்க விகிதம் நீடித்தால் நடை முதல் தசாப்த (10 வருஷ) முடிவில் ரஷியாவின் மூலப் பொருள் உற்பத்தியும் உபயோகமும், மேற்கு ஐரோப்பாவில் தொழில் துறையில்

மிகவும் முன்னேறியுள்ள 7 பெரிய நாடுகளுக்குச் சமமாகவோ அதிகமாகவோ இருக்கும்'' என்று, ஐரோப்பாவுக்கான ஐக்கிய நாடுகள் ஸ்தாபனப் பொருளாதாரக் கமிஷன் மதிப்பிடுவதில் ஆச்சரியமில்லை. 1946 பிப்ரவரியில் ஸ்டாலின் போல்ஷாய் தியேட்டரில் பேசுகையில், குறிப்பிட்ட அளவுகளை எட்டும் நிலையை, அல்லது மிஞ்சும் நிலையை நோக்கி ரஷியா முன்னேறி வருகிறது என்றதையும் இது சம்பந்தமாக ஞாபகப் படுத்திக் கொள்ள வேண்டும்.

ரஷியாவில் சோவியத் ஆட்சியின்கீழ் பொருள் உற்பத்தி எவ்வளவு பெரும் அளவில் அதிகரித்திருக்கிறது என்பதைக் கீழ்க் காணும் புள்ளி விவரங்கள் எடுத்துக் காட்டும். முதல் பத்தியில் குறிப்பிட்டிருப்பது 1927-28 வருஷ, அதாவது, முதல் ஐந்தாண்டுத் திட்டத்திற்கு முந்திய உற்பத்தி அளவு. மூன்றுவது பத்தியில் இருப்பது 1953-ம் வருஷ உற்பத்தி அளவு. கடைசி பத்தியில் குறிப்பிடப்பட்டிருப்பது 5-வது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் 1955-க்குள் உற்பத்தி செய்வதற்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள அளவுகள்.

5-வது பத்தியில் காணப்படும் புள்ளிகள், 1960 அல்லது 1965-இல் எட்ட வேண்டுமென்று ஸ்டாலின் நிர்ணயித்துள்ள அளவுகள். அப்பொழுது வெறும் கற்பனையென்று தோன்றிய இந்த அளவுகள் சாதிக்கப்படக் கூடுமென்று தோன்றுகிறது. இதில் கொடுக்கப்பட்டுள்ள எண்கள் ரஷியாவில் மட்டும் உற்பத்தியாகும் அத்தனை லட்சம் மெட்ரிக் டன்களைக் குறிக்கின்றன.

| பொருள் | 1927—28 | 1940 | 1953 | 1955 எல்லை | 1960—65 எல்லை |
|---|---|---|---|---|---|
| தேனிரும்பு | 33 | 150 | 280 | 340 | 500 |
| கச்சா எஃகு | 39 | 183 | 380 | 447 | 600 |
| நிலக்கரி | 354 | 1660 | 3200 | 3775 | 5000 |
| எண்ணெ | 116 | 310 | 520 | 695 | 600 |

1960-65-ம் வருஷ உத்தேச அளவுக்கு எவ்வளவு சமீபத்தில் 1955-ம் வருஷ அளவு வந்திருக்கிறது என்பதை அறிய, ரஷியாவின் ஆதிக்கத்தில் உள்ள நாடுகளின் உற்பத்திகளையும் இதோடு சேர்க்க வேண்டும். இவை பற்றிய விவரங்களைச் சேகரிப்பது கஷ்டமாக உள்ளது. ஆனால் சில பொருள்களின் உற்பத்தி கணிசமாக இருக்கிறது என்று மாத்திரம் கூறலாம்.

உதாரணமாக 1953-ல் இந்த நாடுகளின் எஃகு உற்பத்தி ஒரு கோடியே இருபது லட்சம் டன் என்று மதிப்பிடப்படுகிறது. 1952-ம் வருஷ உற்பத்தியைவிட இது 13 சத விகிதம் அதிகமாகும். 1955-க்குள் இது 1½ கோடி டன்னுக உயருமென்று வைத்துக் கொண்டால் 1960—65-ல் ரஷியாவில் உற்பத்தி செய்ய உத்தேசிக்கப் பட்டுள்ள அளவை 1955-லேயே எட்டி யாகிவிடும்.

ரஷியாவில் மாத்திரம் எண்ணை உற்பத்திக்கு 1955-ம் வருஷத்திற்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள புதிய அளவு, 1960-65-ம் வருஷத்திற்கு உத்தேசிக்கப்பட்டிருக்கும் அளவைக் காட்டிலும் அதிக மென்பது தெரியும்.

ஆகையால் ஸ்டாலின் நிர்ணயித்த மூலப் பொருள் உற்பத்தி அளவை ரஷ்யா, அவர் குறித்த காலத்திற்கு 5 அல்லது 10 வருஷங்களுக்கு முன்பே எட்டிவிடுமென்று இவற்றிலிருந்து ஊகிக்கலாம். தற்காலத்தில் யுத்தத்தைச் சமாளித்து நிற்பதற்கும், யுத்த அபாயத்தோடு கூடிய அயல் நாட்டுக் கொள்கையைப் பின்பற்றுவதற்கும் பொருள் உற்பத்திதான் அடிப்படையான அம்சம். ஆகையால், இந்தப் புள்ளி விவரங்களின் அபாயத்தைக் குறைவாகக் கருத முடியாது.

இந்த விவரங்களைக் கொண்டு பார்த்தால், இதுவரை கம்யூனிஸ்ட் நாடுகளிடம் உள்ள வசதிகள் குறைவு என்பதும், மேற்கு ஐரோப்பா, மத்தியக்

கிழக்கு, தென் கிழக்கு ஆசியா முதலிய நாடுகள் அதன் ஆதிக்கத்தின் கீழ் வந்தால் அவற்றின் வசதிகள் மேற்கத்தி நாடுகளின் வசதிகளுக்குச் சமமான நிலையை அடையவோ அல்லது மிஞ்சி விடவோ கூடுமென்பதும் தெரியும். இப்படி நேர்ந்து விட்டால், நீடித்த யுத்தம் நடந்தால் கூட யூரேஷியா அசைக்க முடியாத கோட்டையாகிவிடும். அப்பொழுது ஏற்படக் கூடிய நிலைமையை, 1948-ல் ஐஸன்ஹோவர் சேனுதிபதியாக இருந்த பொழுது தம் கடைசி அறிக்கையில் பின்வருமாறு விவரித்தார். "அமெரிக்காவின் பந்தோபஸ்துக்கு பெருத்த அபாயம் ஏற்படும். ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பரவியுள்ள பிரம்மாண்ட எதிரியை நாம் எதிர்த்து நிற்கவேண்டி யிருக்கும்" என்ருர் ஐஸன் ஹோவர்.

பொருள் உற்பத்தியில் உயர் நிலைக்கு அடுத்தபடியாக, மேற்கத்தி உலகிற்கு வெற்றி தேடித் தரக்கூடியது சிறந்த கடற்படை பலம்தான். யுத்தம் நீண்ட காலம் நீடித்து நடந்தால் இந்த நாடுகளின் விமானப் படை பலமும் எதிரி நாட்டுக்குச் சமமாக வந்துவிடும்.

நவீன கால யுத்தத்தில், கடற்படை, ராணுவம், விமானப்படை ஆகியவற்றின் தராதர மதிப்பு பற்றித் தற்சமயம் தீவிரமாக விவாதிக்கப் படுகிறது. கடற்படை பலம் அதிகமாகப் பெற்றுள்ள நாடுகள், அவற்றின் எதிரிகளிடம் ராணுவ பலம் அதிகமாக இருந்தால் கூட இறுதியில் வெற்றி பெறுகின்றனவென்று அட்மிரல் மஹின் "சரித்திரத்தில் கடற்படையின் செல்வாக்கு" என்ற தம் நூலில் குறிப்பிட்டிருக்கிருர். தரைப் படை எவ்வளவுதான் வெற்றி பெற்று வந்தாலும், கடற்படை இல்லையாளுல் கரையிலேயே நிற்க வேண்டியதுதான். கடற்படை பலம் அதிகமுள்ள விரோதி, அதன் மூலம் பின்வாங்கிச் சென்று, தன் பலத்தைப் பெருக்கிக் கொண்டு திரும்பி வரலாம்.

தவிர, கடற்கரை ஓரப் பகுதிகளைத் தாக்கியும், கடல் கடந்து வரவேண்டிய சப்ளைகளைத் தடுத்தும் தொல்லை கொடுத்து வரலாம். இறுதி வெற்றியை தரைப் படை தான் சாதிக்க வேண்டும்.

ஆனால் விமான, அணு சக்திப் போர் யுகத்தில் இந்த வாதம் பொருந்துமா ?

இந்தக் கேள்வியின் முதற் பகுதி அனுவசியம். மேற்கத்தி நாடுகளின் விமான பலம் குறைவாக இராது. ஒருவேளை ஆரம்பத்தில் · தற்காலிகமாகச் சிறிது குறைவாக் இருக்கலாம். மூன்றுவது உலக யுத்தம் வந்தால் ஒரு தரப்பினருக்கு நிலத்தில் அதிக பலமும், மற்றொரு தரப்பினருக்குக் கடலில் அதிக பலமும் இருக்கக் கூடும். விமான பலத்தில் இருவருமே ஒருவரைவிட ஒருவர் அதிக பலம் உள்ளவர்களாக இருக்க மாட்டார்கள். ஆகையால் மூன்றுவது உலக யுத்தம் வந்தால், கடற்படை பலம் முக்கியமா, அல்லது தரைப் படைபலம் முக்கியமா என்பதற்கு இது ஒரு பயங்கர சோதனையாக இருக்கும். சென்ற யுத்தத் திலிருந்து இதற்குப் பதில் காண்பதென்றால், அந்த யுத் தத்தின் போக்கை மாற்றிய முக்கியமான கட்டங் களில், கடற்படையின் பலம் அதிகமாக இல்லாமலோ அல்லது விமானப் படை போதிய அளவு இல்லாமலோ வெற்றிபெற்றிருக்க முடியாது. மத்திய தரைக் கட லில், ஹிட்லரின் கடற்படை ஆதிக்கம் செலுத்தி யிருந் தால், அந்தக் கடலின் கிழக்குப் பகுதியைச் சுற்றி வளைக்க அவர் செய்த முயற்சிக்கு அவசியமிருந் திராது. எல் அலமீனில் போராடிய மாண்ட் கோமரி யின் சேனைக்கு கப்பல்கள் மூலம் சப்ளை தக்க சமயத் தில் வராமலிருந்தால் ஹிட்லர் தோற்றிருக்க மாட்டார். இங்கிலீஷ் வாய்க்காலில் பிரிட்டிஷ் கடற் படை ஆதிக்கம் செலுத்தியதால்தான் "பிரிட்டன் போர்" என்று அழைக்கப்படும் விமானப் போரை ஹிட்லர்

மேற்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. விமானப் படை பலம் போதிய அளவு இல்லாததால் தான் அவர் தோற்ருர்.

கடல், விமானப் படைகளின் பலம் அதிகமாக இல்லாமலிருந்திருந்தால் அட்லாண்டிக் போரிலோ, வட ஆப்பிரிக்க, ஐரோப்பியப் படையெடுப்புக்களிலோ வெற்றி பெற்றிருக்க முடியாது.

பர்ல் ஹார்பர் தாக்குதல் பிரமிக்கச் செய்யும் விமானத் தாக்குதலாகும். விமானம் தாங்கிக் கப்பல் இல்லாமலிருந்திருந்தால் அந்தத் தாக்குதலை நடத்தி யிருக்க முடியாது. பஸிபிக்கில் அமெரிக்காவின் கடற் படை ஆதிக்கத்தைத் தகர்ப்பதே இதன் நோக்கம். அந்த லக்ஷியம் ஈடேறியபின் தென் கிழக்கு ஆசியாவி லும் தென் மேற்கு பஸிபிக்கிலும் அது சுலபமாக முன் னேற முடிந்தது. கடைசியில் திருத்தி அமைக்கப்பட்ட அமெரிக்க கடற் படையையும் விமானப் படையையும் கொண்டு கோரல் கடலிலும் மிட்வேயிலும் நடத்தப் பட்ட போரில்தான் அது பின்னுக்கு விரட்டப்பட்டது.

இந்த உண்மைகள் தரைப் படையின் முக்கியத் துவத்தைக் குறைக்கவில்லை. ஆனல், தரைப் படை விமானப் படை ஆகியவற்றில் மட்டும் யுத்தத்தின் போக்கை மாற்றிவிட முடியவில்லை யென்பதை இவை காட்டுகின்றன. கொரியா யுத்தம் இதை ஊர்ஜிதம் செய்கிறது.

அணு சக்தி உபயோகத்தினல் கடற் படையின் முக்கியத்துவம் குறையுமா என்பது சந்தேகமாகவே உள்ளது. பிரத்தியட்சமாக யுத்தம் நடந்தால்தான் இந்தக் கேள்விக்கு இறுதியாகப் பதிலளிக்க முடியும். எனிவெடாக்கில் நடந்த சோதனைகளிலிருந்து, அணு குண்டுகளினல் கடற் படையின் முக்கியத்துவம் குறை யாது என்றே தோன்றுகிறது.

மூன்ருவதாக, எதிரி ஒரு கண்டம் முழுமையிலும்

வியாபித்திருந்தால், கடற் படையின் முக்கியத்துவம் குறையுமா என்ற பிரச்னை எழுகிறது. இதற்குப் பதிலளிப்பது கஷ்டமில்லை.

ஹிட்லர் தம் அதிகாரத்தின் உச்ச கட்டத்தை அடைந்திருந்த பொழுது, பிரனீஸிலிருந்து வெண் கடல் வரையிலும் காகேஸஸ் வரையிலும் வியாபித்துள்ள,—சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளக் கூடிய—நிலப் பரப்பில் ஆதிக்கம் செலுத்திக்கொண்டிருந்தார். இந்தப் பரப்பு தன் தேவைகளைத் தானே பூர்த்தி செய்து கொள்ளும் நிலையில் இருந்தது. யுத்தம் வந்தால் எவ்வளவு காலம் வேண்டுமானாலும் எதிர்த்து நிற்க முடியுமென்று அச்சு நாடுகளில் பேசிக் கொள்ளப்பட்டது. தாக்குபவர்களைத் திருப்பி அடிப்பதோடு யுத்தத்தைக் கட்டுப்படுத்தி விடலாமென்று கருதப் பட்டது. ஆனால் அது நடக்கவில்லை.

மூன்றாவது உலக யுத்தம் வந்தால், கம்யூனிஸத்தின் ஆதிக்கத்தில் உள்ள நிலப்பரப்பு சரித்திரத்தில் வேறு எந்த எதிரியிடமும் இல்லாத அளவில் இருக்கும். எல்பிலிருந்து பஸிபிக் வரையிலும், அண்டார்டிக்கிலிருந்து இமயமலை வரையிலும், 77 கோடி மக்களைக் கொண்ட நிலப்பரப்பில் கம்யூனிஸம் பரவியிருக்கும்.

மேற்கு ஐரோப்பாவின் தொழில் சக்தி, தொழில் நுட்ப அறிவு, மத்திய கிழக்கின் எண்ணெ, தென் கிழக்கு ஆசியாவின் ஈயம், ரப்பர் ஆகிய பொருள்கள் இல்லையானால் இப்பகுதி சில துறைகளில் பெரும் குறைபாடு உள்ளதாகவே இருக்குமென்பது, மேலே கூறப்பட்ட புள்ளி விவரங்களிலிருந்து தெரியும். ஆகையால் இப்பிரதேசங்களையும் தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வருவது கம்யூனிஸ்ட் நாடுகளுக்கும் அவ்விதம் நேராமல் தடுப்பது ஜனநாயக நாடுகளுக்கும் அவசியமாகும். இந்த மூன்று பகுதிகளும் கம்யூனிஸ்ட் நாடுகளுக்குக் கிடைத்து விட்டால் அவை பொருள்

வசதிகளைப் பொருத்த வரையில் எவ்வளவு காலம் வேண்டுமாலுைம் யுத்தத்தில் எதிர்த்து நிற்க முடியும். அந்த நிலையில் கடற்படையின் முக்கியத்வம் குறைந்து விடும். ஆனல் ராணுவ ரீதியில் கடற்படையின் முக்கியத்துவம் நீடிக்கவே செய்யும். எதிரி நாடு இவ்வளவு பெரியதாக இருந்தும் கடல் கடந்து படையெடுக்க அதனல் முடியாது. ஆனல் கடற்படை பலம் உள்ள நாடு காத்திருந்து சரியான சமயத்தில் படையெடுக்கலாம். ஆகையால் கடற்படைக்கு 1944-ல் எவ்வளவு முக்கியத்வம் இருந்ததோ அதே அளவு இப்பொழுதும் இருந்து வருகிறது. தவிர தற்காலத்தில் எந்த மூலையில் உள்ள இடமும் விமானத் தாக்குதலிலிருந்து தப்ப முடியாது. ஆகையால் போதிய விமானப் படை பலமிருந்தால் கடற்படையின் பழைய செல்வாக்கு நீடிக்க வசதி செய்யும்.

ஆனல் யுத்தங்கள் பொருள் பலத்தினலும் ராணுவ பலத்தினலும் மட்டும் வெல்லப் படுவதில்லை. இறுதியில் போராடுகிறவர்களின் சக்தியும் விடாமுயற்சியும் தான் யுத்தங்களை வெல்கின்றன. போரின் லக்ஷியத்தைப் பொறுத்தே இவை ஏற்படும். ஒரு நிலையில் ராணுவங்கள் சம பல முள்ளவை யாகிவிடும். பிறகு ஆத்ம சக்திதான் விளைவை நிர்ணயிக்கும். பீரங்கிகள் உடலைப் பிளக்கலாம், ஆனல் ஆத்ம சக்தி பின்னல் வருகிறவர்களுக்கு ஆவேசமூட்டி நிற்கும். ஆத்ம சக்தியே எப்பொழுதும் இறுதியில் வெல்கிறது.

சர்வாதிகாரிகள் இந்த அடிப்படை உண்மையைத்தான் மறந்து விடுகின்றனர். அவர்களுடைய ரகசிய போலீசார் இந்த ஆத்ம சக்தியைத்தான் தேடி அலைகிருர்கள். கடைசியில் இந்த ஆத்ம சக்திதான் விசுவரூபமெடுத்து சர்வாதிகாரத்தை அழிக்கிறது.

இதற்கு மாருன நிலைமையை தற்கால ரீதியாக நிரூபிக்க ஜார்ஜ் ஆர்வெல் முயன்றிருக்கிருர். ஆனல்

மனிதனிடம் நமக்கு அதிக நம்பிக்கை உண்டு. சர்க்காரின் சர்வாதிகாரத்திற்குப் பணிய மறுக்கும் ஒரு தனி ஆத்மா இருக்கும் வரையில், ஆத்ம சக்தி அணைந்து விடாது. கொடுமையை எதிர்த்து எழும்படி மக்களைத் தூண்ட அது ஒரு காலத்தில் தலைதூக்கும். கம்யூனிஸத்தை எதிர்த்து ஜனநாயகங்கள் நடத்தக் கூடிய போரில் ஆத்ம சக்தியைத் தூண்டும் சுதந்திரம் மதம் ஆகிய இரு சக்திகளும் உள்ளன. சர்வாதிகாரங் களை இவையே தகர்த்திருக்கின்றன.

மனிதன் தோன்றிய நாள் முதல் அவன் சுதந்திர தாகம் உள்ளவனாக இருந்து வந்திருக்கிறான். இந்தப் பழைய லட்சியத்திற்கு நம் காலத்தில் புதிய அர்த்தம் வந்திருக்கிறது. சர்வாதிகாரத்தின் கொடுமைகளி லிருந்து தப்பி வாழும் சுதந்திரத்தை இது குறிக் கிறது. அதாவது இரவில் கதவைத் தட்டும் சப்தத் தைக் கேட்டு எழுந்து போகிறவன் திரும்பி வராமல் போவது, தந்தையை மகனும், கணவனை மனைவியும் வேவு பார்ப்பது; கட்சியின் கோபத்தைத் தூண்டக் கூடிய எந்த வார்த்தையையும் பேசப் பயப்படுவது, விஞ்ஞான பூர்வமான கொடுமைகளின் சிகரமான சிறை முகாம்கள் முதலியவை இல்லாமல் சுதந்திரமாக இருப்பதையே தற்காலத்தில் இச் சொல் குறிக்கிறது.

சர்வாதிகார ஆட்சியின் கொடுமைகளை அனுப விக்காத பாக்கியசாலிகளுக்கு இவற்றின் முக்கியத் துவம் பூரணமாக விளங்காது. இந்த அபாக்கியத் தைப் பெற்றவர்கள் இந்தப் பயங்கரங்களை நன்கு அறி வார்கள். ‘‘கடவுளே, எங்களுக்கு இன்றைக்குச் சாப் பாடு போடு’’ என்ற பிரார்த்தனை எவ்வளவு முக்கி யமோ அவ்வளவு முக்கியம் ‘‘எங்களுக்குச் சுதந்திரம் கொடு’’என்ற பிரார்த்தனையும். சுதந்திர பொக்கிஷத் தைப் பாதுகாக்க இடையறாத விழிப்பு அவசியமென் பதை நாம் உணரவேண்டும். சுதந்திரத்திற்கு இப்

பொழுது ஏற்பட்டுள்ள அபாயம் முன் எப்பொழுதும் ஏற்பட்டதைவிட அதிகமாகும். இப்பொழுது சுதந்திரத்தை பயமுறுத்தும் லக்ஷியம் உலகம் முழுவதையுமே இலக்காகக்கொண்டுள்ளது. நீங்கள் எங்கு போனுலும் அது உங்களைத் தொடர்ந்து வரும்; உங்கள் சர்வத்தையும் அது கேட்கும். இந்த அபாயத்தை நாமும் உணர்ந்து,உலகத்திற்கும் பூரணமாகத்தெளிவு படுத்தி விட்டால் சுதந்திரம் நமக்குப் பெரிய பக்க பலமாகி விடும். இதைத் தோற்கடிக்கவே முடியாது.

புதிய உலக யுத்தத்தில் மதமும் நம் பக்கம் இருக்கும். சர்வாதிகார ஆட்சி மதத்திற்கு ஜென்ம விரோதி. தன்னைத் தவிர வேறு எதனிடமும் விசுவாசமாயிருப்பதை சர்வாதிகார ஆட்சியினுல் சகிக்க முடியாது. இந்த உலகத்திற்கு அப்பால் உள்ள ஒரு விஷயத்தில் மனித உள்ளம் விசுவாசம் வைப்பதை அது ஒப்புக்கொள்ளாது. ஆகையால் கம்யூனிஸத்திற்கும் சுதந்திர உலகத்திற்குமிடையில் நடக்கக் கூடிய போராட்டத்தில் எல்லா மதங்களும் இறுதியில் கம்யூனிஸத்தை எதிர்க்காமலிருக்கமுடியாது. ரோமன் கத்தோலிக், பிராடஸ்டெண்ட், முஸ்லிம், ஹிந்து முதலிய எல்லா மதங்களுக்கும் இது பொருந்தும். மேற்கத்தி நாகரிகத்தைச் சேர்ந்த நமக்கு, அண்டை அயலாரை நேசி என்று 2000 வருஷங்களுக்கு முன் உபதேசிக்கப்பட்ட உபதேசம் சமூகத்தின் ஒரு பகுதியினரை வெறுத்து அழிக்குமாறு நூறு வருஷங்களுக்குமுன் தோன்றிய "உபதேசத்தை" விட மேலானதாகும்.

பதினெட்டாம் நூற்றுண்டின் புரட்சியை அடிப்படையாகக்கொண்ட சில மேற்கத்தி நாடுகளில், நமது நாகரிகத்தின் தூண்களில் ஒன்றுன, கிறிஸ்தவ தர்மத்தைவிட, ஜனநாயகத்தைப் பற்றியே அதிகமாகப் பேசப்படுகிறது. ஆனுல் கிறிஸ்தவ மதம்தான் ஜனநாயகத்திற்கே ஆணிவேர் போன்றது. அடிப்படைத்

தத்துவத்தைக் கைவிடும் நாகரிகம் சீக்கிரத்தில் அழியும். இந்த ஆத்மீகப் பகைப் புலன் இல்லாமல் மேற்கத்தி நாகரிகம் தன் எல்லைக் குள்ளோ வெளி யிலோ உள்ள மக்களிடம் எடுபடாது.

# 16

## அமெரிக்காவின் விதி

சரித்திரத்தில் மேற்கத்தி நாகரிகம் ஒரு புதிய நிலையை அடையும் கட்டத்தில் நாம் வாழ்கிறோம். உலக மெங்கும் ஒரே நாகரிகம் வியாபிக்கும் கட்டம் இது. எல்லா நாகரிகங்களிலும் இது கடைசி கட்டம். பெரும்பாலான மக்களுக்கு பெருவாரியான நன்மை ஏற்படுவதை அடிப்படையாகக்கொண்டு நாகரிகத் தின் பெருமையை அளவிடுவதென்ருல் அதற்கு இந்தக் கட்டமே ஏற்றதாக இருக்கும். தற்கால மக் களுக்கும் சரித்திரத்திற்கும் இது எவ்வளவு தூரம் மதிப்புள்ளதாக இருக்கும்? இது எவ்வளவு காலம் நீடிக்கும்? இவை இதன் அகச் சக்தியையும் ஆத்ம சக்தியையும் பொறுத்திருக்கிறது.

ஒரே உலகம் யுத்தத்தின் மூலம் தோன்றினுலும் சமாதானமாகவே உருவானுலும், அதில் அமெரிக்கா மிகவும் முக்கியமான பங்கு கொள்ள விதிக்கப்பட் டிருக்கிறது. உண்மையில் இந்த நிலைக்கு அது ஆசைப்பட்டதில்லை. சந்தர்ப்பமே அதன்மீது இதைத் திணித்திருக்கிறது. இந்த நிலை தானுக ஏற்பட்டிருக் கிறது என்பதை அமெரிக்கா அறிந்தவுடன் அதற் கேற்றபடி அற்புதமான முறையில் அது துரிதமாகத் தன்னைத்தானே மாற்றிக்கொண்டு விட்டது. இரண் டாவது உலக யுத்தத்திற்குப்பின், சரித்திரத்தில் என் றும் கண்டிராத துணிவையும், தீர்க்க திருஷ்டியையும் தாராள மனப்பான்மையையும் அமெரிக்கா காட்டி

யிருக்கிறது என்பதை ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளோம். இந்த குணங்களில் அடங்கியுள்ள ஆத்ம சக்தியினுல் அளவற்ற விஷயங்களைச் சாதிக்கமுடியும்.

ஆனுல் இதற்குப் பல அபாயங்கள் இருக்கின்றன. இவற்றில் இடறி விழுவது மிகவும் சுலபம். எல்லாத் தலைமைப் பதவிகளுக்கும், குறிப்பாக ஜனநாயகத் தலைமைப் பதவிக்கு பின்பற்றுவோரின் ஆதரவிலிருந்துதான் பலம் கிடைக்கிறது. பின்பற்றுவோரின் ஆதரவை இழந்தபின் சர்வாதிகாரி, மன்னன், அதிகாரவர்க்கம், சர்க்கார் முதலிய எதுவும் நிலைத்ததில்லை. ஆக்கச் சிறுபான்மை யற்ற டாய்ன்பியின் சித்தாந்தம் தனி நபர்களுக்கு எவ்வளவு பொருந்துமோ அதே அளவுக்குச் சர்க்கார்களுக்கும் பொருந்தும்.

வேறு எந்த நாட்டையும் விட அதிகமான அரசியல், ராணுவ, பொருளாதர உதவி அளிக்கும் அமெரிக்காவே தங்களுக்குத் தலைமை வகிக்க விதிக்கப்பெற்றிருக்கிறது என்பதை ஜனநாயக உலகத்தின் மற்ற நாடுகள் உணர்ந்திருக்கின்றன. தங்களுக்கு வழி காட்டாமல் தாங்கள் ஆளப்படுவதையும், ஒத்துழைக்காமல் தங்கள்மீது ஆதிக்கம் செலுத்தப்படுவதையும்தான் இவை எதிர்க்கும். ஒரு பெரியவருக்கு உரிய ஸ்தானத்தை அமெரிக்காவுக்கு கொடுக்க அவை ஒப்புக்கொள்கின்றன. ஆனுல் தங்களுக்குள்ளேயே ஒரு நாட்டினிடம் சரணுகதி அடைவதற்காக அவை சர்வாதிகாரிகளை எதிர்த்து அவ்வளவு கடுமையாகப் போராடவில்லை. மற்ற நாடுகள் உள்ளூற உணர்ந்து அமெரிக்காவின் தலைமையைப் பின்பற்றுமா அல்லது அவசியத்தை முன்னிட்டு விருப்பமில்லாமல் பின்பற்றி வருமா என்பதுதான் பிரச்னை. இதற்குப் பதிலளிப்பது, முன்னைய வல்லரசுகள் செய்த தவறை அமெரிக்கா செய்யாமலிருக்குமா, என்பதையே

பொறுத்திருக்கும்.

ஆத்மீகத் தலைமையே உலகத்தின் முதல் தேவை. அமெரிக்காவின் தலைமை பொருளுதவி அளிப்பதோடும் வாழ்க்கை நிலைமையை உயர்த்த முயற்சிப்பதோடும் நின்றுவிடுவதாக உலகம் பலமாக நம்புகிறது.

இவற்றின் முக்கியத்துவத்தை நாம் குறைத்து மதிப்பிட வேண்டாம். யுத்தத்திற்குப்பின் ஐரோப்பாவின் பொருளாதார நிலை அபிவிருத்தி அடைய மார்ஷல் திட்ட சகாயம் அளவற்ற உதவியாக இருந்தது. உலகத்தில் மிகக் கேவலமான வறுமையில் உழலும் மூன்றில் இரண்டு பங்கு மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதுதான் மேற்கத்தி நாகரிகத்தின் மிகப்பெரிய சவால் என்பதை ஏற்கெனவே எடுத்துக்காட்டி யிருக்கிறோம். அவர்களுக்கு உண்ண உணவும் இருக்க இடமும் கொடுப்பதன் மூலம்தான் அவர்களுடைய அபாக்கிய உணர்ச்சியைப் போக்கி நம் பொருளாதார நிலைமையின் மதிப்பை அவர்கள் உணரும்படிச் செய்யமுடியாது.

ஆனால் ஒரு நாட்டின் ஆதரவைப்பெற இந்த இரண்டும் மட்டும் போதாது. ஒருவன் பணக்காரனாக இருந்து, தன் செல்வத்தில் ஒரு பகுதியைக் கொடுக்கத் தயாராக இருக்கிறான் என்பதனால் மட்டும் அவன் தலைமையை மற்றொருவன் ஏற்றுக்கொண்டுவிட மாட்டான். தனி நபர்கள் விஷயத்தில் இருப்பது போலவே நாடுகளுக்கிடையிலும் இதனால் ஆத்திரமே ஏற்படும்.

ஸ்நான அறைகளும் குளிர்பதன சாதனங்களும் மனிதனுக்குக் கவர்ச்சிகரமாக இருக்கலாம். ஆனால் இவை உணர்ச்சியூட்டாது. ஆத்மீகமே ஓங்கிநின்ற ஐரோப்பா, ஆசியா போன்ற கண்டங்களில் மக்கள் ஆதரவைப் பெறுவதற்கான போராட்டத்தில் சிறந்த தொழில் முறைகளின் மூலமோ, வேகமான கார்களின் மூலமோ மாத்திரம் வெற்றி பெற்றுவிட முடியாது.

வர்க்க பேதமில்லாத சமூகத்தையும், மதத்திற்குச் சமமான ஒரு தத்துவத்தையும் ஒன்று சேர்த்துப் பிரசாரம் செய்வதில் வெற்றி பெற்றுள்ள ஒரு எதிரியுடன் போராடும்பொழுது இது விசேஷமாகப் பொருந்தும். இந்த போலி மதத்திற்கு எதிராக உணவையும் டெலிவிஷனையும்விட உயர்ந்த ஒன்றைக் கொடுத்தால் தான் மேற்கத்தி உலகம் வெற்றிபெற முடியும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் இரு ஆத்மீக மதிப்புக்கள் அதனிடம் உள்ளன. இவற்றை மிஞ்சக்கூடிய விஷயங்கள் இன்னும் ஏற்படவில்லை. இவை மதமும் ஜனநாயகமுமாகும். உலகத்தின் முன் அமெரிக்கா அளிக்கும் தோற்றத்தில் மதத்தைவிட ஜனநாயகம் அதிகத் தெளிவாகத் தெரிகிறது. ஆனால் மேற்கத்தி நாகரிகத்திற்கு மாத்திரமின்றி தனி நபர்களுக்கும் ஜனநாயகத்தைப்போலவே மதமும் முக்கியமாகும்; கண்ணுக்குத் தெரியும் விஷயங்களோடு ஆத்மா திருப்தி அடைந்து விடுவதில்லை. ஆத்ம பலத்தின் மூலம்தான் மேற்கத்தி உலகம் தனக்கு ஏற்பட்டுள்ள அபாயத்தைச் சமாளிக்க முடியும்.

யதேச்சையான சுதந்திரம் என்பது இன்றைய உலகத்தில் மறைந்துவிட்டது. இன்றைய நிலைமையில், அமெரிக்காவும் ரஷியாவும் உள்பட எந்த நாடும், மற்ற நாடுகளைப் பற்றிச் சிந்திக்காமல் சுயேச்சையாக எந்த முடிவும் செய்துவிட முடியாது.

அதே சமயத்தில், ஒரே உலகம் ஏற்பட்டாலும் மற்ற நாடுகளைச் சேர்த்து அமுக்கிவிட முடியாது. எல்லா அதிகாரமும் ஒரே இடத்தில் குவிவது அரசியல் ரீதியில் அபாயகரமானதாகும். பொருளாதார ரீதியிலும் இதில் முழுமை இராது. பெரும் பகுதிகள் தங்களைத் தாங்களே காப்பாற்றிக்கொள்ள முடியாமல் வெளி உதவியை நம்பி யிருக்கவேண்டியிருக்கும். ஆத்மீகத் துறையில் மேற்கத்தி நாகரிக வளர்ச்சிக்கு உத

விய ஊற்றுக்கண்களை அடைத்து விட்டால் அந்த நாகரிகம் மறத்துப்போய் விடும். நாகரிகம் வகை வகையாக வளர்வதுதான் கலாசாரத்திற்கு ஆதாரம். ஏகத்துவம் அதன் அழிவாகும்.

நாடுகளுக்குத் தலைமை வகிப்பது மிகவும் கடின மான விஷயம். யாருடைய பாராட்டுதலும் கிடைக் காது. குறை கூறுபவர்கள் கடுமையாகவும், அளவு மீறியும், நியாயமற்ற முறையிலும் குறை கூறுவார் கள். பாராட்டுதல் அற்பமாக, வெளிக்கு தெரியாமலே இருக்கும். சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஒரு கடமையைச் செய்தோம் என்பதோடுதான் நாம் திருப்தி யடைய வேண்டியிருக்கும். நியாயமான தீர்ப்பை நம் காலத்திற்குப் பிறகோ, நம் உலகத்திற்கு அப்பாலோ தான் எதிர் பார்க்கலாம்.

ஆனால் நன்றி கெட்ட தனத்தையும் பாராட்டின் மையையும் கண்டு தலைவன், எல்லா விமரிசனங்களை யும் புறக்கணித்து விட்டுத் தன் இஷ்டத்தைத் திணிக்க முடியாது. வாதித்து அபிப்பிராயத்தை மாற்றுவது தான் உண்மையான தலைமையின் லட்சணம். பல தரப்பட்ட நாடுகள் அடங்கிய சாம் ராஜ்யத்தை ஆண்ட ரோமானியரும் பிரிட்டிஷாரும் இந்த முறையின் மேன்மையை உணர்ந்திருந்தனர். சில சமயங்களில் தந்திரமாகவும், வேறு சில சமயங் களில் கண்மூடித்தனமாகவும் அவர்கள் நடந்து கொண்டனர். ஆனால் ஆளப்படுவோரின் ஆதரவு இருந்த வரையில்தான் அவர்களால் ஆளமுடிந்தது. இவ்வாறு ஆட்சி புரிய மகத்தான சுய கட்டுப்பாடு மிக அவசியம்.

உண்மையான தலைமையினால் டாய்ன்பி கூறும் நடிப்பு சுபாவம் ஏற்படுகிறது. மக்கள் தாங்களாக இஷ்டப்பட்டு, தலைவனைப்போல் நடிக்கின்றனர். அமெ ரிக்காவை காப்பியடிக்கும் மனோபாவத்தை இன்று

உலகம் முழுவதிலும் ஆயிரக்கணக்கான சிறு விஷயங்களில் காணலாம். பாரீஸில் உள்ள பத்திரிகை கடைகளில் பிரெஞ்சுப் பத்திரிகைகளைவிட "லைப்," "டைம்," "லுக்," முதலிய அமெரிக்கப் பத்திரிகைகள் தான் அதிகமாக இருக்கின்றன. சிங்கப்பூரிலிருந்து லிஸ்பன் வரை காக்டெயல்கள் (சாராயக் கலவை) வினியோகிக்கப் படுகின்றன. அதிக காரமுள்ளது என்பதற்காக ஒரு காலத்தில் வெறுக்கப்பட்ட அமெரிக்க சிகரெட் இப்பொழுது நாகரிகப் பொருளாகி விட்டது. உலகம் முழுவதிலும் உள்ள தியேட்டர்களில் ஹாலிவுட் படங்கள் ஆதிக்கம் செலுத்துகின்றன. மிகக் கடுமையான ஏகாதிபத்திய எதிர்ப்பு நாடென்று கருதப்படும் நாடுகளில் கூட, "காடி லாக்" கார் வைத்துக் கொள்வது வெற்றியின் சிறந்த சின்னமாக விளங்குகிறது. இந்த நூலின் ஆசிரியர் சையாமின் அழகைக் காணச் சென்றிருந்த பொழுது பாங்காக்கில் முதலில் கண்டது ஒரு கோகோகோலா வண்டிதான்.

அமெரிக்க நடையுடை பாவனைகளை அமைதியான முறையில் மற்றவர்கள் பின்பற்றும் வரையில் அதில் எவ்வித ஆட்சேபமும் இல்லை. வழி காட்டும் சிறுபான்மை கோஷ்டி தன் கருத்துக்களையும், பழக்க வழக்கங்களையும் மற்றவர்கள்மீது திணிக்க முயற்சிக்கும் பொழுதுதான் அபாயம் ஏற்படுகிறது. உதாரணமாக, அமெரிக்காவில் உள்ளது போன்ற பொருளாதார முறையை எங்கும் அமலுக்குக் கொண்டு வரவும், முடியாட்சிகளை ஒழிக்கவும் அமெரிக்கா முயன்றால் இந்த அபாயம் ஏற்படும்.

இவ்விதம் திணிப்பது ஒரு நாகரிகத்தைப்பலவீனப் படுத்துவதுடன், அதன் தலைமை ஸ்தானத்திற்கு எதிரான உணர்ச்சியையும் தூண்டுகிறது. சிறுபான்மைகளின் உரிமைகளையும் விசேஷ அம்சங்களையும் பாதுகாப்பதுதான் ஜனநாயகத்தின் உயிர் நாடி.

ஆகையால், சமத்துவ அடிப்படையில் ஒத்துழைக்கும் நாடுகளிடையே நிரந்தரமான தலைமை ஸ்தானம் வகிப்பதற்கு, தானும் வாழ்ந்து, பிறரையும் வாழவைக்கும் மனப்பான்மை மிகவும் அவசியம். எந்த விஷயங்களில் பிறருக்குத் திருப்தி ஏற்படும்படிச் செய்யவேண்டும். எந்த விஷயங்களை விட்டுவிட வேண்டும் என்பவற்றிற்கிடையே எல்லைக் கோடு வகுக்க வேண்டும். நவீன உலகத்தில் மற்றவர்களுக்கு வழி காட்டுவதற்கும், மற்றவர்களின் மதிப்பைப் பெறுவதற்குமிடையில் சரியான தராதரம் ஏற்படுத்துவது அமெரிக்காவுக்குப் பெரிய சோதனையாகும்.

இதில் பல அபாயங்கள் இருக்கின்றன என்பதைப் பழைய நாகரிகங்களின் அனுபவங்கள் எடுத்துக் காட்டுகின்றன. ஒரு சமூகத்தின் கடைசி காலத்தில் அதன் கௌரவத்தைக் குலைக்கும் நோய்களில் ஒன்று தார்மீகச் சீர்கேடு.

பல உலக வல்லரசுகள் செல்வச் செழிப்பில் உறங்கிப் போய்விட்டிருக்கின்றன. அவை கண் விழித்துப் பார்த்த பொழுது அந்தச் செல்வ மெத்தை மறைந்து போய்விட்டிருக்கும். செல்வத்தைத் தேடி அலைவதே வாழ்க்கையின் லக்ஷியமாக ஆகிவிட்ட தற்காலத்தில் இக் கருத்து ஆதரவற்றதாக இருக்கலாம். ஆனால் உண்மையைச் சொல்லித்தான் ஆகவேண்டியிருக்கிறது. உரிய காலத்தில் விழித்துக் கொள்ளத் தவறிவிட்ட நாகரிகங்களின் சடலங்கள் சரித்திரப் பாதையில், இறைந்து கிடக்கின்றன. இவை செல்வ மிகுதியினால் அழிந்தனவேயன்றி வறுமையினால் அல்ல.

பழைய தேசீய யுத்தங்களின் ஸ்தானத்தை ஏற்கும் செல்வந்தர்களின் சொந்தப் போட்டிகளும் நாகரிகங்களின் கடைசி கட்டத்திற்கு அறிகுறியாக இருந்திருக்கின்றன. நாகரிகத்தின் அடிப்படைக்கு, சொந்தப் போட்டிகளைவிட அதிக முக்கியத்துவம் எவ்வளவு

காலம் கொடுக்கப்படுகிறதோ அவ்வளவு காலம் வரை யில் தான் இந்தக் கடைசி கட்டம் பெருமையுடன் நீடிக்கும்.

அரசியல், பொருளாதார அதிகாரங்கள், போட் டியோ மாறுதலுக்கான சாத்தியமோ இல்லாமல் அதிக காலம் நீடித்தாலும், அதைச் செலுத்தும் நாட்டின் வேரை அது அரித்து விடும். "அதிகாரம் கெடுக்கும்; பூரண அதிகாரம் அடியோடு கெடுத்து விடும்." ஆகை யால் அமெரிக்காவிடம் சர்வாதிகாரம் இருந்தால் அது அமெரிக்காவுக்கும் மேற்கத்தி நாகரிகத்திற்கும் விபரீ தமாகவே முடியும். ஏகபோக அதிகாரம் தனக்காக வும், தன்னைத் தாங்குபவர்களுக்காகவும் தலை தூக்க முயற்சிக்கும். இதனால்தான் ஒற்றைக் கட்சி ஆட்சி களை நாம் எதிர்த்து வந்திருக்கிறோம். பல நாடுகள் பொருளாதார ஏகபோக உரிமையைக் கட்டுப்படுத்து வதும் இதனால் தான்.

ஒன்றுபட்ட மேற்கத்தி உலகத்தில் போட்டியா னது ராணுவப் போராட்ட உருவைப் பெறமுடியாது. இதனால் அந்த உலகத்திற்குள்ளும் வெளியிலும் ஓரளவு போட்டியும், சக்திகளைச் சமநிலைப் படுத்துதலும் இருக் கக்கூடாது என்று அர்த்தமில்லை. மேற்கத்தி உலகத் தில் இயற்கையான "எதிர் எடை" யாக அமையும் பிரதேசம் ஐரோப்பா. அமெரிக்காவுக்கு ஐரோப்பா எதிர் எடையாக இருந்துகொண்டு செய்யவேண்டிய வேலைகளை நாம் ஆராயப் புகுமுன், அமெரிக்கா சம்பந் தப்பட்ட மற்றோர் அடிப்படையான விஷயத்தைக் கவனிக்க வேண்டும்.

மேற்கத்தி நாகரிகத்தின் மூலஸ்தானம் ஐரோப்பா; அதன் சல்லி வேர்கள் இன்னமும் ஐரோப்பாவில்தான் உள்ளன. அதன் ஆக்க சக்தியில் பெரும்பகுதி இன்ன மும் ஐரோப்பாவில்தான் இயங்குகிறது. அமெரிக்கா வில் பொருளாதார, அரசியல் சக்திகள் தீவிரப்பட்

டிருந்த போதிலும், இவற்றின் .ஐரோப்பிய வேரைத் துண்டிப்பது, ஈடு செய்ய முடியாத நஷ்டத்தை ஏற் படுத்தும். சிறிது காலம் வரை அமெரிக்கா சக்தி வாய்ந்த நாடாக ஜொலிக்கலாம். ஆனால் வேரை இழந்த நஷ்டத்திலிருந்து அது மீளமுடியாது. தான் பிறந்த இடத்திலிருந்து வந்த விண் வீழ்க் கொள்ளி ஒரு கண நேரம் ஜொலித்து மறைவதுபோல் இதுவும் மறைந்து விடும்.

# 17

## ஐரோப்பாவின் பங்கு

ஆனால் அந்தச் சுடர் எரிந்து கொண்டிருக்கிறதா அல்லது தன்னைத் தானே எரித்துக் கொண்டு விட் டதா ? இதை அறிய ஐரோப்பாவின் ஆதாயங்களையும் கணக்கிட்டு, மேற்கத்தி உலக ஐக்கியத்தில் அதன் பங்கை நிர்ணயிப்பது அவசியமாகும்.

பத்தாம் அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்ட ஆக்க சக்திகளைக் கவனித்தால், கலாசாரத் துறையில் ஐரோப்பா இன்னமும் கலைகளைச் சிருஷ்டிக்கும் நிலையி லேயே உள்ளது என்பது விளங்கும்.மேற்கு ஐரோப்பா மீண்டும் போர்க்களமாகி மீள முடியாதபடி அழிய வில்லையென்றால் கலாசாரத் துறையில், மேற்கத்தி நாகரிகத்தின் பிரதான ஊற்றுக் கண்ணாக அது இன் னும் வெகு காலம் வரை இருந்துவரும். ஆனால் ஐரோப்பா இதோடு திருப்தியடைய வேண்டியது தானா? இந்தக் கேள்விக்கு, "ஆம்" என்று எந்த ஐரோப்பியனும் பதிலளிக்கமாட்டான். ஸ்பெங்லர், அல்லது லெனின் அல்லது வேறு யாருடைய விதிக ளின்படியும் நாம் அழிய மறுக்கிறோம். உல்லாச யாத் திரிகர்கள் வந்து பார்க்கும் வெறும் பாழ் வெளியாக நம் நாடு ஆகிவிடுவதை நாம் விரும்பவில்லை. ஐரோப் பாவின் எதிர் காலத்திற்கு இதுவே பெரிய பலம்.

நாம்; அணைந்த எரிமலையாக இருக்கவேண்டு மென்பதற்கு நியாயமான காரணமில்லை. பல நூற்றுண்டுகளாக ஐரோப்பாவை உலகத்தின் முன்னணியில் நிற்கச் செய்த அரசியல், பொருளாதார சக்திகள் இன்னமும் இருக்கின்றன.

ஐரோப்பா தன் முக்கிய ஸ்தானத்தை வகித்து வருமா என்பது,ஐக்கியத்தின் அவசியத்திற் கேற்றபடி தன்னை மாற்றிக் கொள்ளுமா என்பதைப் பொறுத்திருக்கிறது. ஆச்சரியப்படத்தக்க முறையில் ஒரு புதிய சக்தி எழுந்து அந்த லட்சியத்தை நோக்கி ஐரோப்பாவெங்கும் வேலை செய்யத் தொடங்கி யிருக்கிறது. இதனுல் ஏற்கெனவே பல ஸ்தாபனங்கள் தோன்றி யுள்ளன. இவற்றிற்குப் பல இடையூறுகள் வருகின்றனவென்ருலும், இந்த ஐக்கிய சக்திகள், பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளில் எதிர்பாராத ஒரு புதிய போக்கைக் காட்டுகின்றன. ஐரோப்பா கண்டத்தை மற்ருெரு யுத்தத்திலிருந்து காப்பாற்றுவதற்குப் போதுமான காலத்தில் அதை ஒன்றுபடுத்தி அதன் பொருளாதார, ராணுவ பலங்களை மீண்டும் ஏற்படுத்துவது, மேற்படி சக்திகளுக்குக் கிடைக்கும் வெற்றியின் வேகத்தைப் பொறுத்திருக்கிறது. இது காலத்துடனும், பலவீனர்களைத் தாக்கும் பலாத்கார சக்தியுடனும், இதைப் பின்னுக்குத் தள்ளும் உள் சக்திகளுடனும்நடக்கும் பந்தயமாகும். இதில் ஐரோப்பா வெற்றி பெற்ருல் அதன் 30 கோடி மக்களும் வட அட்லாண்டிக் சமுதாயத்தில் மதிப்பு வாய்ந்த பங்குதாரர்களாவார்கள். இரு முகாம்களுக்குமிடையில் ஏற்படக் கூடிய ஒரு நடுநிலைமை சக்தி பற்றி நாம் யோசிக்கவில்லை. அமெரிக்கா தோன்றுவதற்கு முன்னுலிருந்தே ஐரோப்பிய நாகரிகத்தின் ஜீவ நாடியாக இருந்து வந்திருக்கும் கிறிஸ்தவ தர்மம், சுதந்தரம், ஜனநாயகம் ஆகியவற்றை ஐரோப்பா எப்பொழுதும் கடைப்

பிடிக்கும்.

ஆனால் ஐரோப்பா, அமெரிக்காவின் காலனியாக ஆகாமல் இருக்க வேண்டுமென்றால், அது தன் சொந்தக் கொள்கையையும், அரசியல், பொருளாதார அமைப்புக்களையும், வாழ்க்கை வழியையும் வகுத்துக் கொள்ள வேண்டும். அரசியல் ரீதியில் ஐரோப்பா ஐக்கியப்பட்டால்தான் இது சாத்தியம்.

இது ஐரோப்பாவுக்கு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு அமெரிக்காவுக்கும் முக்கியமாகும். இதனால் தான் அமெரிக்கா ஐரோப்பாவைப் பிரித்தாளும் சூழ்ச்சியை அனுஷ்டிக்காமல் ஐக்கியத்தை வற்புறுத்தி வந்திருக்கிறது. இது அமெரிக்காவின் மகத்தான விவேகத்திற்கு ஓர் அத்தாட்சி.

ஐக்கிய ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்குமிடையில் யுத்தம் மூளக் கூடுமென்ற அபாயம் இல்லை. ஆனால் எந்த சமூகத்திலும் "ஆரோக்கியமான" தலைமைப் பதவிக்கு "எதிர் எடை" இருப்பது அவசியமென்று ஏற்கெனவே கூறினேம். குறைகளை எடுத்துக் கூறி ஒத்துழைக்கவும், அவசியமானல் பொறுப்பை ஏற்கவும் அது தயாராக இருக்கவேண்டும். மேற்கத்தி உலகத்திற்குள்ளே பிரிட்டிஷ் காமன்வெல்த், தென் அமெரிக்கா ஆகியவையும், வெளியே ரஷியா, சீன, இந்தியா, முஸ்லிம் நாடுகள் ஆகியவையும் அரசியல், பொருளாதார எடை மையங்களாக விளங்குகின்றன. ஆனால் இயற்கையான மேற்கத்தி எதிர் எடையாக இன்னமும் ஐரோப்பாதான் இருந்து வருகிறது. அது முதலில் தனக்குள் போதிய அளவு ஒற்றுமை ஏற்படுத்திக் கொண்டால்தான் இந்தப் பணியை ஆற்ற அதனல் முடியும். இதற்கு, இன்று புறக்கணிக்கப்படக் கூடிய வேறு சில அம்சங்களை ஐரோப்பா கவனத்தில் கொள்வது அவசியம்.

உலகத்தின் மற்றப் பகுதிகளுடன் ஐரோப்பாவின்

நல்லுறவுக்கும், அதன் சொந்த பலத்திற்கும் ஐரோப்பியர் தங்கள் கலாசார உயர்வு மனப் பான்மையைக் கைவிடுவது அவசியம். அமெரிக்கா, தென் அமெரிக்கா, ஆசியா முதலிய நாடுகளின் கலாசாரத்தை விடத் தங்கள் கலாசாரம் உயர்ந்தது என்ற மனப் பான்மையை ஐரோப்பியர் விட வேண்டும். அமெரிக்கருக்கும் ஆசியாக்காரர்களுக்கும் வெறுப்பூட்டக் கூடிய விஷயம் இந்த உணர்ச்சிதான்.

தங்கள் பழைய பலத்தையும் பெருமையையும் இழந்து விட்டதால், இந்தக் கலாசார மாயை உணர்ச்சியில் ஐரோப்பியர் திருப்தி கொள்ளுகின்றனர் போலும்! மற்றப் பகுதிகள் ஐரோப்பாவுக்குச் சமமாகக் கலாசார சாதனைகளைச் சாதிக்க முடியாதென்றோ, ஏற்கெனவே சாதிக்கவில்லையென்றோ நினைப்பதற்கு ஆதாரமில்லை. புதிய தேசீய உணர்ச்சியுடன் கூடிய கிழக்கத்தி நாடுகளின் புராதன நாகரிகங்களும், வட, தென் அமெரிக்காக்களில் அதிகரித்து வரும் கலாசார சாதனைகளும் ஐரோப்பாவுக்குப் பெரிய சவாலாகும். நாகரிகங்களின் அழிவுக்குச் சுய திருப்தியைப்போல் உதவி செய்யக் கூடியது வேறொன்றுமில்லை. இந்த மனப்பான்மை அழிவின் சின்னம் மாத்திரமல்ல. அதன் ஆரம்பமுமாகும். ஐரோப்பியர்கள் இதை உணர்வது நல்லது.

ஐரோப்பாவின் கலாசார அகங்கார உணர்ச்சி பழைமையானது; அத்துடன் இரண்டாவது உலக யுத்தத்திற்குப்பின், தன்னைத் தான் காப்பாற்றிக் கொள்ள முடியவில்லையென்ற ஏக்கமும், வெளி உதவியை நம்பியிருப்பதால் ஏற்பட்டுள்ள உணர்ச்சியும் சேர்ந்து விட்டன. அந்தஸ்தை இழந்த ஒரு குடும்பம் தன் பழைய கௌரவத்தைப் பற்றி பெருமைப்பட்டுக் கொள்வது போன்றதுதான் இது. இந்த நிலையில் "எனக்கும் அதே சந்தர்ப்பங்கள் கிடைத்திருந்தால் இன்னும் பிரமாதப் படுத்தியிருப்

பேன்'' என்று சாக்கு சொல்வது மனித சுபாவம். ஆனால் பழைய நாடுகள் புதிய நிலைமைக் கேற்ப தங்கள் பழைய மதிப்புகளை மாற்றிக் கொண்டு மற்ற நாடுகளைவிட மீண்டும் மேம்பாடு அடைய முயன்றால் தான் அவற்றிற்கு விமோசனம்.

பொருள் உதவிக்குப் பிறர் கையை எதிர் பார்ப் பது போல் சுய முயற்சியை அழிக்கக் கூடிய விஷயம் வேறில்லை. சில நாடுகளில் வேரூன்றி யுள்ள இந்த மனப்பான்மை பீதியளிப்பதாய் உள்ளது. ''பட்ஜெட் டில் துண்டு விழுகிறதா? அதை அமெரிக்காவுக்கு அனுப்பு! ஆயுதப் பெருக்கமா? அதில் பெரும் பகுதியை அமெரிக்கா தான் தரவேண்டும்!'' என்பது போன்ற மனோபாவம் ஏற்பட்டிருக்கிறது.

சில நாடுகள் அமெரிக்காவிடம் எதிர் பார்ப்பதை விட அரைக் கோடி அல்லது ஒரு கோடி டாலர் குறை வாகக் கிடைத்தால்கூட அந்த நாடுகளுக்கு வரும் கோபம் சோக ஹாஸ்யமாகக் காட்சியளிக்கிறது. ஆனால் அமெரிக்க உலகாயதத்தை அதிகமாகக் கண் டிப்பவை இந்த நாடுகள்தான் என்றால் இது வேடிக் கையான விஷயமல்லவா? இடைக் காலத்தில் தற்காலி கமாக இத்தகைய உதவி நன்மை பயக்கலாம். ஆனால் அவசியமான அளவுக்குமேல் நீடித்தால் இந்த உதவியே பலவீனத்திற்குக் காரணமாகிவிடும். ஐரோப்பா முழுவதும் எவ்வளவுக் கெவ்வளவு தன் னைத் தானே காப்பாற்றிக் கொள்ளும் நிலையை அடை கிறதோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது.

ஐரோப்பாவில் பொருள்களைப் பெருத்த அளவில் உற்பத்தி செய்வது, உபயோகிப்பது, பொதுப் பாது காப்பு முதலியவை அவசியம்தான். ஆனால் ஐரோப் பிய நாகரிகத்தின் செல்வமாக விளங்கும் அதன் வேறு

பாடுகள் மறைந்துவிடக் கூடாது. ஐரோப்பாவின் அரசியல், பொருளாதார, ராணுவ ஐக்கியத்தினால் பிர தேச நலன்கள் பலவற்றைத் தியாகம் செய்ய நேரிட லாம். ஆனால் எல்லாவற்றையும் ஒரு மட்டப்படுத்த முயற்சிக்கக்கூடாது. ஐரோப்பிய வைரத்தின் பட் டைகளை மழுங்க வைத்துவிட்டால் பிறகு அது வெறும் கண்ணாடியாகிவிடும்.

மத்தியகால ஐரோப்பாவின் மதம்தான் மேற்கத்தி நாகரிகத்தின் தொட்டில் என்று கூறப்படுகிறது. இந்த நாகரிகத்தின் வேற்றுமையையும் சுதந்திர உணர்ச்சியையும்போல் இதன் கிறிஸ்தவப் பிறப்பும் இதிலிருந்து பிரிக்க முடியாததாகும். ஐரோப்பாவில் கிறிஸ்தவமார்க்கம் எப்பொழுதுமே பலமாக இருந்து வந்திருக்கிறது. "மனுஷ்யத்வம்" (ஹ்யூமானிஸம்), பகுத்தறிவு வாதம். மார்க்ஸிஸம் முதலியவை போட்டி சக்தியாக எழுந்த பொழுதுகூட இதன்பலம் குறையவில்லை. எந்த நாகரிகமும் தன்னுடைய அடிப்படையான மதம் செத்தபின் ஜீவித்திருந்த தில்லை. இது இன்றைய மேற்கத்தி நாகரிகத்திற்கும் பொருந்தும். இந்தச் செல்வத்தைப் பாதுகாப்பது கிறிஸ்தவச் செல்வாக்குடன் விளங்கும் ஐரோப்பா வின் பொறுப்பாகும். இதை "கலாசார விளக்கக் குறிப்பு" (Notes towards the Definition of Culture) என்ற நூலில் ஸ்ரீ டி. எஸ். எலியெட் அற்புதமாக விளக்கியிருக்கிறார். "கிறிஸ்தவ மதம் அழிந்தால் நம் கலாசாரமே அழிந்துவிடும். பிறகு புதிய கலா சாரத்தைச் சிருஷ்டிக்கத் தொடங்கவேண்டும். புதிய கலாசாரம் தயாராக நமக்குக் கிடைத்துவிடாது. புதிய கலாசாரச் சட்டையைத் தைத்துக்கொள்வதற்குப் புல் வளர்த்து அது ஆட்டுக்குத் தீனியாகி, அந்த ஆட்டி னிடமிருந்து ரோமம் எடுத்துக் கம்பளி செய்யும்வரை

காத்திருக்கவேண்டும். இதற்கு முன் பல நூற்றுண்டுகளை நாம் காட்டுமிராண்டித்தனத்தில் கழிக்க வேண்டியிருக்கும். நாமோ, நம்முடைய கொள்ளுப் பேரன், எள்ளுப்பேரன்களோ இந்தப் புதியக் கலாசாரத்தைக்காண வாழ்ந்திருக்க மாட்டோம். ஒரு வேளை வாழ்ந்திருந்தாலும் நம்மில் ஒருவர்கூட அதில் சந்தோஷமாக இருக்கமாட்டோம்" என்கிருர் ஸ்ரீ எலியெட்.

ஐரோப்பா தன் அடிப்படை மதிப்புகளுக்குப் புத்துயிர் அளித்து, இருபதாம் நூற்றுண்டின் நெருக்கடியைச் சமாளித்துவிட்டால், உலகத்தின் முன்னணி சக்திகளில் ஒன்றுக அது ஏன் இருக்கக் கூடாது? ஆத்மீக பொருளாதார, அரசியல் துறைகளில் ஐரோப்பா அளிக்கக் கூடியவற்றைச் சேர்த்துக் கணக்கிட்டால் நவீன ரர்க்ஷஸ நாடுகள் அளிக்கக்கூடியவற்றைவிட இந்தப் பழைய கண்டம் அளிக்கும் விஷயங்கள் அதிகமென்பது விளங்கும். ஆனுல் இதற்கு ஐரோப்பிய லட்சியமும் ஐரோப்பிய தலைமையும் தேவை. ஒவ்வொரு நாகரிகமும் தன் கடைசி கட்டத்தில்கூட மகத்தான உச்ச நிலையை அடைய முடியும். ஆனுல் மேற்கத்தி நாகரிகம் இன்னும் அந்தக் கடைசி கட்டத்தை அடையவில்லை.

மேற்கத்தி நாகரிகத்திற்குத் தற்சமயம் ஏற்பட்டுள்ள நெருக்கடியைச் சமாளிக்க ஐரோப்பாவிடமும் அமெரிக்காவிடமும் போதிய ஆத்ம சக்தி இருக்கிறது என்று நம்பிக்கைக் கொள்ள இடம் உண்டு. இதையே இந்த நூல் நிரூபிக்க முயன்றது. தற்போதைய நெருக்கடியை வென்று உன்னத நிலையை அடைவதற்குவேண்டிய ஆதார சக்தி இதனிடம் உள்ளது. இயந்திர சக்தியும் பழைய உலகமும் புது உலகமும் உறுதியுடன் ஒத்துழைத்தால் மத்திய சகாப்த ஓவியர்

களின் தூரிகையை ஓட்டிய சக்தியும், பித்ஹோவனின் சாஹித்தியங்களுக்கு உணர்ச்சி யூட்டிய சக்தியும், மௌன வில்லியம், ஜார்ஜ் வாஷிங்டன் முதலியோரை தோற்றுவித்த சக்தியும் மீண்டும் பலனளிக்கும்படிச் செய்யலாம்.

இதைச் செய்ய முடியும்; இது நம்மையே பொறுத் திருக்கிறது.






முற்றும்.

